

## உங்கள் டிராயிங் ரூமுக்கு புதுக்கவர்ச்சி

வீட்டு அலங்காரத்திற்கான பாம்பே டையிங் துணிகளைக்கொண்டு இப்பொழுது நீங்கள் உங்கள் வரவேற்பு அறையை வசீகரமாக்க முடியும். உங்கள் தேவைக்கேற்றபடி விதவிதமான நிறங்களிலும் பிரிண்ட்களிலும் திரைச்சீலைகளுக்கான துணிகள், சோபா, நாற்காலி மெத்தைகளுக்கான துணிகள், திண்டுகள் உறைகள் முதலியவற்றிற்கான துணிகள், மேஜை விரிப்பு முதலியவற்றிற்கான துணிகள் முதலியவை கிடைக்கின்றன; இவை நேர்த்தியானவை,நீடித்து உழைப்பவை. பாம்பே டையிங் துணிகளை வாங்கி நீங்கள் கொடுக்கும் பணத்துக்கு முழு மதிப்பையும் பெறுங்கள்!

நாடெங்குமுள்ள எல்லா சில்லறை ஜவுளிக்கடைகளிலும்,
கீழ்க்கண்டவர்களிடமும் கிடைக்கும்;
தென்னிந்தியாவிற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்
செல்லாராம்ஸ்
மதராஸ் & ஹைதராபாத்

# பாம்பே டையிங்

தி பாம்பே டையிங் & மானுபாக்சரிங் கோ. லிட்.

JWT-BD-1250



பட விளக்கம் 79 ம் பக்கம் பார்க்க...

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, ஆனி 30௳ ★ ஜூலை 14௳ 1963


| | | |
|---|---|---|
| மூடப் பிடிவாதம் | ... | ... 3 |
| திருவண்ணாமலைத் தேர்தல் | ... | ... 4 |
| முதல் மூவர் | ராஜாஜி-சோமு | ... 9 |
| சந்திரனே சாட்சி | கௌசிகன்-வினு | ... 10 |
| அறிவுக்கனலே, அருட்புனலே! | ரா. கணபதி | ... 14 |
| கலை வளர்க்கும் கோயில்கள் | ... | ... 22 |
| மிடுக்கும் துடுக்கும் | வெ. சாமிநாத சர்மா | ... 29 |
| லடாக் | ... | ... 34 |
| பொன் விலங்கு | மணிவண்ணன் | ... 38 |
| ஆட்சிமொழி—கருத்தரங்கு | ... | ... 51 |
| எழுத்தும் தொழிலும் | வியாரீ | ... 57 |
| ம. பொ. சி. யும் ஆட்சிமொழியும் | ... | ... 63 |
| பாக்கியசாலி | எஸ். ரங்கநாயகி | ... 67 |
| நெருஞ்சி முள் | ஆர்வி | ... 70 |
| பத்தினிக்கோட்டம் | ஜெகசிற்பியன் | ... 90 |


புகைபிடிக்கும் இங்கிதம்
தீப் பொறியின் திக்குவிஜயம்!
சிகரெட்டைப் பற்றவைக்கையில்
—அதுவும் வெளியிலோ அல்லது
காற்றடிக்கையிலோ—எவர் மீதும்
குறிவைப்பதுபோலத் தீக்குச்சி
யைக் கிழிப்பது சரியல்ல. தவறிப்
போய் தீப்பொறி தெறிக்குமேயா
னால் பாவம், அருகிலிருக்கும்
பெண்மணியின் ஆடைக்கு வந்தது
ஆபத்து.
உயரிய பண்போடு உபயோகிப்பதற்
கும் உதவுவதற்கும் உகந்தது
பனாமா
Panama
20
CIGARETTES
இழுக்க
இழுக்க
இன்பம்—
இறுதிவரை
விசேஷக் கலவை செய்வோர்!
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.
GT. 611 TAM
Graces' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 50

# மூடப் பிடிவாதம்

"கூட்டு சேராக் கொள்கை, சோஷலிஸம், திட்டங்கள் இவற்றை ஒரு நாளும் கைவிடமாட்டோம்" என்று கல்கத்தாவில் பிரதமர் நேரு அவர்கள் முழக்கியிருக்கிறார். மக்கள் இனி காங்கிரஸைக் கைவிடவேண்டியதுதான் ஒரே வழி. சமீபத்திய உபதேர்தல்களின் விளைவாகக் காங்கிரஸின் கண் திறந்திருந்தால், நாட்டு நலனில் அக்கறையில்லாவிடினும் கட்சி நலனைக் கருதியாவது இந்தப் பொருளற்ற மந்திரங்களை ஆட்சியாளர்கள் கைவிட்டிருப்பார்கள். ஆனால் நேருஜியின் வீம்புப் பிடிவாதம் இன்னமும் குன்றவில்லை. இதுவும் ஒரு நல்லதற்கே என்றுதான் தோன்றுகிறது. தொடர்ந்து இப்படியே பிடிவாத முறையில் சென்றால் மக்கள் நிச்சயமாக அடுத்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் பட்டாவுக்குச் சீட்டுக் கிழிப்பதே வழி என்று உணர்வார்கள்.

தற்காப்புச் சக்தி குறைந்த நாடு தனிப்பட்டு நிற்பது அபாயம் என்பதைச் சீனா நம்மீது ஆக்கிரமிப்பு நடத்தியது முதற்கொண்டு மக்கள் நன்கு புரிந்து கொண்டுவிட்டார்கள். மேல் நாடுகளுடன் உடன்படிக்கை செய்து கொண்டிருக்கும் எந்த நாட்டையாவது தீண்டச் சீனாவுக்குத் தைரியம் இருக்கிறதா? நேருஜி தமது பிரமையைக் கட்டிக் காக்க முற்பட்டாலும் மக்கள் இனி கூட்டு சேராக் கொள்கைக்கு ஆதரவு தரமாட்டார்கள்.

சோஷலிஸம் என்பது ஏழைகளுக்கு எந்த நன்மையும் செய்யாமல் ஆள்கிறவர்களுக்கு மட்டுமே ஆக்கம் அளித்திருக்கிறது என்பதையும் நாடு புரிந்துகொண்டு விட்டது. 'சோஷலிஸம் என்பது தனி முதலாளிகளை அழித்துச் சர்க்கார் முதலாளித்துவத்தை நிலை நாட்டுவதேயாகும். சர்க்காரைக் கொண்டு தனி முதலாளிகளின் தவற்றைச் சரிசெய்ய முடிந்தது. ஆனால் சுய ஈடுபாடு சற்றும் அற்ற ஆட்சியாளர்களின் முதலாளித்துவத்தால் ஏற்படும் தீங்கினைத் திருத்த எந்த உபாயமும் இல்லை' என்பதை மக்கள் கடந்த காலத்தில் நன்கு அனுபவித்துவிட்டார்கள். வரிப் பணத்திலிருந்து தொழிலுக்கு முதல் தேடுவதே சோஷலிஸம். வரிகள் உயர்வதில் வியப்பில்லை.

திட்டங்களின் பலனைப் பற்றிப் பிரதமர் எவ்வளவுதான் சொன்னாலும் மக்கள் இனி மயங்க மாட்டார்கள். இந்தத் திட்டங்கள்தான் மக்களைச் சக்கையாகப் பிழிந்தெடுக்கும் வரிமுறைகளுக்குக் காரணம் என்பதில் அவர்களுக்குச் சந்தேகமில்லை. இச்சமயத்தில் வரிவிகிதம் பற்றி ஆட்சியாளர்கள் கற்பிக்கும் ஒரு மாயத்தைத் தகர்க்க வேண்டியது அவசியமாகிறது. 'இந்தியாவின் தேசிய வருமானம் சுமார் 15,000 கோடி ரூபாய். நாட்டின் மொத்த வரிகளிலிருந்து சுமார் 2,000 கோடி ரூபாய் திரட்டப்படுகிறது. அதாவது தேசிய வருமானத்தில் ஏழில் ஒரு பங்குதான் நமது வரி விகிதம். அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் இந்த விகிதம் இன்னும் எவ்வளவோ அதிகமாகும்' என்று ஆளும் கட்சித் தலைவர்கள் கூறுகிறார்கள். ஆனால் இவர்கள் அந்நாட்டு மக்களின் சராசரி வருமானத்தை மறந்துவிடுகிறார்கள். அமெரிக்காவில் மக்களின் சராசரி வருமானம் சுமார் 10,000 ரூபாய். இங்கிலாந்தில் சுமார் 5,000 ரூபாய். இந்தியாவிலோ இந்த வருமானம் ரூபாய் 327தான். முன்பொருமுறை ராஜாஜி எழுதியதுபோல் ராஜபவனத்து விருந்தில் பாதி உணவு வகைகளை எடுத்துவிட்டாலும் பாதகமில்லை. ஆனால் ஏழை உண்ணும் அன்னத்தில் ஒரு பிடியைக் குறைப்பதுகூட அநியாயமல்லவா?

ஆனால் பிரதமரின் மூடிய கண்களுக்கு நாட்டு நிலைமை தென்படவில்லை. மூடப் பிடிவாதத்தை ஸ்திர புத்தி என்பதாகக் கற்பனை செய்துகொண்டு அவர், 'முன்னேற்றம், முன்னேற்றம்' என்று ஜபம் செய்கிறார்.

# திருவண்ணாமலைத் தேர்தல்

உபதேர்தல்களில் காங்கிரஸ் ஏன் தோல்வியடைந்தது என்பதைப் பற்றிக் காங்கிரஸ் கட்சி விசாரணை செய்யப் போகிறதாம். கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா? தோல்விக்குக் காரணம் என்ன என்பதை மக்கள் நன்கு அறிவார்கள். மொரார்ஜி தேசாயின் கட்டாயச் சேமிப்புத் திட்டமும், தங்கக் கட்டுப்பாடு உத்தரவுகளும், தாங்க முடியாத வரி விதிகங்களும் விலைவாசி, களை உயரப் பறக்கச் செய்யும் காங்கிரஸ் கட்சியின் மற்றத் தவறான கொள்கைகளும்தான் அதன் தோல்விக்குக் காரணம். இதை அம்ரோஹா, பருக்காபாத், ராஜ்கோட் உபதேர்தல்கள் நிரூபித்து விட்டன. அதையே திருவண்ணாமலை வாக்காளர்களும் நிரூபித்துள்ளார்கள். இப்படி நேரிடுமென்று மற்றக் காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்தாலும், உணரா விட்டாலும் முதலிலேயே சென்னை முதலமைச்சர் திரு காமராஜ் நன்றாக உணர்ந்து கொண்டு, 'நெருக்கடி காலத்தில் உபதேர்தலே வேண்டாம்' என்றுகூடச் சொன்னாராம். ஆனால் தேர்தல் நடத்த மேலே நிச்சயித்தபின், தமது முழு பலத்தையும் சாதுர்யத்தையும் இத்தொகுதியில் பிரயோகம் செய்தார். தமது செல்வாக்கு, கட்சி பலம், பண பலம், மோட்டார், ஜீப் பலம், சக மந்திரிகளின் பக்கபலம், அதிகாரத்தின் பலம் முதலிய எல்லாமே பூரணமாக உபயோகப் படுத்தப்பட்டன. இவை போதாது என்று காங்கிரசுக்கு எப்போதுமே துணை நிற்கும் கம்யூனிஸ்டுக் கட்சியும், திரு காமராஜரின் காரியம் யாவினும் கை கொடுக்கும் பெரியார் ஈ. வெ. ரா.வும், அவரது மகனார் திரு ஈ. வி. கே. சம்பத்தும் மிகத் தீவிரப் பிரசாரம் செய்தனர். தி. மு. க.வினருக்கு மக்களைப் பயமுறுத்துவதற்கும், பசப்பு வார்த்தைகள் சொல்லி ஆசை காட்டுவதற்கும் எந்தவித பலமும் இருக்கவில்லை. பிரசாரமும் காங்கிரஸ் கட்சிக் கொள்கைகளைக் கண்டிப்பதைத்தான் மையமாகக் கொண்டிருந்தன. இந்தச் சூழ்நிலையில் என்பது சத வாக்காளர்கள் வோட்டுப் பதிவு செய்து காங்கிரஸ் தோல்வியடையச் செய்தனர். மக்கள் மனத்தில் இதுகாறும் இருந்துவந்த நேரு-காமராஜ் மோகம் மறைய ஆரம்பித்து விட்டது என்பதை உணர்த்தி வைத்த திருவண்ணாமலை வாக்காளர்களுக்குத் தமிழகம் நன்றி கூறுகிறது.



## ஊர் வம்பு




# பதினேழாவது மாற்றம்

**ப**தினைந்தாண்டுகளில் நமது அரசியல் சட்டம் பதினேழுமுறை 'திருத்தப்'பட்டிருக்கிறது என்றால், அது மக்களின் ஆதார உரிமைகளைப் பாதுகாக்கும் புனிதமான சாஸனமா, அல்லது ஒரு வியாபாரச் சங்கத்தின் நடைமுறை விதிகளா என்று கேட்கத்தோன்றுகிறது.

ஆதார உரிமைகள் (Fundamental Rights) எக்காலத்திலுமே அசையாமல் இருப்பவை. இல்லாவிட்டால், ஆதார உரிமை என்ற பெயர் அவற்றுக்குப் பொருந்தாது. இவற்றைக் கிள்ளுக்கீரையாகக் கருதி வருகிறது காங்கிரஸ் ஆட்சி.

சென்ற மே மாத இறுதியில் மக்கள் சபையில் அவசரம் அவசரமாகக் கொண்டு வரப்பட்டது பதினேழாவது திருத்தம். இதுவும் இதற்கு முன் செய்யப்பட்ட திருத்தங்களைப் போலவே, அரசாங்கத்தின் உத்தரவுகள் சட்ட விரோதமானவை என்று உயர்நீதி மன்றம் மண்டையில் அடித்ததின் பேரில் மூலச் சட்டத்தைத் தங்களின் அராஜக உத்தரவுக்கு இசையத் திருத்த முற்பட்டிருக்கும் செயலே. இப்போது மேற்கொள்ளப்படும் திருத்தத்தின்படி ''ரயத்வாரி'' பட்டாதார்களின் சொத்துரிமை பாதிக்கப்படுகிறது.

ஜமீன் ஒழிப்பு, நிலச் சீர்திருத்தங்கள், நில உச்சவரம்பு சம்பந்தமாக இயற்றப்பட்டுள்ள சட்டங்களில் சாதாரணமாக 'எஸ்டேட்' நிலங்களுக்கும், 'ரயத்வாரி' நிலங்களுக்கும் வேற்றுமை காட்டப் பட்டுள்ளது. 'எஸ்டேட்' உரிமை என்பது சர்க்கார் வசூலிக்கும் வரியைத் தனிப்பட்டவர் வசூலிக்கக் கொடுக்

கப்பட்ட உரிமையாகும். ஆனபடியால் அந்த உரிமையைப் பெற்ற ஜமீன்தார் முதலியவர்களுக்கு நில உரிமை இருப்பதாகக் கருதப்படவில்லை. அவர்களின் சொத்தைச் சர்க்கார் ஆர்ஜிதம் செய்ய அரசியல் சாஸனம் இடமளித்தது. ஆனால் ரயத்வாரி பட்டாதார்கள், பூரண சுதந்திரம் படைத்த நிலச் சொந்தக்காரர்கள். சர்க்காருக்கு கிஸ்தி செலுத்தி விட்டால், அவர்களுடைய சொத்துக்கு எந்தவித விலங்கமும் சர்க்காரிடமிருந்து ஏற்படாது. இவ்வளவு காலமாக இந்தப் பாகுபாட்டை மத்திய சர்க்காரும், ராஜ்ய அரசாங்கங்களும் அங்கீகரித்துச்செயலாற்றிவந்தன.

பதினேழாவது திருத்தத்தின் மூலம் இந்த வேற்றுமை அகற்றப்படுகிறது! 'எஸ்டேட்' நிலங்களுக்கு லட்சணம் கூறுகையில் 'ரயத்வாரி' முறையில் வைத்திருக்கும் எல்லா நிலங்களும், ''விவசாயத்துக்கோ, அதற்குத் துணையாகவோ, தரிசுநிலமாகாவோ மேய்ச்சல் பூமியாகவோ, குடியிருப்பு நிலமாகவோ, பண்ணையார்களுக்காகவோ வைத்திருக்கும் எல்லா நிலங்களும் 'எஸ்டேட்' என்ற வாசகத்தில் உள் அடக்கம்'' என்று புதுத் திருத்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கழுதைகளைப் பற்றிச் சட்டம் செய்து, குதிரைகளும் ஒருவித கழுதைகளே என்று திருத்தச் சட்டம் கொண்டுவரும் பரிகாசச் செயலே இது. இவ்வாறு செய்வதால் நிலமுள்ள விவசாயி மக்களில் முக்கால்வாசிப் பேர்களுக்கு முக்கியமான ஒரு சொத்துரிமை அவர்களுக்குத் தெரியாமலே, அவர்களுடைய ஒப்புதலின்றியே பறி போகிறது. எந்த நிலத்தை வேண்டுமானாலும் கூட்டுப் பண்ணையில் 'பொது நலனு'க்காகச் சேர்த்தாக வேண்டும் என்று நிலச் சொந்தக்காரர்களை நிர்ப்பந்திக்க இத் திருத்தம் இடமளிக்கிறது. அவ்வாறு எடுத்துக் கொள்ளப்படும் நிலங்களுக்கு நஷ்ட ஈடும் ''மார்க்கெட் மதிப்புப்படி'' கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. நஷ்ட ஈடு விஷயமே நீதி மன்றங்களின் ஆணையிலிருந்து அகற்றப்பட்டுச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் இஷ்டத்துக்கு விடப்பட்டிருக்கிறது. இந்த விளைவுகளை யெல்லாம் திருநெல்வேலி ரயத்துவாரி பட்டாதார்கள் சங்கம் மிக அழுத்தமாக எடுத்துக் காட்டியிருக்கிறது.

இந்தத் திருத்தம் நிலச்சுவான்தார்களுக்கு ஒரு பலமான அடி. அவர்களுடைய சுயேச்சை நிலைமையைக் குலைக்கிறது. சுதந்திர விவசாய நாடு எனப் பல நூற்றாண்டுகளாக விளங்கி வரும் நமது நாட்டில் முக்கால் பங்கினரான விவசாய மக்களின் நலத்தை முன்னிட்டு இத்திருத்தத்தைக் கைவிடுதல் அவசியம்.

# கலியுக வரதன் காப்பாராக!

'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்று ஆண்டவனைப் போற்றுவது நமது மரபு. உண்மையிலேயே எந்நாட்டவர்க்கும் இறைவனாக, அகில இந்திய மக்களையும், அந்நிய தேசத்தினரையும்கூட ஈர்க்கும் திருமூர்த்தி திருப்பதியில் எழுந்தருளியுள்ள வேங்கடேசப் பெருமான். தொலை தூரங்களிலிருந்தெல்லாம் அடியார்கள் திருப்பதிக்கு வந்து, செல்வ நாயகியின் நாயகனாகிய ஸ்ரீநிவாஸனுக்குத் திரவியத்தால் கைங்கரியம் செய்து வருகிறார்கள். இப்படிக் கிடைக்கும் ஏராளமான நிதியத்தைத் திருப்பதி — திருமலை தேவஸ்தானத்தினர் நல்லமுறையில் நிர்வகித்து, பாரத தர்மத்துக்கு உகந்த வகையில் நாடு முழுவதும் பல பணிகளைப் புரிந்து வருகின்றனர். இந்த அமைப்பை மாற்ற ஆந்திர அரசாங்கம் முற்பட்டிருப்பது துர்ப்பாக்கியமாகும். திருப்பதி ஆலயத்தின் வருமானம் ஆந்திர ராஜ்யத்துக்குள்ளேயேதான் பயனுக்கப்பட வேண்டும் என ஆந்திர அரசாங்கம் உத்தரவிட்டுள்ளது.

திருப்பதி ஆலயத்துக்கு வெளி ராஜ்யங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் தான் அதிகம். இவ்வாறிருக்க அவற்றுக்கு அந்த நிதியைப் பயன்படுத்தக் கூடாது என்று விதிப்பது நியாயமல்ல. நிர்வாகஸ்தர்கள் நிதியை முறைப்படி செலவழிக்குமாறு கண்காணிப்பது மட்டுமே அரசாங்கத்தின் பொறுப்பாகுமே அன்றி, அதனை எந்தெந்த விதத்தில் விநியோகிக்கலாம் என்று உத்தரவிடுவது சரியல்ல. தேசிய ஒற்றுமையைப் பற்றி அரசியல்வாதிகள் ஓயாமல் பேசும் இன்றைக்கும் அரசியலால் மக்கள் ஒன்றுபடுவதைவிட நமது புராதன க்ஷேத்திரங்கள் மூலம்தான் இணங்கி ஒன்றுபடுகிறார்கள். அவ்வாறு பாரத மக்களின் எல்லாப்பகுதியினரையும் ஆகர்ஷிக்கும் திருப்பதி ஆலயத்தில் பிரதேச மனப்பான்மையைப் புக விட்டிருப்பது மிகவும் வருந்தத் தக்கதாகும். இதனால் மற்ற ராஜ்யத்தவர்களுக்கு மன வேற்றுமை உண்டாகி, திருப்பதியின் தொன்மை வாய்ந்த புகழுக்கும் ஊறு நேரக் கூடும். இவ்வாறு நேராமல் பெருமான் காப்பாராக!

# போகிற போக்கில்...!

லடாக் முனையில் ஏற்பட்டிருக்கும் சீனத் துருப்புகள் நடமாட்டம் தில்லிக்குப் பெரும் கவலையை ஏற்படுத்தியிருப்பதாகச் செய்திகள் வருகின்றன. இந்தச் செய்திகளைக் காணும் நாமும் பெரும் கவலையில் மூழ்குகிறோம். சீனர்கள் திரும்பவும் தாக்குதலைத் தொடங்குவார்களோ என்ற அச்சமும் ஏற்படுகிறது. அப்படித் தாக்குதல் ஏற்பட்டால், அதைச் சமாளிக்கும் நமது நிலைமை, முன்னைவிட அபிவிருத்தி அடைந்திருக்கிறதா என்ற கேள்விகள் பிறக்கின்றன. இக்கேள்விகளுக்கு அரசாங்கம்தான் பதில் தர வேண்டும்.

இப்படி நிலைமை இருக்கும் போது, சில செய்திகள் அடிக்கடி வந்தபடி இருக்கின்றன. அதாவது ஆவடியில் சிறு ரக டாங்கிகள் தயாராவதாகவும் தென்னாட்டில் ஓர் ஊரில் துப்பாக்கிகளை உற்பத்தியாக்கத் திட்டம் போடப்பட்டிருப்பதாகவும் செய்திகளை அரசாங்கம் வெளியிடுகிறது. இந்த மாதிரி செய்திகளை வெளியிட வேண்டிய அவசியமென்ன என்பதுதான் புரியவில்லை. நேபா முனைக்கோ, லடாக் முனைக்கோ டாங்கிகள் தேவைப்படுமெனத் தெரியவில்லை. ஏனெனில், 18,000 அடி உயரத்தில் டாங்கிகள் ஓடியதாக உலகம் அறியவில்லை. அதே போலத்தான் துப்பாக்கிகள் உற்பத்திக்குத் திட்டம் தயாராகிவிட்டதென்பதும், அதுவும் இந்த ஊரில் ஏற்பாடாகியிருப்பது என்பதும் அவ்வளவு பிரமாதமான செய்திகள் அல்ல. ஏனென்றால், எந்த ஊரில் எந்த இடத்தில் இருந்து தயாராகின்றன என்று எந்த பொதுஜனமும்கேட்கவில்லை. அரசாங்கம் இதை உணராது அடிக்கடி ஊர்ப் பெயருடன் இத்தகைய செய்திகளை வெளியிடுவது இந்த நேரத்தில் சரிதானா என்று யோசிக்க வேண்டும். ஏனெனில் யுத்த காலத்தில் ஊர் விவரங்களையெல்லாம் சொல்லக் கூடாது என்பது மரபு. ராணுவ ரகசியங்கள் இவை என்று கூறுவார்கள். இப்படித்தான் மேல் நாடுகளில் நடைபெறுகிறது.




கை நடுங்காமல் வாங்க வேண்டுமோ?

மேல் நாடு பற்றிக் கரைத்துக் குடித்தவர்கள் தாங்கள்தாம் எனக் கூறும் காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கு இந்தச் சாதாரண உண்மை கூடப் புரியாதிருப்பது விந்தையாயிருக்கிறது.

* * *

திடீரென மின்சார வெட்டு என்று வருவதில் எத்தனை தொல்லை பாருங்கள்.

வேலூர் பெரிய ஆஸ்பத்திரியில் ஒரு டாக்டர் ஒரு நோயாளியை எக்ஸ்ரே எடுத்துப் பார்க்க அழைத்துச் சென்று அதற்கான ஆயத்தங்களையெல்லாம் செய்து முடித்தாராம். மின்சார விசையை அமுக்குகிற நேரத்தில் திடீரென மின்சாரவெட்டு ஏற்பட்டு விட்டதாம். அந்த நோயாளியும் டாக்டரும் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்து என்ன செய்வதெனத் தெரியாது நின்றிருக்கிறார்கள்.

டாக்டருக்கு ஏற்பட்ட இந்த அநுபவம் ஜில்லா கலெக்டருக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். ஏனெனில், அவரும் 'திடீரென, முன்னறிவிப்பு எதுவுமில்லாமல் மின்சார வெட்டு வந்தது கண்டு நானும் அதிசயித்தேன்' எனக் கூறியிருக்கிறார்.

மின்சார வெட்டுக்கு என்ன காரணமாக இருந்தாலும், ஆஸ்பத்திரி போன்ற அத்தியாவசிய இடங்களுக்கு இத்தகைய வெட்டு இருக்கக் கூடாது. நோயாளிகளுக்கு அளிக்கும் பலவித சிகிச்சைகளுக்கு இன்று மின்சாரம் எவ்வளவோ தேவைப்படுகிறது. இந்தத் தேவையை அரசாங்கம் தாராளமாக வழங்க வேண்டும்.

* * *

சீனாவுக்கும் ரஷ்யாவுக்குமிடையே வளர்ந்து வரும் அபிப்பிராய பேதத்தைக் கண்டு நம் நாட்டில் சிலர் 'ரொம்ப' சந்தோஷப்படுகிறார்கள். இப்படிச் சந்தோஷப்படுகிறவர்கள், இதே மாதிரியான சந்தோஷம் அவர்களுக்கு நம்மைப் பற்றி இருக்கிறது என்பதை மறந்து விடுகிறார்கள். ஓயாத பகையாகவும், தீராத பிரச்னையாகவும் இருக்கும் இந்தியா — பாகிஸ்தான் தகராறைக் கண்டு ரஷ்யாவிலும் சீனாவிலும் மட்டில்லா மகிழ்ச்சி இருக்கிறது. இந்த உண்மையை நாம் உணர்ந்து கொண்டால் ரஷ்ய — சீன விவகாரத்தில் உள்ள தகராறைக் கண்டு நமக்குச் சந்தோஷமே ஏற்படாது.

பாகிஸ்தான் பிரச்னை தீருவதில்தான் நாம் முழு கவனமும் செலுத்த வேண்டும். இதில் அக்கறை செலுத்தாது சீன—ரஷ்ய தகராறைக் கவனிப்பதில் அக்கறை செலுத்தினால் அது மோசம் போன கதையாகத்தான் முடியும்.

என்னதான் இருந்தாலும் இந்த இரு நாடுகளும் ஒரே கொள்கையுடைய நாடுகள். அவர்களுக்கு உள்ள தகராறு எல்லாம் பொது எதிரியை எப்படி ஒழிப்பது என்பதில்தான். கோழியைத் தலையிலிருந்து தீர்ப்பதா அல்லது வால்பக்கமிருந்து வேலையைத் தொடங்குவதா என்பதில்தான் தகராறு என்று ராஜாஜி ஒரு சமயம் குறிப்பிட்டதுதான் உண்மை. இந்த அறிய வேண்டியவர்கள், அறியாதிருப்பது நமது துர்ப்பாக்கியம். — சிட்டுக் குருவி




## 14

தரிசன அனுபவத்தைப் பாடி அந்த இன்பத்தை நமக்கு உணர்த்துகிறார் ஆழ்வார்.

கண்டேன் திருமேனி
யான்கனவில்

அவனுடைய திருமேனியை எனது கனவில் தரிசித்தேன். பக்தி பரவசத்தில் உண்டான யோக நிலையில் கண்டேன் என்கிறார்.

ஆங்கு அவன்கைக்
கண்டேன் கனலும்
சுடர் ஆழி

[கனலும் - கவாலை போன்று கொழுந்து விட்டு எரிகின்ற. சுடர் ஆழி—ஒளி வீசும் சக்கரம்.]

திருமாலின் கையிலே ஒளிமயமான சக்கரம் கண்டேன்.

—கண்டேன்
உறுநோய் வினைஇரண்டும்
ஒட்டுவித்துப் பின்னும்
மறுநோய் செறுவான்
வலி.

[உறு நோய்—ஆத்மாவோடு கூடிய நோயான. வினை இரண்டும்—புண்ணிய பாவ வினைகளை. ஒட்டுவித்து—துரத்தி விரட்டி. பின்னும்—மீண்டும். மறுநோய்—மறுபடியும் வந்து பற்றக் கூடிய வாசனையையும். செறுவான் வலி—போக்கடிக்கிற எம்பெருமானின் திறத்தை.]

ஆத்மாவோடு ஒட்டி வந்துள்ள பழைய வினைகளை நீக்குவதோடு, இனியும் வினை அணுகாமல் போக்கடிக்கிற அந்த மூர்த்தியின் தரிசனத்தைக் கண்டேன் என்கிறார் ஆழ்வார். அந்தத் தரிசனம் சாதாரணப் பகற் காலத்துக்கு அப்பாற்பட்ட தரிசனம் ஆனபடியால், அதைக் கனவு என்று சொல்லி மகிழ்ச்சி பரவசமாகிறார்.

கண்டேன் திருமேனி
யான் கனவில்: ஆங்கு
அவன்கைக்
கண்டேன் கனலும்
சுடர்ஆழி—கண்டேன்
உறுநோய் வினைஇரண்டும்
ஒட்டுவித்துப் பின்னும்
மறுநோய் செறுவான்
வலி!

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

23

**த**ந்திர சாஸ்திரப்படி சாதனை புரிந்த ராமகிருஷ்ணர் அந்தச் சாதனைகளின் விளைவாக, உருப் ''படைத்த ஸகுணப் பிரம்ம வடிவைக் **காண்பதோடு**, உருவற்ற நிர்குணப் பிரம்மத்தை **அநுபவிக்கவும்** முடியும் என்று உணர்ந்தார். இல்லாவிடில் அத்வைத ஸ்தாபகராகிய ஆதி சங்கரர் பிரபஞ்சஸார தந்திரம் என்ற நூலை அளித்திருப்பாரா? பரம்பொருளும் ஜீவனும் ஒன்று என்ற அத்வைதத்தில்தான் எல்லா சாஸ்திரங்களும், ஆராதனை முறைகளும் நிறைவு பெறுகின்றன என்பது பரமஹம்ஸரின் முடிபு.

தந்திர சாதனைகள் மூலம் பிரம்மாநுபவம் பெற்ற பின்னர், அவர் வைஷ்ணவ சம்பிரதாயத்தில் அநுசரிக்கப்படும் பஞ்ச **பா**வங்கள் மூலமும் அத்வைத உணர்வைப் பெற விரும்பினர். ஆண்டவனுக்குப் பக்தனாக இருந்து சாந்த **பா**வத்திலும், அடிமையாகப் பணிந்து தாஸ்ய **பா**வத்திலும், தோழனாக நினைந்து ஸக்ய **பா**வத்திலும், ஆண்டவனைக் குழந்தையாகக் கருதி வாத்ஸல்ய **பா**வத்திலும், பரம புருஷனைத் தன் புருஷனாகவும், தன்னை அவன் நாயகியாகவும் கருதி அன்பு செய்யும் மதுர **பா**வத்திலும் வழிபடுவதே பஞ்ச **பா**வங்களாகும். சாக்த அநுஷ்டானங்களில் தேர்ந்திருந்த பைரவி பிராம்மணி வைஷ்ணவர்களின் பஞ்ச **பா**வ சாதனைகளையும் கடைப் பிடித்தவளாவாள். ஏன், தற்போது ராமகிருஷ்ணரிடமே அவள் வாத்ஸல்ய **பா**வத்தில்தானே தாயாக இருந்து பரிவு காட்டி வந்தாள்?

பைரவி பிராம்மணியின் பரிசய விசேஷமோ, ரகுவீரனைக் குல தெய்வமாகக் கொண்டிருந்த தமது வைஷ்ணவ குடிப் பிறப்பு விசேஷமோ – ராமகிருஷ்ணருக்கு வைஷ்ணவ சாதனை புரியத் துடிப்பு ஏற்பட்டது. அந்தச் சாதனைகளுக்குத் தமது சத்தியத்தை நிரூபித்துக் கொள்ள ஒரு சோதனையாகவே ராமகிருஷ்ணரிடம் இப்படி ஒரு விருப்பம் எழுந்தது என்றும் சொல்லலாம்.

''யார் யார் எந்தெந்த மூர்த்தியை எப்படி எப்படி வழிபட விரும்புகிறார்களோ அவரவர்களுக்கு அந்தந்த வழிபாட்டுக்கான சிரத்தையை நானே அளிக்கிறேன்'' என்று ஐயம் திரிபறச் சொல்லியிருந்த தோசாரியன் ராமகிருஷ்ணருக்குச் சிரத்தையை அளித்ததுமட்டுமல்ல; உரிய சமயத்தில் தகுந்த பாத்திரங்களையுமே அவரிடம் அனுப்பி, அவர் விரும்பிய சாதனைகளை அவர்களிடமிருந்து அவர் பயிலவும் உதவினன்.

அதற்கேற்பத்தான் இப்போது ஜடை முடி தரித்த ராம பக்தர்



ஒருவர் ராமனது பிரதிமை யொன்றுடன் தக்ஷிணேசவரத்துக்கு வந்து சேர்ந்தார். தக்ஷிணேசுவரத்தின் புகழ் இதற்குள் மெல்ல மெல்ல வெளியுலகில் பரவ ஆரம்பித்தது. முதல் காரணம் ராமகிருஷ்ணரின் பிரபாவம் என்பதைச் சொல்லத் தேவையில்லை. இன்னொரு காரணமும் இருந்தது. அதுதான் ராமகிருஷ்ணரிடம் தொழும்புசெய்த மதுராநாதரின் ஈகைக் குணம். தம்மைக் காக்க வென்றே தேகம் தரித்து வந்துள்ள தெய்வம் என அவர் ராமகிருஷ்ணரைமதித்து வழிபடத் தொடங்கினார். என்றாலும் அவரது இயற்கைக் குணம் தாமே சாதனை மார்க்கங்களில் ஈடுபட அநுமதிப்பதாக இல்லை. எனவே உள்ளத்தால் சமயத்தை உணர முடியாவிடினும், 'பிதா' எப்படிப் பணிக்கிறாரோ அப்படித் தம் செல்வத்தைத் தான தருமங்களுக்குச் செலவிட்டு மறுமைச் செல்வத்தைப் பெறச் சங்கல்பம் செய்து கொண்டார் மதுராநாதர். 1864-ம் ஆண்டில் அவர் 'அன்ன மேரு' என்பதாக, உணவைப் பருவதமாகச் சமைத்து தானம் செய்த பெரும் செயல் வெளி உலகில் பரவிற்று. ஆண்டவனை எண்ணி ஆண்டியாக வாழ்கிறவர்களால் அவர்கள் மட்டுமின்றி உலகெல்லாம் பயன் அடைகின்றனர். அவர்களும் தங்களுடைய வயிற்றுப் பாட்டுக்காகப் பொழுதைச் செலவிடத் தொடங்கினால் உலகில் சூக்ஷ்மமான ஆத்



மிக நலன்கள் பரவாமலே போய்விடுமல்லவா? ஆனபடியால் அவர்களுடைய மிகவும் அவசியமான லௌகிகத் தேவைகளை மதித்து அவற்றை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு சமூகத்தையே சார்ந்தது. அடியார்கள் என்ற பெயரில் போலித்தனம் செய்பவர்கள் இருக்கக் கூடும் என்பதால், சாதுக்களை யெல்லாமே சமூகத்தின் உழைப்பினால் பலன் பெறுபவர்கள் என்று எண்ணுவது முறையாகாது. உண்மையான அடியார் ஒருவருக்கு உணவோ, உடையோ, இருக்கையோ அளிப்பதால் அவர் பெறும் பலனைவிட அவருடைய தூய சிந்தனையினால் நாம் அடையும் பலனே பெரிது. இப்படிக் கருதிய மதுராநாதர் இறைவனை யெண்ணி வாழ்கிறவர்களுக்கு ஏராளமாக தான தர்மங்கள் செய்தார். அடியார்களும் நிர்விசாரமாக ஆண்டவனை நினைக்க முடியும் என்பதால் தக்ஷிணேசுவரத்தைத் தேடி வரலானார்கள்.

இவர்களில் ஒருவர்தான் குழந்தை ராமனின் விக்ரகத்துடன் வந்த அந்த ஜடை முடி தரித்த பெரியவர். அவர் பேரையும் ஊரையும் யார் கண்டார்கள்? ஜடைமுடி தரித்ததால் ஜடாதாரி என்றே சொன்னார்கள்.

ராமலாலாவின் விக்ரகத்தை நீண்ட நாட்களாக அவர் முழுமனதுடன் ஆராதித்து வந்த மகிமையால் அந்த விக்ரகத்தில் வித்தகன் வாழலானான். அவர் நினைத்த போதெல்லாம் அந்தப் பிரதிமை கனிந்து குழைந்து குழந்தையாகி அவருடன் சல்லாபிக்கத் தொடங்கும். இதை அவர் யாரிடமும் சொன்னதில்லை. என்றாலும் தக்ஷிணேசுவரத்தில் அவரை ராமகிருஷ்ணர் கண்ட உடனேயே அவர் தெரிந்து கொண்டு விட்டார் — இந்த ஜடாதாரி ராமபிரானை உயிர் உள்ளவனாகக் கண்டு உறவு கொண்டாடுகிறவர் என்று. பாம்பின் காலைப் பாம்பு அறியாமல் போகுமா, என்ன?

ஜடாதாரியும் ராமகிருஷ்ணர் யார் என்று கண்டு கொண்டார். மக்களை இகத்திலிருந்து பரத்துக்குக் கடத்துவிப்பதால் தாரக நாமம் என்றே பெயர் பெற்ற ஸ்ரீ ராம மந்திரத்தை ராமகிருஷ்ணருக்கு உபதேசித்தார் அவர்.

ஒளி வடிவான தெய்வ உருவில் எப்படிப் பரம்பொருளின் உயிர் பொதிந்திருக்கிறதோ, அவ்வாறே ஒலி வடிவான பெயரிலும் பொதிந்திருக்கிறது. நாம — ரூபங்களுக்குள் பேதமே கற்பிக்கலாகாது என்பது பாகவத சித்தாந்தம். ஒலியாக ராமகிருஷ்ணரின் செவியில் பாய்ந்த ராமன் உருவாகவும் தோன்றி அவரைத் தன் அன்பு வலையில் ஆட்கொள்ளத் தொடங்கி விட்டான்.

இப்போது ராமகிருஷ்ணரின் கண் முன் நின்ற ராமலாலா பிரதிமை மறைந்தது. ராமலாலாவே அங்கு நின்றான். கண்ட கண்களை வேறொன்றில் செலுத்தவொண்ணாத தோளும் தாளுமாக மட்டும் பௌதிகமாக அவன் நிற்கவில்லை. தேகமாக நிற்கும்போதே தத்துவமாகவும் திகழ்ந்தான். அதென்ன தத்துவம்? அந்த இளம் பையனால் அப்படி என்ன பெரிய தத்துவத்தை விளக்க முடியும்?

தத்துவங்களில் எல்லாம் பெரிய அன்பு என்ற மகா தத்துவமாக — எளியவர்களில் பரம எளியவர்களாலும் அநுஷ்டிக்கக் கூடிய அன்புத் தத்துவமாக, ஆனால் ஜபதப சாதனைகள் புரிந்தவராலும் நடைமுறை உலகில் அநுஷ்டிக்க முடியாத அன்புத் தத்துவமாக—தாசரதி நின்றான் தக்ஷிணேசுவரத் தவசியின் முன்னர்.

ஒளிச் சிதறலில் வெண்மை என்ற ஒரே நிறம் பல வண்ண ஜாலங்களாகவும் பிரதிபலிப்பது போல, அன்புத் தத்துவமும் பல சாயல்களில் மிளிர்வதுண்டல்லவா? பவதாரிணியைக் காணும் தோறும் அன்பைத் தாயாகக் கண்ட ராமகிருஷ்ணர் லாலா ராமனைக் கண்ட போது அதே அன்பைக் குழந்தையாகக் கண்டார். பரம்பொருளைக் குழந்தையாகக் கருதி வழிபடும் வாத்ஸல்ய பாவனையைத் தொடங்கிவிட்டார்!

தொடக்கமேதான் இங்கு நிறைவும் ஆயிற்றே! தைலம் நிறைந்த திருவிளக்கின் திரியிடம் தீக் கொழுந்தைக் கொண்டு வந்தவுடனேயே அது சுடரை வாங்கிக் கொள்ள வேண்டியதுதானே!

ராமகிருஷ்ணருக்கு அந்தக் கணத்திலிருந்தே அகமும் புறமும் ராமனின் நினைவால் நிறைந்து விட்டது. இப்படிப்பட்ட ஒரு பக்தர் ராமனுக்கு மட்டும் இந்தக் கலியில் இலேசில் கிடைத்துவிடுவாரா என்ன? பாதி வழிக்கு மேலேயே சென்று பக்தனை எதிர் கொள்ள அல்லவா பரமன் துடிக்கிறான்? ராமனைப் பிரதிமையில் கண்ட ராமகிருஷ்ணர் அவனிடமே தாம் எப்போதும் இருக்கவேண்டும் என எவ்வளவு விரும்பினாரோ, அவ்வளவுக்கு ராமனும் அவர் தம்மிடமே இருக்கவேணும் என விரும்பத் தொடங்கினான். "அந்த அசாதாரணமான பிள்ளை தன் குழந்தைத்தனமான பிரயாசைகளால் என்னை எப்போதும் தன்னிடம் இருத்திக் கொள்ளப் பார்த்தது" என்று பிற்காலத்தில் பரமஹம்ஸர் கூறுவார்.

நாளடைவில் அந்தப் பால ராமன் ஜடாதாரியின் ஆதீனத்தை விட்டுவிட

ஹார்லிக்ஸ் செய்யும் நன்மைக்கு ஒரு உதாரணம்.




மகனையும் மருமகளையும் பார்த்து இரண்டு வருஷங்களாயின; ஆகும் ஆவலோடு வந்த நான் கண்டதென்ன! வீடு ஒரே அலங்கோலம். குழந்தைகள் கவனிப்பாரற்றுக் கிடந்தனர். எல்லா வேலையையும் நானே செய்யவேண்டியதாயிற்று. ஒரு நாள் மருமகள் சீதாவே என்னிடம் சொன்னாள்: "அம்மா இப்பொழுதெல்லாம் எனக்கு ஒரே சோர்வும் அசதியுமாய் வீட்டு வேலைகளைச் செய்யவே முடிகிறதில்லை. நீங்கள் தான் பரிகாரம் சொல்லவேண்டும்."



சீதாவை டாக்டரிடம் அழைத்துப் போனேன். டாக்டர் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டு விட்டுப் பிறகு சொன்னார்: "சீதாவுக்குக் கவலைப் படும்படி ஒன்றுமில்லை. அவளுக்குத் தேவையான போஷாக்குச் சரிவர கிடைக்காததினால் சோர் வடைகிறாள். தினமும் தவறாமல் ஹார்லிக்ஸ் பருகினால் எல்லாம் விரைவில் சரியாகும்."



ஹார்லிக்ஸ் நல்ல பலனை அளித்தது. மிகச் சிறந்த சத்துள்ள பாலுடன் கோதுமை மாவு, மால்ட்டட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்தும் சேர்ந்ததுதான் ஹார்லிக்ஸ். சில வாரங்களுக்குள் சீதா பழையபடி சுறுசுறுப்புடன் வீட்டு வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள். ஹார்லிக்ஸ் ஒருபோதும் பலனளிக்கத் தவறுவதேயில்லை.




## ஹார்லிக்ஸ் அதிக சக்தி யளிக்கிறது!

திரும்பியது போல் தோன்றியது. தன் அன்பை யெல்லாம் ராமகிருஷ்ணரின் மீதே அவன் பொழியலானான்.

நேரம் போவது தெரியாமல் ஒரொரு சமயத்தில் ஜடாதாரியும் அவரும் ஒரு முழு நாள் போவதுகூடத் தெரியாமல் தசரத குமாரனை நோக்கியபடி தியானத்தில் இருப்பதுண்டு. அதன் பின்னர் ராமகிருஷ்ணர் தமது இருக்கைக்குத் திரும்பினும்....

அப்போதும் ஸாகேத இளவரசன் அவரைத் தொடர்ந்து வருவான்.

வேதமும், வேத முடியும் பின் தொடர முடியாதபடி எட்டாத உயரத்தில் நிற்கும் பரமன் ராமகிருஷ்ணரைப் பின்தொடர்வான். ஆனால் தான் என்பதை அறவே கரைத்துத் தியாகசீலராக விளங்கிய அவரோ அவனைப் "பின் தொடராதே" என்பார். "நீ ஜடாதாரிக்கு உரியவனல்லவா? அவர் உன் மீது எல்லையற்ற பற்றுக் கொண்டிருக்கும் போது, ஏன் என் மீது உன் அன்பை எல்லாம் செலுத்துகிறாய்? அந்தப் பரம பக்தனிடமே போ" என்பார்.

தேடி வந்த தெய்வத்தைத் திரும்பிப் போகச் சொல்பவர்களும் இருக்க முடியுமா? அதுவும் தெய்வத்துடன் ஒன்றி வாழ்வதே குறிக்கோளாகக் கொண்ட ஒரு யோகி அவ்விதம் கூற முடியுமா? பெரிய பெரிய உடைமைகளைத் தியாகம் செய்த பலரைப் பற்றிக் கேட்டிருக்கிறோமே; தெய்வத்தையே தியாகம் செய்யும் ஒருவரைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டா? இப்படியும் ஒருநேர்மை இருக்க முடியுமா?

ராமனுடைய பிடிவாதம்தான் உலகம் அறிந்ததாயிற்றே! உதறித் தள்ளினாலும் விடுபவனாக இல்லை தாசரதி. தளர்நடை இட்டபடி துளிர்க்கால்களால் நளிரொளி பரப்பியபடி சுவாதீனமாக அவரை அவரது அறைக்கு அழைத்து வருவான் அவன்!

இப்படி யெல்லாம் குதித்துக் கும்மாளம் போடுபவன் அறைக்குள் வந்ததும் அவர் தன்னை மடியில் படுக்க வைத்துக் கொள்ள வேண்டுமெனச் சிணுங்கத் தொடங்குவான். அவருக்காகவே பரிதாபம் பிறந்து குழந்தை ராமனை வாரி எடுக்கச் செல்லும் போது அவன் அவரிடமிருந்து திமிறிக் கொண்டு ஓட்டமாக ஓடி விடுவான். ராமகிருஷ்ணரும் அவன் பின்னால் ஓடுவார்.

அப்பப்பா! அதெப்படித்தான் அம்மாதிரி அவனால் பம்பரமாகச் சுழல முடியுமோ? இத்தனை பெரிய அண்ட சராசரங்களையும் ஓயாமல் சுற்றிச்சுழலச் செய்யும் வல்லபம்தான் காரணமோ? ஒரு விநாடி கங்கைத் தண்ணீரைத் 'தொப்' 'தொப்' பென்று அடித்து மகிழ்வான். அடுத்த நொடியே தோட்டங்களில் பூத்துக் குலுங்கும் மலர்ச் செடிகளிடையே இலை நிறமும், தண்டு உடலும், அரும்புப் பல்லும், பூங்கண்ணும், கனி அதரமுமாக சிரிக்கும் செடியாக நிற்பான். ராமகிருஷ்ணரின் மனம் மட்டும் சிரிக்காது. அதில் முள்ளைக் குத்தியது போல நோவுதான் காணும். ஏனென்றால் தோட்டத்தில் இஷ்டப்படி துள்ளித் திரியும் ராகவன் புஷ்பப் பாதம் முழுதும் முள்ளைப் பொத்திக்கொண்டு வாடி நிற்பான்.

> ஒருவர்: என் மனைவியின் ஞாபக சக்தி ரொம்ப ரொம்ப மோசம்.
>
> மற்றவர்: ஏன்? எதையும் சீக்கிரம் மறந்து விடுகிறாளா என்ன!
>
> முதலாமவர்: அப்படியிருந்தால் தான் தேவலையே! சின்னச் சின்ன விஷயங்களைக் கூட ஞாபகம் அல்லவா வைத்துக் கொண்டிருக்கிறாள்!

"ராம லாலா! ராம லாலா! இப்படி யெல்லாம் செய்யாதேயடா! நீ பூப் பறித்துத் தர வில்லை என்று யார் அழுதார்கள்?" என்று துயரமும், ஆத்திரமுமாகக் கேட்பார் பரமஹம்ஸர்.

"இந்தக் கொளுத்துகிற வெயிலில் ஏன் இப்படித் திரிகிறாய்? பட்டுக் காலெல்லாம் கொப்புளம் கொப்புளமாகக் கண்டிருக்கிறதே. ஏன் இப்படி என் இதயத்துக்குச் சூடு இழுக்கிறாய்?"

"ஏண்டா ராமலாலா! இதென்ன போக்கிரித்தனம்! நான் சொன்னபடி கேட்பதாகப் பாசாங்கோ? வெயில் கூடாதென்றால் அதற்காகக் கங்கையில் இறங்கி அலையில் இப்படியா அலைவாய்? இவ்வளவு பெரிய கங்கையில் நீ இறங்கலாமாடா? இத்தனை நாழிகை ஊறத்தான் செய்யலாமா? சளியும், மண்டையிடியும், காய்ச்சலும் வந்துவிடுமே ஐயா" என்பார் வியாதிகளோடு வினையையும் தீர்த்து வைக்கும் நிராமயனிடம்.

அவர் வார்த்தைகளை அவன் பொருட்படுத்திய நாளே கிடையாது. தன் சேஷ்டைகளை இஷ்டப்படி செய்து கொண்டேதான் இருப்பான். சில சமயம் அவர் கண்டிக்கும் போது தன் நீல நயனங்களால் அவரை அழகொழுகப் பார்த்தே 'சரிக்கட்டி' விடுவான். சில சமயங்களில் 'வொங்கு' 'வொங்கு' என்று தன்னைப் பின் தொடரும் அவரை இலட்சியமே செய்யாமல் தனது மெல்லிய சிறிய செம்பவள உதடுகளை முத்

ளுப் பற்களால் கடித்து அழகும் காட்டுவான்.

''அயோக்கியப் பயலே, வருகிறேன் இரு. உன்னை அப்படியே நொறுக்கி விடுகிறேன் பார்'' என்று அந்தச் சத்வ சம்பன்னர் கோபம் கொண்டு வைகிற அளவுக்கு அவருடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வான்.

அவனை அவர் 'கையாளும்' சமயங்கள்கூட உண்டு. அப்போது அவனுடைய கலை கலையான கன்களின் முனையில் கண்ணீர் துளித் துளியாக அரும்பு கட்டி நிற்கும். மெல்லிய சிறு உதரம் விம்மித் தணிய, கடலில் அலையாக, அந்த நீலப்பரப்பில் மடிப்புக்கள் புரளும். ராமகிருஷ்ணரது உள்ளம் உருகிக் கரைந்துவிடும். அவனை மடியில் அள்ளிப் போட்டுக் கொண்டு, விசும்பலில் தூக்கிப் போடுகிற கோமளமான அந்தச் சிறிய முதுகையும், அந்த முதுகை நீவிக் கொடுத்து ஆறுதல் சொல்லும் பட்டுக் கருங்குழலையும் தடவிக் கொடுத்து ஆசுவாசம் செய்வார்.

ஒரு நாள் தின்பதற்கு ஏதேனும் வேண்டும் என்று குஞ்சுக் கையை நீட்டி யாசித்தான் பிரபஞ்சத்துக்கெல்லாம் பசி தீர்க்கும் பரம்பொருள். ராமகிருஷ்ணரிடம் அவனுக்குத் தர ஏதுமே இல்லை. அவனுடைய அடமோ வலுத்தது. கடைசியில் அந்த அறையில் கிடைத்த அவலை — உமியும் தவிடும் கலந்த முரட்டு அவலை — அவனுக்குக் கொடுத்து வைத்தார் அவர்.

அவலை அள்ளிப் போட்டுக் கொண்டு அரிசிப் பற்களும், பிஞ்சுக் கன்னமும் வலிக்க வலிக்க அதை மெல்லத் தொடங்கினான் அந்தச் சுகுமாரன். ராமகிருஷ்ணருக்கு நெஞ்சை உறுத்தியது. ராமலாலாவின் நெஞ்சில் அவனுடன் கலந்திருந்த தவிடு உறுத்தியது தான் காரணம். குழந்தையைத் தம் மீது சாய்த்துக் கொண்டு கதறி விட்டார் ராமகிருஷ்ணர்.

ராஜாப் பயல் அல்லவா அவன்? அதுவும் தசரத மகாராஜன் ஆயிரமாயிரம் ஆண்டு தவமிருந்து பெற்ற புத்திரபாக்கியமாயிற்றே! அவனுக்காக கௌஸல்யா தேவி அமுதத்துக்கு நிகரான தூய பாலாடையையும், வெண்ணெயையும் வைத்துக் கொண்டு காத்திருப்பாளே! அவன் ஏன் இந்த ஏழையிடம் வந்து பிஞ்சு நெஞ்சு அடைக்க, வாய் வலிக்க, நாவு குதறிக் கசிய, கன்னமும் கண்களும் தெறிக்கும்படி இந்த அரை வேக்காட்டு அவலை வாங்கிக் குதப்புகிறான்?

கௌஸல்யா தேவி கிடக்கட்டும். இதோ இங்கேயே தக்ஷிணேசுவரத்தில் அவனுக்காக உணவு வகைகளைச் சமைத்து எடுத்துக் கொண்டு ஜடாதாரி வருகிறாரே! ஸ்ரீராமனும் நாமும் மறந்து விட்ட போதிலும் நேயம் மறக்காத நெஞ்சத்தினராக அவனுக்கு அமுது படைக்க வந்திருக்கிறாரே!

''உனக்காக நான் எத்தனையோ சிரமப்பட்டு உணவு தயாரித்து ஊரெல்லாம் தேடி விட்டு இங்கு வந்தால் நீ அலட்சியமா செய்கிறாய்? எப்போது பார்த்தாலும் இங்கே என்ன வேலை உனக்கு? உன்னிடம் நான் வைத்திருக்கும் பாசமும் பிரேமையும் உனக்குப் பெரிதாகத் தெரிய வில்லையா? உன் குணமே அப்படி! அப்பா மரணப் படுக்கையில் கிடக்கும் போது பிடிவாதமாக அவரை விட்டுக் காடு போனவனல்லவா நீ! அவர் மனமுடைந்து செத்தது போல....'' என்று சொல்லம்புகளைப் பொழியத் தொடங்குவார் ஜடாதாரி.

பிறகு ராமலாலாவின் கரங்களைப் பிடித்துக் கரகர வென்று இழுத்துக் கொண்டு செல்வார். அப்போது ராமலாலா ராமகிருஷ்ணரைப் பார்க்கும் பார்வை இதயத்தைப் பிளப்பதாக இருக்கும். ஜடாதாரி அவரைப் பார்க்கிற பார்வையோ குற்றம் சாட்டுவதாக இருக்கும்.

இருந்தாலும் ஜடாதாரி தக்ஷிணேசுவரத்தை விட்டு மட்டும் புறப்படவே யில்லை. தன் உயிருக்கு உயிராக மதித்த பாலராகவன் தன்னைப் புறக்கணித்து ராமகிருஷ்ணரிடம் 'ஒண்டி'க் கொள்வதைக் கண்ட பின்னும் அவர் அங்கேயே தான் இருந்து வந்தார். விந்தையாகத் தானே இருக்கிறது? ஆம், சாதுக்களின் மகிமை விந்தையிலும் விந்தைதான். ஜடாதாரியின் ராமனைக் கவர்ந்துவிட்ட அந்த ராமகிருஷ்ணர் ஜடாதாரியின் உள்ளத்தையுமே கவர்ந்து விட்டார்! ராமனை விட்டு நீங்க முடியாதது போல ராமகிருஷ்ணரை விட்டும் நீங்க முடியாது என்று உணரலானார் ஜடாதாரி.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் கங்கையில் ஸ்நானம் செய்யச் சென்ற போது குழந்தை ராமனும் பிடிவாதமாக அவருடனேயே நீராடினான். ஆனால் எவ்வளவோ நாழிகை ஆகியும் நதியிலிருந்து வெளியேற மறுத்தான். ராமகிருஷ்ணர் கெஞ்சியும், கொஞ்சியும் பார்த்தார். அணுவளவும் பயனில்லை. அவருக்கு எரிச்சல் வந்து விட்டது. ''மனம் கொண்ட மட்டும் ஆற்றிலேயே முழுகிக் கிட'' என்று கூறியபடி ராமச்சந்திரனை ஒரே அமுக்காக நீருக்குள் அமுக்கி விட்டார். பாற்கடலில் பள்ளிகொண்ட பரந்தாமன், கருணை வெள்ளத்தில் அடியார்களை முழுக்காட்டும் ஆராவமுதன்

ஒரு கண நேரம் மூச்சுக்குத் தவித்துத் தத்தளித்தான்.

வேதங்களைப் பிறப்பிக்கும் அந்த சுவாசம் — உலகுக்கெல்லாம் உயிரளிக்கும் பிராணேசனின் அந்த மூச்சுக் காற்று — நின்று போவதாகக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாதே! அப்படியானால் மெய்யடியார் ஒருவரின் கோபத்துக்கு அத்தனை சக்தி உண்டா? ராமகிருஷ்ணர் விம்மி விதிர் விதிர்த்துப் போனார். ராமனை வாரி எடுத்துத் தோள் மீது சாத்திக் கொண்டு திரும்பினார்.

''என்ன காரியம் செய்து விட்டேன்? யோகிகளும், ஞானிகளும், முனிவரும், பக்த மணிகளும் ஆசிரயிக்கும் இந்த மூலப் பொருள் ஏன் கொடுமைப்படுத்தும் என்னை ஆசிரயிக்க வேண்டும்?'' என்று இரத்தக் கண்ணீர் வடித்து நெட்டுயிர்த்தார்.

''என்ன காரியம் செய்து விட்டேன்? இந்த ராமனிடம் உரிமை கொண்டாடினேனே! இவன் உங்களுக்கு உரியவன் அல்லவா!'' என்றார் ராமகிருஷ்ணரின் அறைக்கு வந்த ஜடாதாரி. அவரது கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தோடியது. ஆனால் துயரத்தில் பிறந்த கண்ணீரல்ல அது. உள்ளத்தில் சுரந்த அநுபவ சாரம் நயனங்களின் வழியாகப் பெருக்கிய ஆனந்த தாரையே அது.

நாத் தழுதழுக்க ஜடாதாரி கூறினார்:

''இது வரை என்றும் தரிசித்திராத திருக்கோலத்தில் இன்று ராமலாலாவைக் கண்டேன். பிறவி எடுத்ததன் பயனைப் பெற்று விட்டேன். தான் இங்கிருந்து வர முடியாது என்கிறான் ராமன். அதைக் கேட்க எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா? உங்களோடு — உங்களில்— அவன் பரமானந்தமாக வாழ்கிறான். அந்த ஆனந்தத்தை எண்ணுவதிலேயே நானும் இதுவரை கண்டிராத உவகையும், பூரிப்பும் கொள்கிறேன். ஆம்! அவனுடைய இன்பத்தில்தான் என் இன்பத்தைக் காண முடியும் என்பது இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. ஆகையினால் இனிமேல் உங்களிடமே அவனை விட்டுவிட்டுப் போகிறேன்.''

தன்னுடைய தனிப் பெரும் சொத்தாகிய ராமலாலாவின் பிரதிமையை ராமகிருஷ்ணரிடம் ஒப்பித்தார் ஜடாதாரி.

தன்னையே கதி எனப் பற்றிக் கொண்டிருந்த ஜடாதாரியின் உள்ளத்தைப் பழுக்க வைத்து, காம்பிலிருந்து பழம் பிரிவது போல் அங்கிருந்து விடுபட்டான் லாலாராமன். எங்கும், எதனிலும் அவர் ராமானந்தத்தையும், அந்த

> ### சத்தம் எங்கே ?
>
> டெலிபோன் மணி பன்னிரண்டு மணிக்கு அடித்தது. அடுத்த வீட்டுக்காரர்தான் டெலிபோனில் பேசினார்: ''சார்! புதுசா நாய் வாங்கியிருக்கேளா என்ன? அது குரைக்கிற குரைப்பிலே எங்களாலே தூங்க முடியல்லே?''
>
> ''ஸார்! மன்னிக்கணும்! எங்க வீட்டிலே நாய் கிடையாது. உங்க வீட்டிலேயிருந்துதான் சத்தம் வந்து கொண்டிருக்கிறது. உங்க மனைவி தான் சமையற்காரரிடம் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறாள்!'' என்று அவருக்குப் பதில் கிடைத்தது.

ஆனந்தக் கனி பலித்த கற்கண்டாகிய ராமகிருஷ்ணரையும் காணுமாறு செய்து விட்டான்; அந்த உணர்வில் ராமனையே தியாகம் புரியுமாறும் செய்து விட்டான்.

பெரிய பெரிய உடைமைகளைத் தியாகம் செய்தவர்களைப் பற்றியெல்லாம் கேட்டிருக்கிறோம். ஆனால் தெய்வத்தையே தியாகம் செய்யும் மகா பெரியவர்களும் இருக்க முடியும் என்று இப்போது தெளிவாகிறதல்லவா?

''அதன்பின் இன்று வரை நான் அவரைப் பற்றி ஏதுமே கேள்விப்படவில்லை'' என்றார் பரமஹம்ஸர், பல ஆண்டுகளுக்குப் பின் இந்தச் சம்பவங்களைத் தமது சீடப் பிள்ளைகளுக்கு எடுத்துச் சொல்லும்போது.

ராம — கிருஷ்ணரல்லவா அவர்? ராமரை அநுபவித்தாயிற்று. இனி கிருஷ்ணனை அநுபவிக்க வேண்டாமா?

அந்த அற்புத சாதனையும் தொடங்கி விட்டது. ராமனைக் குழந்தையாகப் பாவித்து இருமையான உறவுகளற்ற உணர்வினை அடைந்தாயிற்று. அதே உணர்வுக்காக இப்போது கண்ணன் என்ற கருணைக் கொழுந்தைக் கொழுநனாகப் பாவித்து மதுர பாவ சாதனை தொடங்கினார் ராமகிருஷ்ணர்.

ஸ்ரீமதி என்றும், ராதிகா தேவி என்றும், ராதா ராணி என்றும் உத்தர தேசம் போற்றும் உத்தம பக்தை, நப்பின்னை என்று நந்தமிழகம் போற்றும் நந்தகுலனின் நாயிகை எப்படிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினாளோ அப்படியே யதுநாதனை ஆராதிக்கத் தொடங்கினார் ராமகிருஷ்ணர்.

நினைக்க நினைக்க அமிருதமாக இனிக்கும் ஓர் அத்தியாயம் அவரது வாழ்க்கையில் தொடங்கிற்று. (தொடரும்)









# கலை வளர்க்கும் கோயில்கள்

நீங்கள் ஒரு ஹாஸ்யத் துணுக்கை விவரிக்கும்போது உங்கள் மனைவி சிரித்தால் ஒன்று, நீங்கள் சொன்ன நகைச்சுவைத் துணுக்கு நிஜமாகவே நல்லதாக இருந்திருக்க வேண்டும். அல்லது உங்கள் மனைவி நிஜமாகவே நல்ல மனமுடையவளாக இருக்க வேண்டும்' என்று பொருள்படும்படி ஆங்கிலத்தில் ஒரு சொற்றொடர் உண்டு. இந்த ரீதியில் 'உங்கள் முன் ஓர் இளைஞன் நின்று 'நான் லயோலாக் கல்லூரி மாணவன்' என்று சொல்லும்போது உங்கள் உள்ளத்தில் எந்தவித உணர்ச்சியும் தோன்றாமல் இருந்தால், ஒன்று உங்களுக்கு இந்தக் காலத்துக் கல்வித் தரத்துடன் போதிய பரிச்சயமிருக்காது; அல்லது அந்தக் கல்லூரிக்குள் நுழைந்து இடம் பிடிக்க அந்த மாணவன் பட்டிருக்கும் சிரமத்தின் அளவு புரிந்திருக்காது' என்று ஒரு புதிய சொற்றொடரையே உருவாக்கி விடலாம்.

இப்போதெல்லாம் லயோலாக் கல்லூரியில் எளிதில் புக முடிவதில்லை. அப்படிப் புகுந்துவிட்டால் பெருமை தரும் வெற்றியுடன் வெளி வராமல் இருக்கவும் முடிவதில்லை! அந்தக் கல்லூரியின் மகத்துவம் அது. மூலப் பொருள்களாக அந்தக் கல்லூரியில் நுழையும் எந்த மாணவனையும் வெளியே அனுப்பும்போது பட்டை தீட்டிய வைரமாகவோ மாணிக்கமாகவோ உருவாக்கி விடுகிறது.

அப்படி அந்த லயோலாக் கல்லூரியில் என்னதான் இருக்கிறது என்று கேட்பவர்களுக்கான பதிலை ஒரே வார்த்தையில் அடக்கி விடலாம். 'சாதனை' என்பது தான் அந்த வார்த்தை.

1935ம் ஆண்டில் சேசு சபையைச் சேர்ந்த சுவாமிமார்கள், கத்தோலிக்க சமூகத்தினர் நன்மைக்கென்றே அவர்களின் முன்னேற்றத்தின் குறிக்கோளுடனே ஆரம்பித்த இந்தக் கல்லூரி நாளடைவில் மற்ற சமூகத்தினரின் கல்வி ஆர்வத்தையும் அரவணைத்துக் கொண்டு ஒரே சீராக முன்னேறி இன்று பாரதத்திலேயே புகழ்பெற்ற வெகு சில கல்லூரிகளில் ஒன்றாக விளங்கி வருகிறது. இந்திய நிர்வாகத் துறைக்கான போட்டிப் பரீட்சைகளில் வெற்றி பெற்று முஸ்ஸோரி பயிற்சிப் பள்ளியில் வந்து சேரும் வருங்கால அதிகாரிகளில் பாதிப் பேர் எப்போதுமே லயோலாக் கல்லூரித் தயாரிப்புகள் என்ற செய்தி ஒன்றே இதற்குச் சான்றாகும்.



அமைதியுடன் கூடிய ரம்மியமான சூழ்நிலை. பரந்த நிழல் கொடுக்கும் பெரு மரங்கள். பசும் புல்வெளிகள். கல்வியுடன் துணை சேர்த்துப் பண்பையும் வளர்க்கும் கண்டிப்பான கோட்பாடு, ஒவ்வொரு மாணவனிடமும் அவன் குறைகளைக் கண்டு பிடித்து அவற்றை நிறைவுகளாக மாற்றும் முயற்சி, பல கோணங்களில் பிரிந்து செல்லும் மாணவனின் மனத்தை, ஒருமுகப்படுத்திக் கல்வி என்ற ஒரே இலட்சியப் பாதையில்



திருப்பும் ஆற்றல் இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து லயோலாக் கல்லூரிக்குப் பெருமை தேடித் தருகின்றன.

இப்போது இந்தக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றும் பூஜ்யர் டி.என். செக்யூரா ஒரு சிறந்த கல்விமான். ஆங்கில மொழியில் ஒரு வித்தகர். அமைதியான சுபாவம் உடையவர். திருச்சி, பாளையங்கோட்டைக் கல்லூரிகளில் பணியாற்றி மாணவர்களின் அன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரமானவர்.

தயாரானார்கள். ஒரு பகுதி மாணவர்கள் பெஞ்சு நாற்காலிகளை அடுக்கி வரிசையாக அமர்ந்தோ, நின்றோ, புகைப்படம் எடுப்பவரின் கருணைக்குப் பாத்திரமாகத் தயாரானார்கள்.

மேல் வரிசையில் ஓரத்தில் நின்று கொண்டிருந்த ஒரு மாணவனுக்குத் தன் திருவுருவம் அந்தப் புகைப்படத்துக்குள் அகப்படுமா, அல்லது நிரந்தரமாக வெளியே நின்றுவிடுமா என்ற விபரீத சந்தேகம் எழுந்தது. உடனே கீழே தள்ளி நின்று காமிராவைச் சரி செய்து கொண்டிருந்த புகைப்பட நிபுணரை நோக்கி, 'நான் படத்தில் சரியாக விழுவேனா?' என்ற பொருள் படும்படி ஆங்கிலத்தில் இரைந்து கேட்டான்.



''எனக்கு பூஜ்யர் செக்யூரா ஆங்கில ஆசிரியராக இருந்தார்'' என்று சொல்லும் எந்த மாணவனுடைய ஆங்கில சம்பாஷணையிலும் ஓர் அளவு நயம் இருப்பது அந்தப் பேராசிரியரின் திறமைக்கு எடுத்துக்காட்டாகும்.

எந்த நெருக்கடி நிலைமையிலும் மாணவர்களின் குறைபாடுகளைப் போக்குவது இந்தக் கல்லூரி போதகர்களின் லட்சியம் என்பதை விளக்க ஒரு நகைச்சுவை நிகழ்ச்சி சொல்லப்படுகிறது.

சில வருடங்களுக்கு முன் வருடாந்திரப் பரீட்சைகளுக்கு முன், மாணவர்கள் பகுதி பகுதியாகப் பிரிந்து புகைப்படம் எடுத்துக் கொள்ளத்



கீழ் வரிசையில் நாற்காலியில் தயாராக உட்கார்ந்திருந்த ஓர் ஆசிரியர் சட்டென்று எழுந்து அந்த மாணவனைப் பார்த்து, ''நீ போட்டோவில் சரியாக விழுவாயோ விழமாட்டாயோ தெரியாது. ஆனால் நீ உன் ஆங்கில உபயோகத்தில் ஒரேயடியாக விழுந்து விட்டாய். தவற்றைத் திருத்திக் கொள்'' என்று சொல்லி உட்கார்ந்து எதிர்பாராத கலகலப்பை உண்டாக்கினார்.

இந்தச் சந்தடியை உபயோகப்படுத்திக் கொண்டு மற்றொரு மாணவன் மேலே இருந்த பெஞ்சைக் கொஞ்சம் நகர்த்தச் சந்தேகத்தை வெளியிட்ட முதல் மாணவன், ஆங்கிலத்தில் விழுந்ததோடு நிற்காமல், கீழேயும் விழுந்து விட்டானாம்!

பூஜ்யர் செக்யூராவுடன் தோளோடு தோள்நின்று கல்விப் பணி புரியும் பல சிறந்த அறிஞர்களும் இந்தக் கல்லூரியில் ஆசிரியர்களாகத் திகழ்கிறார்கள். இவர்களுடைய அறிவு ஞானம் ஒரே கல்லூரியின் ஏகபோக உரிமையாக இருந்து விடக்கூடாது என்றுதானோ என்னவோ இவர்களை இந்தக் கத்தோலிக்க வட்டத்தைச் சேர்ந்த பல கல்லூரிகளுக்கு அவ்வப்போது மாற்றுகிறார்கள். ஆசிரிய மணிகளாக விளங்கும் பல கத்தோலிக்க சுவாமியார்கள், கல்லூரி வட்டத்துக்குள்ளேயே இருப்பதால், மாணவர்கள் எந்த நேரமும் அவர்களை நாடித் தங்கள் பாட சம்பந்தமான சந்தேகங்களைப் போக்கிக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. அந்த ஆசிரியர்களும் இதற்காகவே காத்திருக்கிறார்கள்.

வாராந்திர சோதனைகளும் பிரத்தியேகக் கவனிப்பும் ஆரம்பத்தில் தடுமாறும் மாணவர்களுக்குக் கைகொடுத்து, பின்னும் வரும் பரீட்சைகளுக்கு உரமாக அமைகின்றன.

''பெஞ்சி மேல் ஏறு'' என்று சொல்லும் பள்ளிக்கூடத் தண்டனை ஒன்றைத் தவிர மற்றப் பள்ளிக்கூடத் தண்டனைகளெல்லாம் இங்கு உண்டு. கொடுக்

கப்பட்ட வியாசங்களை எழுதாமல் தப்பிப்பது என்பது மாத்திரம் இந்தக் கல்லூரியில் நடக்காது. ''தேகாப்பியாசத்துக்கு மாத்திரம் தான் டிரில் கிளாஸ் என்பது இல்லை. மன அப்பியாசத்துக்கும் இங்கு டிரில் மாதிரியே சோதனைகள் உண்டு'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார் இந்தக் கல்லூரியின் பழைய மாணவர் ஒருவர்.

ஆனால் அந்த 'டிரில்' வாழ்க்கையில் எவ்வளவு தூரம் உதவுகிறது என்பதையும் அவர் ஒப்புக் கொள்ளத் தயங்கவில்லை.

சில மணி நேரங்களில் பல ஆயிரக்கணக்கான பத்திரிகைகளை மக்கள் ரசித்துப் புரிந்து கொள்ளக் கூடிய தீர்க்க தரிசனத் தலையங்களோடு தயாரித்து அனுப்ப இந்த ஆதி நாள் டிரில் கல்வி எத்தனையோ பத்திரிகைக்காரர்களுக்கு உதவுகிறது.

சில நிமிடங்களுக்குள் நூற்றுக்கணக்கானவர்களின் பாதுகாப்பில் முன் யோசனையுடன் ஈடுபட வேண்டிய பொதுக் காவல் துறையினருக்கும் தேவையாக இருக்கிறது.

முந்தியதற்கு உதாரணம் ஹிந்துப் பத்திரிகையைச் சேர்ந்த திரு வி.கே. நரசிம்மன். பிந்தியதற்கு உதாரணம் இன்று சென்னை நகரப் போலீஸ் கமிஷனராகப் பணியாற்றும் திரு எப். வி. அருள். இவர்களைப் போல் இன்னும் எத்தனையோ லயோலாமணிகள் தத்தம் பணியைப் பெருமையுடன் செய்வதின் மூலம் நாட்டுக்குச் சேவை செய்கிறார்கள்.

விளையாட்டுத் துறையிலும் இந்தக் கல்லூரி மாணவர்கள் முன்னணியில் நிற்கிறார்கள். பாரதத்துக்கே புகழ் தேடித் தரும் டென்னிஸ் புலி ராமநாதன் கிருஷ்ணன் ஒரு மாஜி லயோலா மாணவர்.

இந்த வருடம் புதிதாக எம். ஏ. வகுப்பில் சமூக சேவை பாடத்தைச் சேர்த்திருக்கிறார்கள். ஆனாலும் இந்தப் பட்டத்தை எதிர்பார்க்காமலேயே மற்றப் பல வகுப்புகளிலும் படிக்கும் மாணவர்கள் தங்கள் ஓய்வு நேரங்களில் சமூக சேவையில் ஈடுபடுகிறார்கள். சூளைமேட்டில் குழந்தைகளுக்கான ஒரு நர்சரிப் பள்ளியை உருவாக்கியிருக்கிறார்கள்.

'போர்ட் ரம்' ஹாலைச் சுட்டிக் காட்டி ஒரு பழைய மாணவர் ''பைன் ஹால்! பைன் ஹால்!'' என்றார். இரண்டாவது தடவை அவர் சொன்ன போதுதான் அதில் ஜோவைடநயம் பொதிந்திருப்பதாகத் தெரிய வந்தது. அப்புறம் அவரே விளக்கினார். மாணவர்களிடமிருந்து வசூலித்த 'பைன்' அதாவது அபராதத் தொகைகளைக் கொண்டே எழுப்பப்பட்ட ஹால் என்று தமாஷாகச் சொல்லிக் கல்லூரி மாணவர்களிடம் அபராதம் வசூலிப்பதைக் கோடிட்டுக் காட்டினார். ஆனால் இந்த 'அபராதம்' அபாயத்தைத் தோற்றுவிக்கவில்லை. அதற்குப் பதிலாக மாணவர்களின் ஆர்வத்தையே—மேலும் அபராதம் கொடுக்க வேண்டும் என்ற ஆர்வம் இல்லை; அபராதத்தைத் தவிர்க்க நன்கு படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தையே—தோற்றுவித்து நல்வழி காட்டியிருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

இந்தக் கல்லூரியில் ஒரு 'பாம்பாட்டிச் சித்தரே' ஆங்கில போதகராக இருந்தார் என்ற செய்தி சுவாரசியமாக இருந்தது. பூஜ்யர் வீக்கு கொடிய விஷப் பாம்புகளை வளர்ப்பதில் ஓர் ஆசை. தாம் வளர்க்கும் பாம்புகளுடன் சரளமாகப் பழகுவார்.

பாம்பைக் கண்டு நடுங்கும் ஒரு மாணவன் அவர் பாம்பை விட்டுத் தனித்து இருக்கும் சமயத்தில் அவரை நெருங்கி ''தந்தையே! உங்களுக்குப் பாம்புகளிடம் பயம் இல்லையா? இப்படி அருமையாகச் செல்லம் கொடுத்து வளர்க்கிறீர்களே?'' என்று கேட்டானாம்.

பூஜ்யர் சிரித்துக் கொண்டே, ''உங்களிடம் பழகுவது போல் பழகுகிறேன். அந்தப் பாம்புகள் என்னை ஒன்றும் செய்யாது'' என்றாராம்.

மாணவன் வியப்புடன் திரும்பினானாம். அவர் வார்த்தைகளில் மறைந்திருந்த ஜோவைடை கல்லூரியை விட்டு வெளி வந்த பிறகுதான் தெரிந்ததாம். மாணவர்களிடம் அன்புடன் பழகுவதாகச் சொன்னாரா, ஜாக்கிரதையாகப் பழகுவதாகச் சொன்னாரா என்று அவனுக்குக் கடைசி வரை புரியவே இல்லையாம்!

''தன்னை மறந்து படிக்கும் போது ஏன் வெற்றி கிட்டாது?'' என்று புன்னகையுடன் கேட்டார் ஒரு பழைய கல்லூரி மாணவர். திகைத்த எனக்கு விஷயத்தையும் விளக்கினார்.

இந்தக் கல்லூரி மாணவர்களுக்கு வகுப்பில் சேர்ந்தவுடனேயே ஒரு நம்பர் கொடுத்து விடுவார்கள். வருடம் முழுதும் எந்தப் பட்டியலிலும் அந்த நம்பரைக் குறிப்பிட்டுத்தான் அழைப்பார்கள். தன் பெயர் குப்புசாமியா, கப்புசாமியா என்றுகூட நினைவுக்கு வராத படி அந்த நம்பருடன் அவர்கள் ஐக்கியமாகி விடுவார்கள்! ஒரு சமயம் ஹாஸ்டலிலிருந்த தம் மகனைப் பார்க்க வந்த தந்தை ஒருவர் அறைக்கு வெளியேயிருந்து மகன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாராம். அவன் திரும்பியே பார்க்கவில்லை. மற்றொரு மாணவன் நம்பரைச் சொன்ன பிறகுதான் அவன் திரும்பினானாம்!

புகுமுக வகுப்புக்கான விண்ணப்பங்கள் இந்த வருடம் எதிர்பாராத அளவுக்கு வந்து குவிந்தனவாம். இத்தனைக்கும், நானூற்றுக்கு மேல் நானூற்றைம்பதுக்கு மேல் மார்க்குகள் இருக்க வேண்டும் என்ற கெடுபிடி இந்தக் கல்லூரியில் அதிகம் உண்டு. நானூறுக்குக் குறைந்தவர்கள் லயோலாக் கல்லூரியை நெருங்கவே தயங்குவார்கள்.

ஆனாலும் கல்லூரி நிர்வாகிகள் சில சமயங்களில் பெரிய இடத்துச் சிபாரிசுகளுக்கு இணைந்து போக வேண்டிய நெருக்கடிகளும் ஏற்படுகின்றன என்றுதான் தோன்றுகிறது. ஆனால் ஒன்று. இந்தக் கட்டத்தில் குறையும் கண்டிப்பை, பின்னால் மாணவர்களிடம் நிறையக் காட்டி அவர்களுக்குக் கைகொடுத்துத் தூக்கி விடுவதில் ஈடு செய்து விடுகிறார்கள்.

'சிறந்த கல்வியை அளிப்பது மாத்திரம் எங்கள் கொள்கையல்ல. அத்துடன்கூடச் சிறந்த கட்டுப்பாட்டு லட்சிய உணர்ச்சியையும் அளிப்பது என்பதுதான் எங்கள் கல்லூரியின் கோட்பாடாகும்' என்று இந்தக் கல்லூரி நிர்வாகம் சொல்லாமல், செயலில் காட்டுகிறது. மனிதப் பண்பின் வளர்ச்சிக்கு மார்க்குகள் மாத்திரம் போதாதே!

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2 சில்விக்ரீன அட்வைஸரி சர்வீஸ், பீசாம் (இந்தியா) பிரை. லிட்., பீசாம் ஹவுஸ், மாஹிம், பம்பாய்—16.



**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது



# Silvikrin

சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/7/63



# சஹாரா
# பாலைவனம்



உலகிலுள்ள பாலைவனங்களில் மிகப் பெரியது சஹாரா பாலைவனம். 3,500,000 சதுரமைல் பரப்புக் கொண்டது. ஐக்கிய அமெரிக்காவின் மொத்தப் பரப்பை விடவும் பெரியது. ஆப்பிரிக்காக் கண்டத்தின் மேல் பகுதியில் மேற்கே அட்லாண்டிக் மகாசமுத்திரத்தையும் கிழக்கே செங்கடலையும் எல்லைகளாகக் கொண்டு வியாபித்திருக்கிறது இந்தப் பாலைவனம். இதன் நடுவே செழிப்பான நைல் நதிப் பள்ளத்தாக்கு இருக்கிறது. இந்தப் பாலைவனம் மிகமிக வறட்சியானது. பகலில் தகிக்கும் வெயில் 120லிருந்து 130 டிகிரி வரை இதன் உஷ்ணம் இருக்கும். இரவிலோ இதற்கு நேர்மாறாகப் பல்லைக் கிட்ட வைக்கும் குளிர். இந்தப் பிராந்தியத்தின் மீது மேகங்களையே காண முடியாது. சிலஇடங்களில் ஏழு வருஷங்களுக்கு ஒரு முறை சிறு தூறல் விழுமாம். அப்படியே மேகங்கள் மழையைக் கொண்டு வந்தாலும் மழைத் துளிகள் கீழே விழுவதற்குள் ஆவியாகிப் போய்விடும். அத்தனை உஷ்ணம். ஒரு காலத்தில் இந்தப் பொட்டல் வெளியில் நதிகள் ஓடிச் செழிப்புற்றிருந்தனவாம். ஆனால் இன்றைக்கு அந்த நதிகள் ஓடிய மணல் பாதைகளைத்தான் அங்கு காண முடிகிறது.

சஹாரா முழுக்க முழுக்க மணல் பிரதேசமல்ல. இதன் இடை இடையே மலைகளும் இருக்கின்றன. புல் பூண்டுகூட இல்லாத மலைகள். 9000 அடி உயரமுள்ள சிகரங்களும் உண்டு. கடலைப் போன்ற மணல்வெளிகளைத் தவிரக் குத்துச் செடிகளும் முட்புதர்களும் நிறைந்த பகுதியும்கூடச் சஹாராவில் உண்டு.

இடையிடையே பசுமையான பிரதேசங்களும் சஹாரா பாலைவனத்தில் உண்டு. இவைகளை ஓயஸிஸ் என்பார்கள். பூமிக்கடியில் இருக்கும் நீர் ஊற்றுக்கள் தானகவே பொங்கிச் சொரியும். அல்லது கிணறு தோண்டி அந்த நீர் ஊற்றுக்களை அடைவார்கள். ஈச்ச மரச் சோலைகள் சூழ்ந்த இந்த நீரூற்றுக்களான ஓயஸிஸ்கள் களைத்துச் சோர்ந்து வரும் பிரயாணிகளுக்குக் களிப்பையும் நிழலையும் அளிக்கும். சில ஓயஸிஸ்கள் ஒட்டகங்கள் நீர் அருந்தவும், பிரயாணிகள் களைப்பாறித் தங்கள் பிரயாணத்துக்கான தண்ணீரை நிரப்பிக் கொள்ளவும் மட்டுமே பயன்படும்படி சிறியதாக இருக்கும். வேறு சில ஓயஸிஸ்களோ பல கிராமங்கள் சூழ்ந்ததாக கோதுமை, பார்லி, சோளம், காய்கறிகள் பயிர் செய்யும் நிலங்களையும் உடையதாக அத்தனை பெரிதாக இருக்கும்.

சஹாரா பாலைவனத்தில் வீசும் மணல் காற்று பயங்கரமானது. இதில் பிரயாணம் செய்வோர் இதிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளக் கண், காது, மூக்கு இவைகளை மூடி மறைத்துக் கொண்டுதான் உடையணிவார்கள். பெரும் மணல் காற்றின் போது ஒட்டகங்களைக் கீழே கிடத்தி அதன் உடல் மறைவில் ஒண்டியபடி தங்களைக் காத்துக் கொள்ளுவார்கள். சஹாரா பாலைவனத்தில் நாளுக்கு நாள் மணல் வளர்ந்து வருவதாக ஒரு நம்பிக்கை. எப்படித் தெரியுமா? இங்குள்ள பொட்டல் மலைகள் வெயிலாலும் பனியாலும் பொடித்துப்போய் மணலாகப் பெருக்கெடுக்கிறதாம்.

ஒட்டகமும், நெருப்புக் கோழியும் தவிர, இந்தப் பாலைவனத்தின் எல்லையோரங்களில் சிங்கம், சிறுத்தை, கழுதைப் புலி, நரிகள், ஓநாய்கள், பலவகை மனிதக் குரங்குகள், மலைப் பாம்புகள் ஆகியவையும் வாழுகின்றன. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சிலவகைப் பாலைவனத்துப் பூக்களும் இங்கு உண்டு. அரேபியர்கள், மூர்கள், பெர்பெர், தாரக், பெடுயின்கள், டிபஸ், நீக்ரோக்கள், யூதர்கள் ஆகிய இனத்தவர்கள் இந்தப் பாலைவனத்தில் வாழுகிறார்கள்.

சஹாரா பாலைவனத்துக்கு வளமான எதிர் காலம் இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் நம்புகிறார்கள். ஏராளமான எண்ணெய் வயல்களைத் தவிர உலோக உப்புப் படிமங்களும் இங்கு இருப்பதே இதற்குக் காரணம். சஹாரா பாலைவனம் வளம்கொழிக்கும் பிரதேசமாக மாறினாலும் வியப்பதற்கில்லை.

# கலியாண ஊர்வலம் வரும்......!

கலியாணமென்றாலே விருந்தும் வேடிக்கையும் கேலியும் சிரிப்பும்தான் உங்கள் நினைவுக்கு வரும் இல்லையா? மனிதன் உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் திருமண விழாவைத்தான் கோலாகலமாகக்கொண்டாடுகிறான். வலப்பக்கம் நீங்கள் காண்பது சீன நாட்டுத் திருமண ஊர்வலம். காகிதக் கூண்டு விளக்குகளும் வாத்திய கோஷ்டிகளும் வரிசை வரிசையாகச் செல்ல மணப் பெண்ணை நான்கு பேர் சுமந்து செல்லும் பெட்டி போன்ற பல்லக்கில் வைத்துக் கோயிலுக்கு அழைத்துச் செல்லுவார்கள். பெண்ணும் மாப்பிள்ளையும் வண்ண வண்ண ஆடைகளை அணிந்திருப்பார்கள்.



கீழே இடது கோடியில் போர்னியோ தீவில் நடக்கும் ஒரு திருமணக் காட்சி. நாற்பதுக்கும் அதிகமான குடும்பங்கள் ஒரே வீட்டில் வசிப்பார்கள். இதற்கு நீண்ட வீடு என்று பெயர் (லாங் ஹவுஸ்) இந்த நீண்ட வீட்டின் தலைவனின் முன்னால் திருமணச் சடங்கு நடைபெறும். மூன்றாவது படம் நமது இந்தியத் திருமணம் என்பதை யானையைப் பார்த்ததுமே தெரிந்து கொண்டிருப்பீர்கள். வட இந்தியாவில் இம்மாதிரித் திருமணக் காட்சியைக் காணலாம். மாப்பிள்ளையும் மாப்பிள்ளைத் தோழனும் யானை மீது பவனி வர மணப் பெண் மேனாப் பல்லக்கில் சீர்வரிசைகளுடன் பின்னால் வருவாள்.



எகிப்து நாட்டு முஸ்லிம்களின் திருமணவிழாவில் மாப்பிள்ளைதான் ஊர்வலமாக அழைத்து வரப்படுவார். முன்னும் பின்னுமாக இரண்டு ஒட்டகங்கள் செல்லும். அவைகளை இணைத்துக் கட்டிய உத்தரத்தில் உள்ள ஆசனத்தில் அமர்ந்து மணப் பந்தலுக்கு வருவார் மாப்பிள்ளை. அவர் வரவுக்காக மணப் பெண் தன் வீட்டில் தாயார் முதலிய பெண்களோடு காத்திருப்பாள்.

மாதா கோயிலில் மெழுகுவர்த்தி சுடர் விட்டுப் பிரகாசிக்கும். ஆணும் பெண்ணும் கரம் பற்றி நிற்பார்கள். அவர்களைக் கணவனும் மனைவியுமாக்கி ஆசீர்வதிப்பார் புனித பாதிரியார். இது கிறித்துவமதக் கலியாணம் என்று உங்களுக்கெல்லாம் தெரியும்.

பிலிப்பைன் தீவில் வாழும் பகாபூ இனத்து வாலிபனையும், குமரியையும் இணைத்து வைத்து தம்பதிகளாக்குவது அரிசிதான். சமைத்த அரிசி உணவைக் கணவனும் மனைவியும் ஒருவர் மற்றவருக்கு ஊட்டியபின் இருவரும் தங்கள் தலையை முட்டிக் கொள்வார்கள். இதுதான் பகாபூ இனத்து ஆணும் பெண்ணும் கணவனும் மனைவியுமாகியதற்கு அடையாளம். வேடிக்கையாக இல்லை?

இப்படி உலகின் ஒவ்வொரு பகுதியிலும் திருமணச் சடங்கில் பல விநோதமான பழக்க வழக்கங்கள் உண்டு. எது எப்படி இருந்தாலும் கலியாணத்துக்குப் பிறகு எங்கும், விருந்து மட்டும் நிச்சயம் உண்டு!







வீட்டிற்கு
ஒன்று
பிரயாணத்திற்கு
ஒன்று
CALTEX
கால்டெக்ஸ்
முதல் சிகிச்சைப்
பெட்டி
மோட்டார்
வைத்திருப்போருக்கு
மலிவு விலையில்
கிடைக்கும்
பெட்டி ஒன்றுக்கு
ரூ. 2.25 மட்டும்
(எல்லா வரிகளும் உட்பட)
Savlon
மோட்டார் ஓட்டிகளுக்கான கால்டெக்ஸ் முதல் சிகிச்சைப் பெட்டியில்: [1] ஒரு 15 கிராம் ஐ.ஸி.ஐ.யின் "ஸெவ்லான்" கிரிமி நாசினி பசை ட்யூப்: [2] ஒரு ஐ. ஸி. ஐ: ஸெவ்லான் கிரிமிநாசினி திரவம் 15 மில்லி லிட்டர் குப்பி [3] நான்கு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் (நிக்கோலஸ் ஆப் இந்தியா லிமிடெட் கம்பெனித் தயாரிப்பு): [4] ஜான்ஸன் & ஜான்சன் தயாரிப்பு (Band Aids) பிளாஸ்திரி மூன்று [5] சுத்தம் செய்யப்பட்ட பஞ்சு ஒரு பாக்கெட்: [6] மூன்று மீட்டர் நீளமும் இரண்டரை சென்டி மீட்டர் அகலமுமுள்ள காஸ் பாண்டேஜ் ஒரு பாக்கெட் ஆகியவை அடங்கியுள்ளன.
உங்களுடைய நண்பன்
கால்டெக்ஸ் டீலரைக்
கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள்
பாதுகாப்புக்காக சேமியுங்கள்
CAL. FA. B. 63. G




[பேர்ஷியாமீது படையெடுத்து வெற்றி கொண்ட அலெக்ஸாந்தர் தனக்குக் கிடைத்த வெகுமதிகளைப் பார்வையிடுவதைச் சித்திரிக்கிறது மேலே உள்ள படம்]

கிறிஸ்து சகம் தொடங்குவதற்கு மூன்று நூற்றாண்டுகள் முன்பு வரை, பாரசீக ஏகாதிபத்தியம் உன்னத வாழ்வு நடத்தி வந்தது. ஏறக்குறைய மத்திய ஆசியா முழுதும் அதன் ஆதிக்கத்துக்குட்பட்டிருந்த தென்று சொல்லலாம். இத்தகைய பாரசீகத்தின் மீது கி. மு. 334-ம் வருஷம் மகா அலெக்ஸாந்தர் படையெடுத்து வந்தான். அப்பொழுது மூன்றாவது டேரியஸ் என்பவன் பாரசீகத்தை ஆண்டு வந்தான். தன்னுடைய ஆதிக்கச் சக்தியில் பெரு நம்பிக்கை கொண்டவன் இவன். அலெக்ஸாந்தர் படையெடுத்து வருகிறான் என்று தெரிந்ததும், அவனுக்கு எச்சரிக்கை செய்கிற முறையில் பின் வரும் கடிதத்தை எழுதியனுப்பினான்:—

மன்னாதி மன்னனாகிய டேரியஸ், அலெக்ஸாந்தருக்கு எழுதுவது: வானுலக அரசராகிய கடவுள் இந்த நிலவுலக சாம்ராஜ்யத்தை எமக்கு அருளியிருக்கிறார். அந்தக் கடவுள் இந்த உலகத்து நான்கு திசைகளையும் எம்முடைய ஆதீனத்தில் ஒப்படைத்திருக்கிறார். மற்றும் அந்த ஆண்டவன் எமக்குப் பெரும் புகழையும் உயர்ந்த அந்தஸ்தையும், அருளும் சக்தியையும் அளித்துக் கூடவே ஆயிரக்கணக்கான வீரர்களையும் உடன் கூட்டத்தாரையும் உதவியிருக்கிறார். இந்த உண்மைகளை, கள்வர் கூட்டத்தின் தலைவனாகிய அலெக்ஸாந்தர் அறியட்டும்.

நீ, கள்வர்களையும் கீழ் மக்களையும் பெருங் கூட்டத்தினராகத் திரட்டியிருக்கிறாய் என்றும், அவர்களைக் கண்டு உனக்கு மகிழ்ச்சி பொங்கியிருக்கிறதென்றும், அவர்களுடைய உதவியைக் கொண்டு எம்முடைய மகுடத்தையும், சிங்காதனத்தையும் அபகரித்துக் கொள்ளவும், எமது ராஜ்யத்தைச் சீர்குலைக்கவும், எமது நாட்டையும் மக்களையும் அழிக்கவும் முற்பட்டிருக்கிறாயென்றும் அறிகிறோம். ஆழ்ந்து சிந்தியாது இப்படி நீ முற்பட்டிருப்பது, அறிவுப் பக்குவம் பெறாத ஐரோப்பிய மக்களின் தன்மைக்குப் பொருந்துவதாகவே இருக்கிறது.

இப்பொழுது நீ செய்ய வேண்டியது என்னவென்றால், இந்தக் கடிதத்தைப் பார்த்தவுடன், எந்த இடத்துக்கு வந்திருக்கிறாயோ, அந்த இடத்திலிருந்து உடனே திரும்பிப் போய்விட வேண்டும். அதுதான் உனக்கு நல்லது. படை திரட்டிக் கொண்டு வந்த குற்றத்துக்காக நாம் உன்னைத் தண்டிக்க மாட்டோம்; பயப்பட வேண்டாம். எம்மால் பழி வாங்கப்படுவதற்கோ, எம்முடைய தண்டனையைப் பெறுவதற்கோ நீ இன்னும் தகுதி பெறவில்லை.

இதோ பார்! ஒரு பெட்டி நிறையத் தங்கமும் ஒரு மூட்டை எள்ளும் அனுப்பியிருக்கிறோம். இவைகளைக் கொண்டு எமது பண பலத்தையும் அதிகார பலத்தையும் நீ தெரிந்து கொள்ளலாம். தவிர, ஒரு சாட்டையும் பந்தும் அனுப்பியிருக்கிறோம். நீ விளையாட்டுப் பிள்ளை. ஆதலால், நீ விளையாடுவதற்காகப் பந்தை அனுப்பியிருக்கிறோம்; நீ தண்டனைக்குரியவன் என்பதற்காகச் சாட்டையை அனுப்பியிருக்கிறோம்.

இந்தக் கடிதத்தைக் கண்டு அலெக்ஸாந்தருக்கு மகா கோபம் வந்து விட்டது. கடிதம் கொண்டு வந்த தூதர்களைச் சிரச்சேதஞ் செய்து விடும்படி உத்தரவிட்டான். ஆனால், ஆஸ்தானிகர்கள், தூதர்களைக் கொல்வது தருமமல்ல என்று சொல்ல, உத்தரவை ரத்து செய்து விட்டு, அந்தத் தூதர்களிடம் பின்வரும் பதில் கடிதத்தைக் கொடுத்து அனுப்பினான்:—

மன்னாதி மன்னன் என்று பாசாங்கு செய்துகொண்டிருக்கிறவனுக்கு, அலெக்ஸாந்தர் எழுதுவது: தன்னைக் கண்டு வானுலகத்தோரெல்லாம் பயந்து நிற்பதாகச் சொல்கிறவனும், உலகத்து மக்கள் எல்லாரும் தன்னிடமிருந்து அறிவு பெறுவதாகச் சொல்கிறவனுமான டேரியஸ், அலெக்ஸாந்தர் என்னும் கேவலமான ஒரு சத்துருவினிடம் ஏன் பயப்பட வேண்டும்? அவன் கௌரவத்துக்கு ஏற்குமா?

இதோ பார்! நான் உன்னைப் போர்க்களத்தில் சந்திக்கத் தீர்மானித்து விட்டேன். உன் ராஜ்யத்தின் மீது படையெடுத்து வரப் போகிறேன். நான் ஆண்டவனுடைய பணிவான ஊழியன். அவன் ஒருவனுக்குத்தான் என் தலை வணங்கும். எனக்கு வெற்றி வாங்கித் தருமாறு அவனை இறைஞ்சுகின்றேன்.

அதிகாரத் தோரணையில் நீ அனுப்பிய கடிதத்துடன் ஒரு சாட்டை, ஒரு பந்து, ஒரு பெட்டி நிறையத் தங்கம், ஒரு மூட்டை எள்ளு ஆகிய இவைகளை அனுப்பியிருக்கிறாய். இவை எனக்கு வரப் போகிற அதிர்ஷ்டத்தின் அறிகுறிகள் என்றும், நான் அடையப் போகிற வெற்றிகளை அறிவிக்கும் நல்ல சகுனங்கள் என்றும் கருதுகிறேன். நீ அனுப்பியிருக்கும் சாட்டை உன்னைத் தண்டிக்கவும், உன்னை நல்வழிப்படுத்தவும் உபயோகப்பட வேண்டிய கருவி என்பதைத் தெரிவிக்கிறது. நீ அனுப்பியிருக்கிற பந்து, உருண்டையாயுள்ள இந்தப் பூமி முழுதும் என்னுடைய பிரதிநிதிகளின் ஆதிக்கத்துக்குட்படப் போகிறது என்பதைச் சூசிப்பிக்கிறது. ஒரு பெட்டி நிறையப் பணம் அனுப்பியிருக்கிறாயே, அஃது, உன்னுடைய பொக்கிஷம் முழுவதும் என் வசப்படப் போகிறது என்பதை அறிவிக்கிறது. ஒரு மூட்டை எள் அனுப்பியிருக்கிறாய். அதை ஒவ்வொன்றாக எண்ணிப் பார்க்கிற போது அதிகமாகத்தான் இருக்கிறது. ஆனால் தொட்டுப் பார்த்தால் மிருதுவாக இருக்கிறது. உட்கொண்டால் அதிகத் தீங்கு விளைவிக்காது.

நீ அனுப்பியவைகளுக்குப் பிரதியாக நான் உனக்கு ஒரு பை நிறைய கடுகு அனுப்பியிருக்கிறேன். அதைச் சுவைத்துப் பார்த்து, உன்மீது நான் அடையப் போகிற வெற்றி எவ்வளவு கசப்புடையதாக இருக்கும் என்பதை நீ நன்கு அறிந்து கொள்ளலாம்.

இதற்குப் பிறகு பாரசீகப் படைகளும் கிரேக்கப் படைகளும் இஸ்ஸஸ் என்ற இடத்தில் கி. மு. 331-ம் வருஷம் சந்தித்தன. இப்படிச் சந்தித்தது, இரண்டு மகா சமுத்திரங்களிலிருந்து சீறி எழும் அலைகள் மோதுவது போலவும், இரண்டு பெரிய இரும்பு மலைகள் முட்டிக் கொள்வது போலவும் இருந்ததென்று ஒரு சரித்திராசிரியன்

**இரவல்தானே?**

கணவன்: என்ன இப்படிச் செய்கிறே? இப்படி அளவுக்கு மீறிச்செலவு செய்யலாமா? நாலு டேபிள் பான்களும் நாள் முழுதும் ஓடினால் நம்ப குடும்பம் என்னத்துக்கு ஆகிறது?



மனைவி: நீங்க எதுக்குக் கவலைப் படறீங்க? பக்கத்து வீட்டுக்காரர்களிடம் இரவல் வாங்கிய டேபிள் பான்கள்தானே?




கலாநிகேதனின் சேலை; கஜ்தாரின் நகை

## எழிலுக்கு எழில் கூட்ட... லக்மே முகப் பவுடர்

சரும எழிலோடு நேர்த்தியாய் இணையும் வித
நிறங்களில் கிடைக்கும் பரிபூரணப் பவுடர்—
முகத்திற்கு மெல்லிய மோகனத் திரையிட்டு,
களங்கங்களை மறைத்துவிடுகிறது. மேனியெழிலோ
பட்டுப் போன்ற மென்மையினைப் பெறுகிறது.

நேசுரல்-ரசேல்-கோல்டன் பீச்-ரோஸ் கோரல்-
ஸன்டான்-க்ளோயிங் அம்பர்



# லக்மே

வர்ணிக்கிறான். அவ்வளவு மும்முரமாகப் போர் நடைபெற்றது. கடைசியில் பாரசீகப் படைகள் தோல்வியடைந்தன. டேரியஸ் மன்னன் போர்க்களத்திலிருந்து தப்பி யோடிப் போனான். ஆனால் அவனுடைய மனைவியும் மக்களும் கிரேக்கர்கள் வசம் அகப்பட்டுக் கொண்டனர்.

இந்த நிலையில் டேரியஸ் மன்னன் என்ன செய்வான்? அலெக்ஸாந்தரிடம் சமாதானம் கோரினான். தன் ராஜ்யத்தில் பாதியைக் கொடுத்து விடுவதாகக் கூறினான். அலெக்ஸாந்தர் இதற்கு இசையவில்லை. டேரியஸுக்குப் பின்வரும் பதிலை அனுப்பினான்:—

டேரியஸுக்கு அலெக்ஸாந்தர் எழுதுவது: உன் பெயர் கொண்ட *டேரியஸ் என்பவன், அநேக ஆண்டுகளுக்கு முன்பு, கிரீஸின் மீது படையெடுத்து வந்து, நகரங்கள் பலவற்றை அழித்து விட்டான். அதற்குப் பிறகு, முதலாவது ஜெர்க்ஸஸ் மன்னன் தலைமையில் இரண்டாவது முறையாகப் பாரசீகப் படைகள் கிரீஸை நோக்கி வந்து, செழிப்பான பிரதேசங்கள் பலவற்றைப் பாழ்படுத்தி விட்டுப் போயின.

இவையெல்லாம் போகட்டும். என் தந்தை பிலிப்பைக் கொலை செய்தவர்கள் யார்? உன்னுடைய கையாட்களே. ஏராளமான பணம் கொடுப்பதாகச் சொல்லி அவர்களை இந்த இழிசெயலைச் செய்யும்படி தூண்டினாய். அநியாயமாக இந்த யுத்தத்தைத் தொடங்கி யிருக்கிறாய்; கோழைத்தனமாக நடத்துகிறாய். யாராரிடம் நீ பயம் கொண்டிருக்கிறாயோ, அவர்களை ரகசியமாகச் சிறைப்படுத்திக் கொலை செய்துவிட முயற்சி செய்கிறாய். உனக்குப் பின்பலமாக ஒரு பெரும் படை இருந்த போதிலும், அதனை நீ தலைமை தாங்கி நடத்திய போதிலும் என்னைக் கொலை செய்கிறவர்களுக்கு ஆயிரம் பொன் சன்மானம் அளிப்பதாகப் பிரகடனம் செய்திருக்கிறாய். இதிலிருந்து நீ ஒரு கோழை என்று தெளிவாகிறது.

இப்பொழுது நான் உன் மீது தொடுத்திருக்கும் யுத்தம் என்னைத் தற்காத்துக் கொள்வதற்கேயாகும். கடவுள் எனக்கு வெற்றியருள்வார். அதன் மூலம் நான் யுத்தம் தொடுத்தது நியாயம் என்று தெரியப் போகிறது. போர்க்களத்தில் உன் மீது நான் வெற்றி கொண்டேன். ஆதலால் உன் சன்மானக் கோரிக்கைக்கு இணங்க நான் எந்த விதத்திலும் கட்டுப்பட்டவன் அல்ல. ஆயினும் உன்னுடைய தற்போதைய நிலைமையை மனத்தில் கொண்டு நீ என்னை அணுகுவாயானால், எவ்வித நிபந்தனையும் இல்லாமல் உன் மனைவி மக்களை விடுதலை செய்விக்கிறேன். யார் மீது நான் வெற்றி கொள்கிறேனோ அவர்களை எப்படிக் கண்ணியமாக நடத்த வேண்டும் என்பது எனக்குத் தெரியும். நீ என்னிடம் வருவாயானால் உன் உயிருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது. அப்படி ஏதேனும் ஆபத்து ஏற்படுமோ என்று நீ சந்தேகிக்கும்பட்சத்தில் உன்னை அழைத்து வர நான் என்னுடைய ஓர் ஆளை அனுப்பி வைக்கிறேன். நீ இங்கே வந்த பிறகும், அவனை உனக்குப் பின்னால் இருந்து கொண்டு உன்னைப் பாதுகாத்து வரும்படி செய்கிறேன்.

நீ இங்கே வருவதற்கு முன்பு எனக்குக் கடிதம் எழுதுவதாயிருந்தால், அரசனாகிய அலெக்ஸாந்தருக்கு எழுதுவதாக நினைத்து எழுதாமல், உனக்கு அரசனாகிய அலெக்ஸாந்தருக்கு எழுதுவதாக நினைவில் பதிய வைத்துக் கொண்டு எழுது.

அலெக்ஸாந்தர் எதிர்பார்த்தபடி டேரியஸ் அவனை அணுகவில்லை. எனவே இருவருடைய படைகளும் காகமேலா என்ற இடத்தில் கி. மு. 331-ம் வருஷம் மீண்டும் சந்தித்தன. அலெக்ஸாந்தரின் படை வெற்றி கண்டது. டேரியஸ் போர்க்களத்திலிருந்து தப்பியோட அவனை அலெக்ஸாந்தர் துரத்திக் கொண்டு சென்றான். ஆனால் வழியில் டேரியஸ் அவனுடைய தளபதிகளில் ஒருவனாலேயே கொலை செய்யப்பட்டுவிட்டான். பாரசீக ஏகாதிபத்தியத்தின் பெருவாழ்வும் மங்கி விட்டது.

---

*முதலாவது டேரியஸ்: ஆண்டது கி. மு. 521 முதல் 485-ம் வருஷம் வரை. இவன் கி. மு. 491-ம் வருஷம் கிரீஸின் மீது படையெடுத்துவந்ததே இங்கு குறிப்பிடப்படுகிறது.

### யாரோ அவர்?

வியாபாரி ஒருவர் தம் கடையின் பீரோவைத் திறக்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அடுத்த கணம் கடை வாசலில் நின்று கொண்டிருந்த ஒருவன் வந்து பீரோவை வெகு எளிதில் திறந்து கொடுத்து விட்டான்.

''ரொம்ப நன்றி! உனக்கு என்ன வேணும்?'' என்றார் வியாபாரி அந்த மனிதனிடம் மகிழ்ச்சியுடன்.

''போன தடவை உங்கள் பீரோவைத் திறந்த போது ஐயாயிரம் ரூபாய் கிடைத்தது. இந்தத் தடவை நீங்க இஷ்டப்பட்டதைக் கொடுங்கள்! பேரம் பேசத் தயாராக இல்லை!'' என்றான் அவன்.

# எல்லைப் புறத்தில்...

# லடாக்



உலகில் உள்ள எத்தனையோ நாடுகளில் வாழும் எத்தனையோ விதமான மக்களைவிட லடாக்கியர்கள் ரொம்பவும் உயர்ந்த மனிதர்கள். அவர்கள் இமயமலைச் சாரலில் கடல் மட்டத்திலிருந்து சுமார் ஒன்பதாயிரம் முதல் பன்னிரண்டாயிரம் அடி உயரம் வரையில் உள்ள பிரதேசங்களில் வாழ்கிறார்கள்! இதனால் மட்டும் அவர்களை உயர்ந்தவர்கள் என்று சொல்லவில்லை; பண்பாலும் உயர்ந்தவர்களே. என்றும் அமைதியை விரும்பும் எளிய மக்கள்; சாதுக்கள் இந்த லடாக்கியர்.

ஆனால் இவர்கள் வசிக்கும் பூமியோ இவர்களுடைய குணநலன்களுக்கு நேர் எதிரிடையான இயல்பு கொண்டதாயுள்ளது. பெரும்பாலும் கரடு முரடான மலைப்பாங்கான பிரதேசம்; நம்பவே முடியாத அளவுக்கு வறண்ட பூமி. கண்ணுக்கெட்டிய தூரம் மரங்களையோ பசுமையையோ காண முடியாத பகுதிகளில் ஈரப் பசையற்ற காற்று வீசிக் கருங்கல் துகள்களைப் புழுதியாக வாரி யடிக்கும். உஷ்ணமானியில் பாதரச மட்டம் ஒரேயடியாக மேலே ஏறும் அல்லது திடுதிப்பென்று மிகத் தாழ்வான நிலைக்கு இறங்கி விடும். காற்றின் அடர்த்தி கம்மியானதால் பத்தடி நடந்ததுமே இரைக்க ஆரம்பித்து விடும் நமக்கு! எத்தனை பெருமூச்சுக்களை விட்டாலும் நெஞ்சு நிரம்பியதாகத் தோன்றாது. சூரியக் கிரணங்களுடைய அல்ட்ரா வயலட் ரேகைகளை வடிகட்டுகிற சக்தி இந்த அடர்த்தி குறைவான காற்றுக்குக் கம்மியாக இருப்பதால் முகத்தில் 'கோல்ட் கிரீம்' தடவிக் கொண்டிருந்தாலொழிய எரிச்சல் கண்டு சிவந்து விடும். இந்த ஆபத்திலிருந்து தப்ப லடாக்கியப் பெண்மணிகள் கோல்ட் கிரீமுக்குப் பதிலாகச் சின்னஞ் சிறியதான ஒரு வகை 'செர்ரி' பழத்தின் சாற்றைப் பிழிந்தெடுத்து அத்துடன் அந்தப் பழத்தின் சிறிய விதைகளையும் கோலம் போட்டது போல் முகத்தில் (அலங்காரமாக!) ஒட்ட வைக்கிறார்கள். பழச் சாறு காய்ந்து இறுகும் போது தோல் இழுக்கப்படுகிறது. முகத்தில் உள்ள சுருக்கங்கள் நீங்கி விடுகின்றன. இவ்வாறாக அழகுக் கலையில் கைதேர்ந்தவர்களாக விளங்குகிறார்கள் லடாக்கியப் பெண்மணிகள்.

காற்றின் அடர்த்தி கம்மியாக இருப்பதாலும் ஈரப் பசையற்றிருப்பதாலும் சூழ்நிலையில் வேறு பல விநோதங்களாலும், கூப்பிடு தூரத்தில் உள்ள கிராமமாகக் கண்களுக்குத் தென்படுவது உண்மையில் ஏழெட்டு மைல்களுக்கு அப்பால் இருக்கும்; நாம் ஏமாந்து போவோம்! தொடுவானத்தையே இங்கே யாரும் காண முடியாது. சுற்றிச் சுற்றி வந்தாலும் மலைச் சிகரங்களையும் சரிவுகளையும்தான் பார்க்கலாம் நாலாபுறமும். வருஷத்துக்கு மூன்றங்குலத்துக்குமேல் மழை கிடையாது இந்தப் பூமிக்கு. மிக உயரமான மலைச் சிகரங்கள் கூட வெண்பனிக் கிரீடம் தரிப்பதில்லை. எனினும் சில பகுதிகள் ஏரிகள் மிகுந்திருக்கின்றன. இவற்றில் ஒன்றிரண்டு உப்பு ஏரிகள். பல மைல்கள் நீளமுள்ள குறுகலான கால்வாய்கள் கருங்கல் துகள்களைக்கூட வளப்படுத்தியுள்ளன. இங்கெல்லாம் விவசாயம் செழிக்கிறது. குடிசைத் தொழில்களும் நடக்கின்றன. மனிதன் மனம் வைத்தால் நடக்காதது என்ன? பார்லி, கோதுமை, பட்டாணி, டர்னிப், ஆப்ரிகாட்,



இடப் பக்கம்: தங்நகர் லேயின் ஒரு தோற்றம்.

கீழே: லடாக்கியர் இன்னிசை எழுப்பி ஆடிப்பாடி மகிழும் காட்சி.



ஆப்பின் ஆகியவற்றை லடாக்கியர் விளைவிக்கின்றனர். பார்லியிலிருந்து தயாரிக்கப்படுகிற 'சாங்'தான் இவர்களுக்கு மிகவும் பிடித்த பானம். விசேஷமான தினங்களில் மட்டுமே புலால் உண்பார்கள்.

இத்தகைய விசேஷ தினங்களில் ஒன்று திருமணம். பைராக் எனப்படுகின்ற தலையணியை ஒவ்வொரு லடாக்கியப் பெண்ணும் அணிந்திருப்பாள். அவளுடைய செல்வச் சிறப்பை இந்த ஆபரணமே ஆண் மகனுக்கு உணர்த்தி விடும். இதுவே அவர்களுடைய வரதட்சிணையும் ஆகும். சிறு வயது முதலே இந்த 'பைராக்'கைத் தயாரிக்கத் தொடங்கி விடுவாள் பெண். நாளாக ஆக அதில் விலையுயர்ந்த கற்களின் எண்ணிக்கை கூடுதலாகிக் கொண்டே போகும்.

கல்யாண நாளன்று மணமகன் தரையில் ஸ்வஸ்திக வடிவத்தில் வரையப்பட்ட கோலத்தில் அமருவான். அவனருகே மணப் பெண் தாமரை வடிவில் அமைந்த கோலத்தின் மீது உட்காருவாள். பட்டுத் துணி ஒன்றினை மணமகன் தலையில் சுற்றுவார்கள்; அவ்வளவுதான்! கல்யாணம் முடிந்து விட்டது!

லடாக்கில் பெண்களைவிட ஆண்களின் எண்ணிக்கை மிகவும் அதிகம். இதன் காரணமாய்த்தானோ என்னவோ ஒரே பெண் பலரைக் கணவர்களாய் அடைந்து வாழ்கிற வழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது.

திருமண வைபவத்துக்குப் பின் தம்பதியும் நெருங்கிய உறவினர்களும் ஒன்று கூடி நாட்டியமாடுவார்கள். குழலும், தாளமும், மத்தளமும் ஒலி எழுப்பும். விர்ரென்று சுழன்றும் கரங்களை வீசியும் அவர்கள் ஆடுவார்கள். ஆண்கள் வர்ணக் கைக் குட்டைகளை உயர்த்தியும் தாழ்த்தியும் ஆடுவார்கள். பெண்கள் மொட்டு மலர்வதுபோல் விரல்களைக் குப்பியும் பிரித்தும் ஆடுவார்கள். நாட்டிய நாடகங்

---

மேலே: தலைநகர் லேயின் முக்கியமான நெடுஞ்சாலை. மலைச்சரிவிலுள்ள பல அடுக்கு மாடி கட்டிடங்கள் லடாக்கியரின் கலைத்திறனுக்குச் சான்று பகர்கின்றன. வலப்புறம் மலை ஆட்டுடன் மகிழ்ச்சி பொங்கத் தோற்றமளிக்கும் லடாக்கியன். சாதுக்களானாலும் லடாக்கியர் வீர மிக்கவர்கள்தான்.

கீழே: தாள வாத்தியங்களுடன் லாமாக்கள். மதலையின் புன்னகையில் பெருமிதமடையும் தாய்.





களும் நடைபெறும். நீரில் மூழ்கி இறக்க விருந்த அரசிளங் குமரியை ராஜகுமாரன் காப்பாற்றிவிட இருவரும் களிப்புக் கடலில் சேர்ந்து மூழ்குவதுபோல் ஒரு கற்பனை. போலோ விளையாட்டு விளையாடுவதுபோல் ஒரு நடனம். நடனங்களைப் பொருத்த வரையில் பிரமாதமான கலைத்திறனை அவர்களிடம் நாமெதிர்பார்க்க முடியாதுதான். என்றாலும், அந்த எளிய மக்கள் தங்கள் போக்கிலே சந்தோஷமாக, திருப்தியாக உள்ள நிறைவுடன் வாழ்கிறார்கள் என்பதைக் 'கவனிக்க வேண்டும். யாரைச் சந்தித்தாலும் மலர்ந்த முகத்துடன், ''ஜுலே!'', ஜுலே!'' (இன்றைய தினம் உங்களுக்கு நல்ல நாளாக அமையட்டும்) என்று முகமன் கூறுகிற அழகு ஒன்றே போதாதா? இத்தகைய அரிய குணங்களைப் பெற்றுள்ள எளிய மக்களைத்தான் இன்று சீனப் பேரபாயம் பயமுறுத்துகிறது.

ஜம்மு — காஷ்மீர் ராஜ்யத்தைச் சேர்ந்த லைரத் அல்லது லடாக் ஜில்லாவில் உள்ள மூன்று தாலுக்காக்களில் லடாக் தாலுக்காதான் மிகப் பெரியதும் கிழக்குப் புறத்தில் உள்ளதும் ஆகும். லடாக் தாலுக்காவின் மொத்தப் பரப்பளவு 26,000 சதுர மைல். இதில் 35,000 மக்கள் வாழ்கிறார்கள். அதாவது ஒரு சதுர மைலுக்கு ஒருவர் விதம். இதிலிருந்தே அதன் நிலவளத்தை ஒருவாறு ஊகிக்கலாம். ஜனத்தொகை அதிகமாகி இந்தப் பாலைவனப் பகுதியில் பஞ்சம் தலை விரித்தாடாதிருக்க லடாக்கியரின் தெய்வ பக்தியும் புலனடக்கமும் உதவுகின்றன. லடாக்கியரில் ஆறு பேர்களில் ஒருவர் பௌத்த மடாலயத்தில் சேர்ந்து சந்நியாசியாகக் காலத்தை ஓட்டுபவர்கள்தான்.

லடாக் தாலுக்காவின் 26,000 சதுர மைல்களில் 14,500 சதுர மைல்களைச் சீனர்களிடம் பறிகொடுத்துவிட்டு நிற்கிறோம் நாம். அப்படி இழந்த பகுதிகளில் டெம் — சோக் கிராமம் தவிர மற்ற எல்லாம் ஜனநடமாட்டம் ஏது மற்ற பிரதேசங்களாகும். எனினும் நிலவளமில்லாத பிரதேசம்தானே என்று நாம் அலட்சியமாய் இருந்து விடுவதற்கில்லை. நமக்கு மானம் பெரிது என்பது மட்டுமல்ல காரணம்; சீனர்களின் வஞ்சனையை நாம் நன்கு அறிந்திருப்பதோடு ராணுவ ரீதியில் இந்த எல்லைப் புறப் பகுதியின் முக்கியத்துவத்தையும் நாம் உணர்ந்திருக்கிறோம். தங்களால் ஆக்கிரமிக்கப்பட்ட இடங்களில் சீனர்கள் பல சாலைகளை அமைத்துப் போக்குவரத்து வசதிகளைச் செய்து கொண்டுள்ளனர். மேற்கொண்டு படையெடுப்புக்கான முஸ்தீப்புகள் மும்முரமாக நடக்கின்றன. இந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது சென்ற மாதம் இருபத்தி மூன்றும் தேதியன்று பத்திரிகைகளில் வெளியான ஒரு தகவல் திடுக்கிட வைப்பதாகவே உள்ளது. சீனர்கள் தாங்கள் ஏற்கனவே ஆக்கிரமித்துள்ள ஏராளமான பிரதேசங்களைத் தவிரப் புதிதாகச் சில இடங்களைக் கைப்பற்றிக் காவல் நிலையம் ஒன்றினையும் அமைத்திருப்பதாய் அச் செய்தி கூறுகிறது. கொழும்பு ஆலோசனைகளைப் புறக்கணித்தும், போர்நிறுத்த எல்லைகளை மீறியும் சீனச் சிப்பாய்கள் வடக்கு லடாக்கைச் சேர்ந்த காரகோரம் பகுதியில் உள்ளே புகுந்திருப்பது அவர்களுடைய வஞ்சனையைப் பற்றி நாம் அறிந்திருப்பனவற்றை யெல்லாம் உறுதிப் படுத்தவே செய்கிறது.

இந்த நிலையிலும் லடாக்கியர்கள் தொடர்ந்து அமைதி இழக்காமல், பரபரப்பு அடையாமல் கண்ணியத்துடனும் தைரியத்துடனும் தங்கள் அன்றாட அலுவல்களைக் கவனித்துக் கொண்டு போகின்றனர். பாரத அரசாங்கமும் மக்களும் தம்மைக் கைவிட்டு விட மாட்டார்கள் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருக்கிறது. நடக்கிற மூன்றாவது திட்டத்தில் நாட்டின் பாதுகாப்புக்குச் செலவிடப்படும் ஏராளமான தொகையைத் தவிர முப்பத்தி நாலரைக் கோடி ரூபாய்களுக்கு மேல் எல்லைப்புறப் பகுதிகளின் அபிவிருத்திக்காகவே செலவழிக்கப் பாரத அரசாங்கம் முடிவு செய்திருப்பதை அறிந்திருப்பதுடன் அதன் பலன்களையும் இப்போது முதலே சிறிது சிறிதாக உணரவும் ஆரம்பித்திருக்கிறார்கள்.

சீனர்கள் மறந்து விட்டதாய்த் தோன்றும் சரித்திர காலத்தில் தனியானதொரு நாடாகத் திகழ்ந்த போது லடாக், மேற்குத் திபெத்தின் பெரும் பகுதியைத் தன்னகத்தே கொண்டிருந்தது. பத்தாம் நூற்றாண்டில் அரச வம்சத்தினரிடையே குடும்பப் பிரிவினை நேர்ந்ததன் காரணமாகத்தான் லடாக்கின் பெரும் பகுதி திபெத்துடன் இணைந்து விட்டது. அந்த ஆரம்ப நாட்களில் லடாக்கில் முதலில் குடியேறியவர்கள் பால்டிஸ்டானிலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் காஷ்மீரத்திலிருந்தும் வந்தவர்கள். மூவரும் ஒற்றுமையாக இணைந்து வாழ்ந்தார்கள். அவர்களுடைய சந்ததியினரே இன்று லடாக்கியர் எனப் பெயர் பெற்றிருப்பவர்கள். இம்மூவரும் வருகையிலேயே லடாக்குக்குப் போலோ விளையாட்டும், இன்னிசைக் கருவிகளும், பௌத்த மதமும் வந்து விட்டன. குதிரைகளின் மீது ஆரோகணித்துப் பாய்ந்து சென்றபடியே பந்தை மட்டையால் தட்டிப் போலோ விளையாடுவதில் லடாக்கியர் கைதேர்ந்தவர்கள்.

இவர்களுடைய அபாரமான கலைத் திறன்களையெல்லாம் பௌத்த மடாலயங்களில் காணலாம். தலைநகரான 'லேஹ்' லும் ஹைமிஸ், லாமாயுரு ஆகிய ஊர்களிலும் அமைந்துள்ள கோட்டைகள் போன்ற பிரும்மாண்டமான மடாலயங்கள் லடாக்கியரின் கட்டடக் கலைச் சிறப்புக்கு மட்டுமல்ல, உன்னதமான ஓவியக்கலை, சிற்பக்கலை, நுணுக்கமான மர வேலைப்பாடுகள் ஆகியவற்றுக்கும் சான்று பகர்கின்றன. செங்குத்தான மலைச் சரிவுகளில் பல அடுக்கு மாடிக் கட்டடங்களைப் பார்க்கவே பிரமிப்பாக இருக்கும்.

காஷ்மீரின் தலைநகரான ஸ்ரீநகரையும் லடாக்கின் தலைநகரான 'லே'யையும் இணைக்கும் முக்கியமான சாலை நேற்று வரை உண்மையில் ஒரே குதிரை நடக்கக் கூடிய அகலத்தில் உள்ள குறுகலான பாதைதான்! எதிர்ப்படும் ஆறுகளுக்கு மேலாகக் குறுக்கே இரண்டு மரங்களை வெட்டிப் போட்டுப் பாலம் அமைத்திருப்பார்கள். இதன் மீது நடக்க மனிதன்

துணியலாம். ஆனால் குதிரைகள் முரண்டு செய்யும் !

எப்படியோ அவற்றைத் தட்டிக் கொடுத்து மேலே சென்றோமானால் வறண்ட பாலைவன மாகத் தோன்றும் அப்பகுதியில் ஒரு நீண்ட சுவர் தனித்து நிற்கும். ''இது எதற்காக? எதனைக் காக்கிறது இந்தச் சுவர்?'' என்று யோசித்துக் கொண்டே கிட்டே நெருங்கு வோம். அந்தச் சுவரைக் கட்டப் பயன்படுத் தப்பட்ட ஒவ்வொரு கல்லிலும் புத்த பகவா னுக்கான ஒரு பிரார்த்தனை செதுக்கப்பட் டிருப்பதைக் கண்டு வியப்போம். அப்போது நம் குதிரையின் கழுத்தில் கட்டப்பட்டிருக் கும் மணியின் வெண்கல நாதமும் எழுந்து நம்மைப் பக்தி பரவசத்தில் ஆழ்த்தும்!

இன்னேரிடத்தில் தென்படும் பௌத்த மடாலயத்தினுள்ளே நுழைந்து செல்வோம். செருப்புக் கடையில் வைக்கப்பட்டுள்ள அடுக் கடுக்கான பெட்டிகள் போல் அங்கே கட்டுக் கட்டாக எதையோ அடுக்கி வைத்திருப் பார்கள். ஒரு கட்டை எடுத்துப் பிரித்தால் பண்டைக் காலத்தில் பௌத்த மத குரு மார்கள் அரும்பாடுபட்டு அச்சடித்த அரிய பொக்கிஷங்கள் அவை என்பது புரியும். பல நாட் கணக்கில், மாதக் கணக்கில் தவ மிருப்பது போன்ற பொறுமையுடன் மரக் கட்டைகளைச் செதுக்கி 'பிளாக்' செய்து, அந்தப் பிளாக்குகளின் உதவியுடன் அச்சடிக் கப்பட்ட தாள்கள் அவை. தனித்தனியாக உள்ள அந்தக் காகிதங்களை 'பைண்டு' செய் யாமல் பட்டுத் துணியில் சுற்றி மரப் பலகை களுக்கிடையில் கொடுத்து ஒன்று சேரக் கட் டித்தான் அங்கே ஆள் உயரத்துக்கு அடுக்கி வைத்திருக்கிறார்கள். இவ்வளவு நூல்களை யும் தயாரிக்க எத்தனை பௌத்த மதகுரு மார்கள் எத்தனை வருஷங்கள் பாடுபட்டிருக்க வேண்டும்? அச்சகக் கலையின் ஆரம்ப காலத்தி லேயே அதனை ஆண்டவனுக்கு அர்ப்பணித்த அவர்களை மனதார வாழ்த்திக் கொண்டே மேலே செல்வோம்.

தபால்களை எடுத்துக் கொண்டு ஒரு ரன்னர் ஓடி வருவான். மூன்று மைல்களுக்கு ஒருவன் வீதம், இவர்களிடத்தில் 'ரிலே' விளையாட்டுப் போலத் தபால் பை கைமாறும்.

இவர்களும் சரி, பொதுவாக எல்லா லடாக் கியருமே சரி, இடுப்பில் தங்கள் பிரயாணத் துக்கு அவசியத் தேவைகளான சிறு பிச்சுவாக் கத்தி, சக்கி முக்கிக் கற்கள், தேயிலை, புகை யிலை இவற்றை வைத்திருக்கும் பைகள், தேயிலைப் பானத்தைக் கடையும் மத்து, புகை பிடிக்கும் குழல் போன்றவற்றைச் செருகி யிருப்பார்கள். லடாக்கியப் பெண்களைவிட ஆண்களுக்கே நகைப் பைத்தியம் அதிகம்!

தலைநகர் 'லே'க்கு அருகிலும் வேறு பல இடங்களிலும் ஆலயங்கள் போல் தோன்றும் லாமாக்களின் சமாதிகளைக் காணலாம்.

லாமாக்கள் இறந்து சாம்பரானதும் அந்தச் சாம்பருடன் கொஞ்சம் களிமண்ணையும் கலந்து உருட்டுவார்கள், முத்திரை பதிப் பார்கள். பின்னர் இவற்றை இந்தச் சமாதி களில் உள்ள பொந்துகளில் வைப்பார்கள்.

லாமா தினத்தன்று மக்கள் கரத்தையும் முழங்காலையும் தரையில் ஊன்றித் தவழ்ந்த படியே தலைமை லாமாக்களை அணுகி அவர்

பிராணிகளிடம் கருணையாயிருக்க வேண்டியதைப் பற்றி உபாத்தியாயர் பையன்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார். பிறகு அருகில் இருந்த ராமுவிடம், ''அந்த மாதிரி எப்போதாவது கருணையுடன் நடந்து கொண்டிருக்கிறாயா?'' என்றார்.

''ஓ! பேஷாக!'' என்றான் ராமு. ''என் சிநேகிதன் நாய் மீது கல்லை விட்டு அடிச்சான் என்பதற்காக நான் அவனுக்குப் பலமாக ஒரு உதை கொடுத்தேனே !''

களுக்குத் தங்கள் காணிக்கைகளைச் சமர்ப்பிப் பார்கள். பின்னர் மதகுருமார்களின் நாட் டிய நடனங்களும் நடக்கும். விநோதமான உருவங்களில் முகமூடிகள் அணிந்து தோன்று வார்கள். மக்களுக்கு நன்மை தீமைகளை எடுத்துரைப்பார்கள்.

ஸின்கியாங்கிலிருந்து காரகோரம் கண வாய் வழியாக வரும் கம்பளியைத் தலைநகர் லேயில் காஷ்மீரி வியாபாரிகள் வாங்கு வார்கள். ஸ்ரீநகர் போய்ச் சேரும் கம்பளித் துணியில் நேர்த்தியானதும், கலை நுணுக்கம் மிக்கதுமான வேலைப்பாடுகள் செய்த பின் னர் அது உலகின் பல பாகங்களுக்கும் ஏற்று மதியாகும்.

காவலுக்கும், வேட்டைக்கும் லடாக்கிய ருக்கு மிகவும் பயன்படுவது திபெத்திய நாய். உற்ற தோழனுகிய நாயை அவர்கள் மிகவும் அன்புடன் வளர்ப்பார்கள். 17,000 அடி உயரத்திலும் வாழும் காட்டுக் கழுதை களும், ஆடுகளும், எருமைகளும் இவர்களுக்கு உபயோகமாக உள்ளன. இந்த வாயில்லா ஜீவன்களை மட்டுமே நம்பி லடாக்கியர் திருப்தியுடனும், மகிழ்ச்சியுடனும் மலைப் பகுதிகளில் சுதந்திரமாகக் கவலையற்று வாழ்ந்து வந்தார்கள் நேற்று வரையில். ஆனால் இனிமேல் அப்படி அவர்கள் நிம்மதி யாக வாழ முடியாது; வாழச் சீனர்கள் விட மாட்டார்கள்.

இந்தக் கட்டுரையை எழுதிக் கொண் டிருக்கும்போதே தங்களால் கைதாக்கப்பட்ட இந்தியச் சிப்பாய்களைச் சீனர்கள் எவ்வளவு மிருகத்தனமான வகையில் சித்திரவதை செய்து கொன்றிருக்கிறார்கள் என்பது பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வருகின்றன. காயம்பட்ட தங்களுடைய சகோதர சீனர் களைச் சுமந்து போவதையே அவர்கள் பார மாகக் கருதிச் சாகவிட்டுச் சென்ற தகவல் களும் வெளியாகி வருகின்றன.

இப்படிப்பட்ட சீன அரக்கன் எல்லைக் கோட்டில் நின்று கொண்டிருக்கையில் லடாக் கியர் நிம்மதியாக வாழ்வது எப்படி?

எனினும் பழக்கமில்லாத இந்தப் பிராந் தியத்தில் பல கஷ்ட நஷ்டங்களைப் பொறு மையுடன் சமாளித்துக் கொண்டு வந்து தங் களுக்குப் பாதுகாப்பாகத் தண்டு இறங்கி யிருக்கும் பாரத நாட்டு வீரர்களைப் பார்க் கும்போது லடாக்கியர் புதுத் தெம்பும் உற்சாகமும் பெறுவார்கள், நிச்சயம்!

# பொன் விலங்கு

## மணிவண்ணன்

### இருபத்தேழாவது அத்தியாயம்

இரவோடு இரவாகவே காரில் நாட்டரசன் கோட்டையிலிருந்து மதுரைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். கலியாண வீட்டில் பணம் வாங்கிக் கொள்ள மறுத்து ஆத்திரமாக வெளியேறியிருந்த காரணத்தினால் காரில் திரும்பி வரும் போது கண்ணாயிரமும் அம்மாவும் மோகினியிடம் மிகவும் கடுகடுப்போடு இருந்தார்கள். ''மரியாதைக் குறைவாக நாலு பேருக்கு முன்னாலே எடுத்தெறிஞ்சு பேசிப்பிட்டு விறுவிறுன்னு நடந்து போய்க் காரிலே உட்கார்ந்திட்டா மட்டும் போதுமாடீ? கொஞ்சம் புத்தியும் வேணும். நீ இப்பிடிச் செய்திட்டதாலே அவங்களுக்கு ஒண்ணும் பெருமை கொறைஞ்சிடப் போறதில்லே. உன்னைவெத்தான் அடங்காப் பிடாரி, முரண்டு பிடிச்சவ, அப்பிடி இப்பிடியின்னு வாயிலே வந்தபடி பேசுவாங்க'' என்று காரில் ஏறியதுமே ஒரு பாட்டம் வைது தீர்த்திருந்தாள் முத்தழகம்மாள். அம்மாவும், கண்ணாயிரமும் பின்தங்கியிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு வந்திருப்பார்கள் என்பது மோகினிக்குத் தெரியும். ஆனாலும் தாங்கள் சொல்லியபடி கேட்க வில்லை என்பதே அவர்கள் கோபத்துக்குக் காரணம் என்பது அவளுக்குப் புரிந்தது. அவர்களுடைய கோபத்தை அவள் சிறிதும் பொருட்படுத்த வில்லையாயினும் வேறு பல நினைவுகளால் உள்ளூற மனம் வெந்து கொண்டிருந்தாள் அவள். நாளுக்கு நாள் வாழ்க்கையே சாரமற்றுப் போய்க் கொண்டிருப்பது போல் தோன்றியது. அமைதியான அந்த இரவு நேரத்தில் நிலா ஒளியின் கீழ்க் காரில் எல்லோரோடும் சேர்ந்து பயணம் செய்து கொண்டிருந்த போதே மனத்தின் நினைவுகளால் அந்த எல்லாருடைய வழியிலிருந்தும் பிரிந்து வேறு ஒரு வழியில் போய்க் கொண்டிருந்தாள் அவள். வெளிப்படையாகத் தெரிந்தோ, தெரியாமலோ கண்ணாயிரமும் அம்மாவும் தன்னைச் சிறிது சிறிதாக வியாபாரப் பொருளாக்கிக் கொண்டு வருவதை அவள் உணர்ந்து மனம் கொதித்தாள். இப்போது காரில் முகத்தையும் மனத்தையும் கடுமையாக வைத்துக் கொண்டு அம்மா மௌனமாக வருகிறாளே; இந்த மௌனத்துக்கு விளைவு என்னவாக இருக்கும் என்பதும் மோகினிக்குப் புரிந்தது. வீட்டுக்குத் திரும்பியதும் தன்னை வாயில் வந்தபடி பேசிக் கடுமையாக நடந்து கொள்ளப் போவதற்கு அம்மாவின் இந்த மௌனம் ஒரு முன்குறிப்பு என்பது அவளுக்குப் பழகிய உண்மைதான். அம்மாவின் ஈவு இரக்கமற்ற சிந்தனையில் அவள் முதலில் அடிமை, அப்புறம்தான் மகள். இப்போதுதான் சிறிது காலமாக அம்மா அவளைத் தொட்டு அடிப்பதில்லை. முன்பெல்லாம் கோபம் அளவுக்கு மீறிப் போயிருக்கிற சில சமயங்களில் தலையைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளி அறைகிற அளவுக்கு அம்மாவின் கொடுமை எல்லை மீறிப் போயிருக்கிறது. இந்தக் கொடுமைகளில் இருந்தெல்லாம் விடுபடுவதற்கு ஒரே வழி சாவுதான் என்று தீர்மானம் செய்து கொண்டு சாக முயன்றும் முடியாமல் பிழைத்திருக்கிறாள் அவள். பட்ட துயரங்களையும், இனிமேல் பட வேண்டிய துயரங்களையும் நினைத்தபோது அழுகை குமுறிக் கொண்டு வந்தது. கார் போய்க் கொண்டிருந்த சாலையின் இருபுறமும் வறண்ட செம்மண் மேடுகளாயிருந்தும் அந்த நில வொளியில் அவைகளும்கூட அழகாகத் தோன்றின. சாலை மேல் நடு நடுவே அங்கொன்றும் இங்கொன்றுமாகக் குறுக்கிட்ட செழிப்பில்லாத கிராமங்கள் அரவமின்றி உறங்கிப் போயிருந்தன. சாலையும், சாலையின் இருபுறமும் செழிப்பும் பசுமை





யும் இல்லாமல் ஆனுல் நிலவொளியால் வெளிப் பார்வைக்குச் செழிப்பும், பசுமையும் உள்ளது போல் மயக்கிக் கொண்டு அவனுடைய வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படி இருந்தன. முன் ஸீட்டில் டிரைவருக்கு அருகில் அமர்ந்து அவன் தூங்கி விடா மல் இருப்பதற்காகப் பேச்சுக் கொடுத்துக் கொண்டு வந்தார் கண்ணுயிரம். அம்மா அரை குறைத் தூக் கத்தில் இருந்தாள். மோகினி இரைந்து அழப் பயந்து மௌனமாக அழுது கொண்டிருந்தாள்.


பூவேலை ஆடையை ஒரேயடியாக மாற்றிவிட்டதே!
குறிப்பாக எங்கள் வாயில், பாப்ளின், சின்ட்ஸ் போன்ற துணிகளில் அச்சிடப்பட்டுள்ள உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் அழகிய பூவேலைகளைக் கவனியுங்கள். கணக்கற்ற கண்கவர் வர்ணங்களில், நவீன மோஸ்தரிலோ, பண்டைய பாணியிலோ புடவைகள், ஸல்வார் கமீஸ் ஜோடிகள், ஆட்டநேர ஆடையணிகள் எதையுமே நீங்கள் உயரிய வகையில் அமைத்துக் கொள்ளலாம். அவற்றின் அமைப்பு வகைகளோ எவருடைய சுவைக்கும் ஈடுகொடுப்பவை.
ஸாயாஜி மில்ஸ் நெ. 1, பரோடா
ஸாயாஜி மில்ஸ் லிட்.. அஹமதாபாத்தின் ஒரு பிரிவு. சுபலக்ஷ்மி மில்ஸ் லிட்.. கேம்பே.
PSY-6-TAM

கார் போய்க் கொண்டிருந்த வேகத்தில் காற்று சில்லென்று முகத்தில் வந்து மோதியது. கூந்தல் முன் நெற்றியில் சரிந்து புரண்டது. இருந்தாற் போல் இருந்து காரின் வேகம் குறைந்து சாலையில் ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டு போயிற்று. கடைசியில் ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு நின்றது. 'டயரில் லாடம் அடித்துப் 'பஞ்சர்' ஆகிவிட்டதுங்க' என்று கீழே இறங்கி டயரைத் தொட்டுப் பார்த்து விட்டுச் சொன்னான் டிரைவர். கண்ணாயிரமும் கீழே இறங்கினார். அம்மா விழித்துக் கொண்டு, 'என்ன ஆச்சு? ஏன் நிற்கிறீங்க.....?' என்று விசாரித்தாள். 'டயர் பஞ்சராகிப் போச்சாம்' என்று பதில் சொல்லிக் கொண்டே மோகினியும் கீழே இறங்கினாள். அந்த இடத்தில் சாலையின் மேல் கார் நின்று போன பகுதியை ஒட்டி ஒரு சிறிய ஊருணியும் பத்துப் பன்னிரண்டு தென்னை மரங்களும் நடுவாக ஒரு குடிசையும் தெரிந்தன. குடிசை வாயிலில் தென்னை மரக் கீற்றோரம் கதிர் விரிக்கும் அழகிய நிலாவின் கீழ் நார்க் கட்டிலில் ஓர் இளம் பருவத்துக் குடியானவப் பெண்ணும் இளைஞனும் அமர்ந்து சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர். டயர் பஞ்சராகிக் கார் நின்று போய் விட்டதைப் பார்த்து அந்தப் பெண்ணும் இளைஞனும் எழுந்திருந்து சாலையோரமாக வந்தனர். காரையும், மோகினியையும், அவள் அம்மாவையும் ஏதோ பெரிய ஆச்சரியங்களைப் பார்ப்பது போல் பார்த்தார்கள் அவர்கள்.

"அத்தான்! யாரோ சினிமாக்காரங்க போலிருக்கு... அந்தப் பொண்ணைப் பாரு... ரதியாட்டமிருக்கா..."

"சும்மாருச்சும் காது குத்தாதேம்மே! உன்னைக் காட்டியுமா அவ அழகுங்கிறே?"

—அவர்கள் தங்களுக்குள் மிக மெதுவாகப் பேசிக் கொண்டிருந்தும் இந்த உரையாடலை மோகினியும் கேட்க நேர்ந்தது. தான் அழகு என்று அந்தப் பெண் தன்னைப் புகழ்ந்ததையும், தன்னை விட அவளே அழகு என்று அவளுடைய அரும்பு மீசைக் கட்டுக் குடுமிக் கட்டழகனான அத்தான் அவளைப் புகழ்ந்ததையும் கேட்டுத் தன்னுடைய வேதனைகளையும் மறந்து சிரிக்கத் தோன்றியது மோகினிக்கு. நெடுந்தூரம் ஆள் நடமாட்டமில்லாத அந்தப் பொட்டல் காட்டில் வாழ்க்கையின் சுகங்களுக்குப் பிரதிநிதிகளைப் போல் அந்தக் குடிசை வாசலில் அவர்கள் தோன்றினார்கள். குடிசைக்கு முன்னால் இன்னொரு பக்கமாக ஒரு வேப்ப மரத்தடியில் உட்காருவதற்கு வசதியான சதுரக் கல் ஒன்றிருந்தது. மோகினியிடம் ஒன்றும் சொல்லிக் கொள்ளாமலும் அவளையும் உடன்வருமாறு கூப்பிடாமலும் வேகமாக நடந்து போய் அந்தக் கல்லில் உட்கார்ந்து கொண்டாள் முத்தழகம்மாள். அம்மா வெடுக்கென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு போன வேகத்திலிருந்தே அவளுடைய கோபம் சிறிதுகூடத் தணியவில்லை என்பதை மோகினி புரிந்துகொள்ள முடிந்தது. கண்ணாயிரமும், டிரைவரும் ஜாக்கி கொடுத்துப் பஞ்சரான டயரைக் கழற்றி 'ஸ்டெப்னி' மாட்டும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். கீழே இறங்கி நின்ற இடத்தை விட்டு நகராமல் நின்று கொண்டிருந்த மோகினியை நோக்கி, "நீங்களும் போய் உட்காருங்கம்மா... ஸ்டெப்னி மாட்டியானதும் கூப்பிடறேன்" என்று கார் டிரைவர் கூறினான். அம்மாவுக்கும் கண்ணாயிரத்துக்கும் இல்லாத கருணை காரோட்டும் ஊழியனான அந்த ஏழையிடம் இருந்தது. அந்தச் சின்னஞ் சிறு கருணையைக் கூடக் கண்ணாயிரத்தினால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

"அவங்களுக்கு உட்காரத் தெரியும்; நீ உன் வேலையைக் கவனி..." என்று கண்ணாயிரம் அவனிடம் சீறினார். நியாயமான இரக்கமும் கருணையும் வசதியில்லாத ஏழைகளிடம் இருக்கின்றன. ஆனால் ஏழைகளுக்கு இரக்கமும் கருணையும் படுவதற்குக் கூடத் தகுதியில்லை என்பதுபோல் சமூகத்தில் உள்ள பெரிய மனிதர்கள் நினைக்கிறார்கள். தன்னிடம் கருணையோடு இரண்டு வார்த்தை பேசியதற்காகவே கண்ணாயிரம் அந்தக் காரோட்டும் ஊழியனிடம் அவ்வளவு எரிந்து விழுவதைப் பார்த்தபோது அதிலிருந்தே அவருடைய சுய ரூபத்தை மோகினியால் புரிந்து கொள்ள முடிந்தது. கண்ணாயிரத்தின் 'திருக் கல்யாண குணங்களை'ப் பற்றி அவள் புதிதாகப் புரிந்து கொள்வதற்கு ஒன்றும் மீதமில்லை என்றாலும் அவ்வப்போது தன்னைப் பற்றி அவள் சிந்தனை செய்வதற்கு நிறைய வாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்தார் கண்ணாயிரம். ஆனாலும் பொது இடங்களிலும் நாலு பேர் கூடி நின்று பேசும்போதும் அவரைப் போன்ற போலி மனிதர்கள் எல்லோருடைய கவனத்தையும் கவர்வது போல் நல்லவர்களால்கூடக் கவர முடியாது. மோகினிக்கு அவர் மேல் இவ்வளவு வெறுப்பும் கசப்பும் இருப்பதெல்லாம் உலகத்துக்குத் தெரியாது.

## ஞாபக மறதி !

இஸ்ரேல் நாட்டுக்குப் புதிய ஜனாதிபதியாக வந்துள்ள ஸல்மான் ஷாஸார் அவர்களுடைய ஞாபகமறதியைப் பற்றிப் பல ரஸமான கதைகள் உண்டு. அவற்றில் ஒன்று இதோ:

ஒரு முறை அவர் அமெரிக்க நாட்டில் பல ஊர்களில் பிரசங்கம் புரிய அழைக்கப்பட்டிருந்தார். ஒருதடவை அவர் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, திடீரென்று தன் பைகளைத் துளாவிப் பார்த்தார். அவரது ரயில் டிக்கெட்; அத்துடன் அவர் பணப்பையும் காணவில்லை. அவரது அவல நிலையைக் கண்டு பரிதாபப்பட்டு சகப் பிரயாணி ஒருவர், பணம் கொடுக்க முன் வந்தார். அதற்கு நன்றி தெரிவித்து விட்டு, ''உங்களிடம் பணம் வாங்கிக் கொள்வதனால் என்ன பிரயோசனம்? எனக்குத்தான் எந்த ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன் என்பது மறந்து விட்டதே!'' என்றாராம்.

மோகினியும் முத்தழகம்மாளும் அவரை வழிகாட்டியாகக் கொண்டு அவர் சொல்கிற இடத்தில் நாட்டியமாடி அவர் வேண்டாமென்று மறுக்கிற இடத்தில் ஆட ஒப்புக்கொள்ளாமல் வாழ்வதாக உலகத்தை மயக்கி வைத்திருந்தார் கண்ணாயிரம். அவருடைய வாழ்க்கைத் தத்துவமே தனியானது. தனி வாழ்க்கையில் அவர் கெட்டவராக இருந்தாலும் பொது வாழ்க்கை அவரை நல்லவராகவும் பிரமுகராகவும் ஒப்புக் கொண்டிருந்தது. எதிரே நின்று பேசுகிற மனிதரிடமிருந்து எந்த விதமான குரல் ஒலிக்கிறதோ அந்தக் குரலை அப்படியே எதிரொலித்து அவரோடு ஒட்டிக் கொண்டு பழக முயல்வது கண்ணாயிரத்துக்குக் கைவந்த பழக்கம். ஒவ்வொரு துறையிலும் அவர் பழகுகிற மனிதர்களும் பழக்க வழக்கங்களும் எல்லாம் இப்படித்தான். 'நீங்க சொல்றுப்பிலே' —என்ற வார்த்தைகளை நாலு தரம் எதிரே இருப்பவரிடம் குழைந்து சொல்லி அவர் சொல்கிற ஒவ்வொன்றையும் தாம் கர்ம சிரத்தையாகக் கவனித்து மனதில் வைத்துக் கொள்வதைப் போல் நடித்துவிட்டாரானால் அப்புறம் அந்த மனிதன் கண்ணாயிரத்தின் வலையில் சுருண்டு விழுவதற்குக் கேட்பானேன்? எதிராளி ஒன்றுமே சொல்லாவிட்டாலும் அவர் எல்லாவற்றைப் பற்றியுமே சொல்லிக் கொண்டிருப்பது போல் பாவித்துக் கொண்டு 'நீங்க சொல்றுப்பிலே' — என்று நடுநடுவே தழுவிக் கொண்டு பேசுவது ஒரு வகைச் சாமர்த்தியம். அந்தச் சாமர்த்தியம் கண்ணாயிரத்திடம் தாராளமாக இருந்தது. அரசியலைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறவரிடம் கண்ணாயிரமும் அதைப் பற்றியே அளந்து விடுவார். சினிமா, நாடகம், சங்கீதம் போன்ற கலைகளைப் பற்றியே பேசுபவர்களிடம் அவைகளைப் பற்றி நிறையத் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பவரைப் போல் பேசுவார். கண்ணாயிரம் சாப்பாட்டில் வெஜிடேரியனு, நான்வெஜிடேரியனு என்று பலருக்கு நிரந்தரமாக ஒரு சந்தேகம் உண்டு. இந்தப் பெரிய சந்தேகத்தை மிகவும் சுலபமாகத் தீர்த்து வைக்க முடியும். அவர் வெஜிடேரியன்களுக்கு நடுவில் வெஜிடேரியன். நான்வெஜிடேரியன்களுக்கு நடுவில் நான்வெஜிடேரியன். இன்னும் அந்தரங்கமாகவும் உண்மையாகவும் சொல்லப் புகுந்தால் மனிதர்களையே அடித்துச் சாப்பிட நினைக்கும் அளவுக்குப் பயங்கரமான 'நான்வெஜிடேரியன்' அவர். கண்ணாயிரத்தைப் போன்ற மனிதர்களைச் சமூக வாழ்க்கையிலிருந்தே நீக்கிச் சாய்த்து வீழ்த்திவிட வேண்டுமென்று பலர் நினைக்கலாம். ஆனால் கண்ணாயிரம் நிச்சயமாக வீழ்ச்சி அடைய மாட்டார். ஒரு பக்கமாகச் சாய்த்து விட்டால் இன்னொரு பக்கமாக நிமிர்ந்து கொண்டு வாழக்கூடிய வல்லமை அவருக்கு உண்டு. அவர் தஞ்சாவூர்ப் பொம்மையைப் போன்றவர். எந்தப் பக்கம் சாய்த்து விட்டாலும் நிமிர்ந்து நின்றுவிடும் வலிமை உள்ளவரை எத்தனை முறை எப்படி வீழ்த்தினாலும் பயனில்லைதான். அந்த வெட்ட வெளியில் நடுச்சாலையில் நடு இரவில் கண்ணாயிரம் நிமிர்ந்து நின்று கொண்டு கார் டிரைவரை வேலை வாங்கியபோது மோகினி இப்படி நினைத்தாள். அந்தக் கிராமத்துப் பெண்ணும் அவளுடைய அத்தானும் மோகினியைக் குடிசை வாசலுக்கு வந்து கட்டிலில் உட்காரும்படி பரிவோடு அழைத்தார்கள். ''எவ்வளவு நேரம் தான் இப்பிடி நின்னுக்கிட்டிருக்கப் போறீங்கம்மா? வந்து உட்காருங்களேன். காலாறக் கொஞ்ச நேரம் இருந்திட்டுப் பெறவு போகலாம்...'' என்று அருகில் வந்து கையைப் பிடித்து இழுக்காத குறையாகக் கெஞ்சினாள் அந்தப் பெண். கட்டுக் குலையாத உடம்பும் வெற்றிலைக் காவி ஏறிய இதழ்களும், கோணல் சொருக்குக் கொண்டையுமாக அந்தக் கிராமத்துப்

பெண் மிகவும் அழகாகத்தான் இருந்தாள். அவளுடைய அத்தானோ கன்னுக் குடுமியும் காதில் சிவப்புக் கல் கடுக்கனும் வாயில் புன்னகையுமாக ஆண்பிள்ளைச் சிங்கம் போல் அருகில் நின்று கொண்டிருந்தான். 'இவளுக்கு நான் காவல். இவள் என்னுடையவள்' என்ற பெருமிதத்தோடும் ஆண்மையோடும் அவளுடைய அத்தான் அவளருகே நிற்பது போல் தோன்றியது. அதே போல் சத்தியமூர்த்தி தன்னருகே வந்து நிமிர்ந்து நிற்க வேண்டும் போல அவள் தன் மனத்துக்குள் அந்த ரங்கமாகக் கற்பித்துக் கொண்டு மகிழ்ந்தாள். அந்தக் கற்பனையால் மகிழ்ச்சியும் அது கற்பனைதான் என்பதால் ஏக்கமும் அவளைத் தாக்கின. குடிசை வாசலில் கட்டிலில் வந்து உட்காரும்படி அந்தப் பெண் இரண்டு மூன்று முறை மோகினியை அழைத்தும் அவள் அதற்குச் செவி சாய்க்கவில்லை. "நீ ஏனம்மே வேலை மெனக்கெட்டுத் தொண்டைத் தண்ணி வத்துறே? இந்தக் குடிசையிலே நார்க் கட்டில்லே வந்து உட்காரச் சொல்லி அவுகளை நாம கூப்பிடலாமா?" என்று தன்னுடைய மௌனத்தை அலட்சியமாகப் புரிந்து கொண்ட அவளுடைய அத்தான் அவளைக் கண்டிப்பதுபோல் கோபிப்பதையும் மோகினி கவனித்தாள். அதற்கு மேலும் அவர்களுடைய பொறுமையைச் சோதிக்க விரும்பாதவளாய் அந்தப் பெண்ணோடு நடந்து போய் நார்க் கட்டிலில் உட்கார்ந்தாள் மோகினி. மோகினியுடன் அவளுக்கு இணையாகக் கட்டிலில் உட்காருவது மரியாதைக் குறைவு என்று கருதியவளைப் போல் அந்தக் கிராமத்துப் பெண் மோகினிக்கு எதிரே அவள் காலடியில் தரை மேல் உட்கார்ந்தாள். மேலே வந்து தன்னோடு கட்டிலில் உட்காரும்படி மோகினி எவ்வளவோ வற்புறுத்தியும் அந்தப் பெண் கேட்கவில்லை. 'மனிதர்களுக்கு விட்டுக் கொடுத்து மரியாதை செய்வதில்தான் இந்த நாட்டுப்புறத்து மக்களுக்கு எவ்வளவு பெருந்தன்மை?' என்றெண்ணித் தன் மனத்துக்குள் அவளை வியந்தாள் மோகினி.

"தாகத்துக்கு எதினாச்சும் மோர்—தண்ணீர் — கொண்டாந்து தரட்டுமா அம்மா?" என்று மோகினியை அவளோடு விசாரித்தாள் அந்தப் பெண். மோகினிக்குத் தாகமாக இருக்கவே, 'தண்ணீர் இருந்தால் போதும்' என்றாள் அவள். உடனே அந்தப் பெண் உள்ளே எழுந்து போய்த் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். அந்தப் பெண் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்த பழைய காலத்து வெண்கலச் செம்பு இடியாகக் கனத்தது. அந்தத் தண்ணீர்ச் சொம்பைப் போலவே வாழ்க்கையின் பண்புகள் அங்கே அந்த நாட்டுப்புறத்தில் கனமாகவும் அழுத்தமாகவும் இருப்பது போல் தோன்றியது அவளுக்கு. "நீங்க பயாஸ்கோப்பிலே 'ஆக்ட்' பண்ணுறீங்களா அம்மா?" என்று தண்ணீர்ச் சொம்பைத் திருப்பி வாங்கிக் கொண்டே மோகினியைக் கேட்டாள் அந்தப் பெண். 'வாழ்க்கையே நடிப்பாகத்தான் இருக்கு. இன்னும் அது ஒன்றுதான் குறை' என்று அந்தப் பெண்ணுக்கு மறுமொழி கூற நினைத்து அப்படிக் கூறுவதனால் ஒருவேளை அந்தப் பெண்ணின் மனம் புண்படலாமோ என்று தயங்கியவளாய் இல்லை என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் அசைத்தாள் மோகினி. அந்தப் பெண் தண்ணீர்ச் செம்போடு குடிசையின் உள்ளே நுழையவும் தொலைவில் தயங்கி நின்று கொண்டிருந்த அவளுடைய அத்தானும் பின் தொடர்ந்து வந்து அவளோடு உள்ளே சென்றான். அடுத்த சில விநாடிகளில் உள்ளேயிருந்து மெல்லிய பேச்சுக் குரல்களும் சிங்காரச் சிரிப்பொலிகளும் மாறி மாறி ஒலித்தன. கால் நாழிகைக்கெல்லாம் அந்தப் பெண் வெளியே வந்த போது அவள்மேல் எதற்காகவோ தான் பொறாமைப்பட வேண்டும் போலிருந்தது மோகினிக்கு. அந்தப் பொறாமையை அவளால் தவிர்க்கவும் முடியவில்லை.

> **பொன் விளைந்த**
>
> நியாயமான இரக்கமும் கருணையும் வசதியில்லாத ஏழைகளிடம் இருக்கின்றன. ஆனால் ஏழைகளுக்கு இரக்கமும் கருணையும் படுவதற்குக் கூடத் தகுதியில்லை என்பதுபோல் சமூகத்தில் உள்ள போலிப் பெரிய மனிதர்கள் நினைக்கிறார்கள்.

"ஊருணிக் கரையிலே அத்தான் வெள்ளரித் தோட்டம் போட்டிருக்காங்க. நல்ல பிஞ்சா ஒரு கூடை பறிச்சுக் குடுத்திருக்காங்க. ஊருக்குக் கொண்டு போங்களேன்" என்று மோகினியை உபசாரம் செய்தாள் அந்தப் பெண். "எதற்கு வீண் சிரமம்? வேண்டாம்" என்று மோகினி மறுத்தும் அவளுடைய அத்தானும் அவளும் கேட்க

இந்திய தேசியப் போராட்டத்தில் அமரத்துவம் பெற்ற ராணி லக்ஷ்மி பாய் போரில் படுகாயமுற்று, ரத்தம் பெருக்கோட, தாகத்தினால் அவதியுற்றுக் கிடந்தாள். அவளுக்குத் தண்ணீர் கொடுக்க ஒரு வைத்தியர் அனுப்பப்பட்டார்.

ராணி லக்ஷ்மிபாய் அந்த வைத்தியரைப் பற்றிய விவரங்களை வினவினாள். ''நான் உயர் வகுப்பு இந்து. நான் பிரிட்டிஷ் படையில் வைத்தியராகப் பணியாற்றுகிறேன்!'' என்று பெருமையுடன் கூறினார் அந்த வைத்தியர்.

''தேசியப் படையைச் சேர்ந்த எந்தக் கீழ்த்தர வகுப்பைச் சேர்ந்தவனிடமும் தண்ணீர் கொடுத்தால் தயங்காமல் வாங்கிக் குடித்து விடுவேன். ஆனால் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த நீ என் எதிரி கோஷ்டியைச் சேர்ந்தவன். உன் கையால் வாங்கிக் குடித்தால் எனக்குக் கதி மோட்சமில்லை!'' என்று கூறி அந்தத் தண்ணீரைக் கொட்டி விட்டாள் ராணி லக்ஷ்மிபாய்.

வில்லை. அந்த நிலாவில் அவளிடம் கொடுத்தனுப்புவதற்கு வெள்ளரிப் பிஞ்சு பறித்துக்கொண்டு வருவதற்காகக் கூடையை எடுத்துக் கொண்டு ஊருணிக் கரையை நோக்கி நடந்தான் அவளுடைய அத்தான். காரில் அம்மாவும் கண்ணாயிரமும் கலியாண வீட்டிலிருந்து வாங்கிக் கொண்டுவந்த ஆப்பிள் பழங்கள் ஒரு கூடையில் நிறைந்து கிடந்தன. மோகினி அவசரம் அவசரமாக எழுந்திருந்து போய் அந்தக் கூடையிலிருந்து நாலைந்து ஆப்பிள் பழங்களை எடுத்துக் கொண்டு வந்து அந்தக் கிராமத்துப் பெண்ணிடம் கொடுத்தாள். அவற்றை வாங்கிக் கொண்டு அவள் மோகினியிடம் கேட்டாள்: ''இதென்ன பழம் அம்மா? நாங்க இதைப் பார்த்ததில்லே?''

''இதா? இதை ஆப்பிள்ம்பாங்க. நல்ல சத்துள்ள பழம். விலை அதிகம்.''

''அப்பிடிங்களா? கடிச்சுத் தின்னு வெள்ளரிப் பிஞ்சைக் காட்டிலும் நல்லாவா இருக்கும்?'' என்று அந்தப் பேதைப் பெண் வினவியபோது மோகினிக்குச் சிரிப்பு வந்து விட்டது. வெள்ளரிப் பிஞ்சை விட அதிகமான சுவையுள்ள பண்டமும் உலகில் இருக்க முடியுமா என்ற சந்தேகத்தோடு கேட்கப்படுவது போல் இருந்தது அவளுடைய கேள்வி. அந்தக் கேள்வியிலிருந்த பேதைமையின் அழகை ரசித்துக் கொண்டே மோகினி அவளுக்கு மறுமொழி கூறினாள்: ''உங்கள் வெள்ளரிப் பிஞ்சை ஒரு கூடை எட்டணாவுக்கு வாங்கி விடலாம். இந்த ஆப்பிள் ஒரு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாய் வரை ஆகுமே?''...

''அம்மாடீ! இதென்ன சீமையிலே இல்லாத விலையாவில்லெ இருக்கும் போலேயிருக்கு? ரொம்பப் 'பணக்காரப் பழம்னு' சொல்லுங்க...?'' என்று அந்தப் பட்டிக்காட்டுப் பெண் பாதி வேடிக்கையாகவும் பாதி பிரமிப்பாகவும் ஆப்பிளுக்குப் பணக்காரப் பழம் என்று பேர் வைத்ததைக் கேட்டுத் தன்னுடைய கவலைகளையெல்லாம் மறந்து மோகினி வாய் விட்டுச் சிரித்தாள். அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணையும் அவளுடைய பட்டிக்காட்டு அத்தானையும் அவர்கள் வசிக்கும் மகிழ்ச்சி நிரம்பிய அந்தக் குடிசையையும், அதனருகிலிருந்த ஊருணியையும் தென்னை மரங்களையும், இந்த உலகத்தின் குழப்பமில்லாத எளிய சந்தோஷங்களுக்குச் சின்னங்களாகக் கற்பித்துக்கொண்டு பார்ப்பது போல் பார்த்து ஏக்கத்தோடு பெருமூச்சு விட்டாள் மோகினி. மேடைகளில் நாட்டியமாடிப் பணத்தையும் புகழையும் சம்பாதித்துக் கொண்டு வாழ்க்கையின் நியாயமான உரிமைகளையோ, சுகங்களையோ கூடச் சம்பாதிக்க முடியாமல் வேதனைப்படும் தன்னைவிட வெள்ளரித் தோட்டத்து அத்தானுக்கு வாழ்க்கைப்பட்டு வாழ்க்கையைத் தவிர வேறு புகழ், பெருமைகளுக்கு ஆசைப்படாத அந்தப் பட்டிக்காட்டுப் பெண் எவ்வளவோ பாக்கியசாலி என்று தோன்றியது அவளுக்கு. அவளுடைய அத்தானின் கண்களுக்கு அவளைத் தவிர வேறெந்தப் பெண்களும் அழகாகத் தோன்றுவதில்லை. அவள் பாக்கியசாலி என்பதற்கு இதைவிட வேறென்ன சாட்சி வேண்டும்? அந்தப் பட்டிக்காட்டுத் தம்பதிகள் தங்களுடைய சின்னஞ் சிறு குடிசைக்குள் கலகலப்பாகச் சிரித்துப் பேசும்போது அந்தக் குடிசையைத் தவிர அதற்கு அப்பாலிருக்கும் பரந்த உலகில் வேறெங்கும், வேறெதிலும், இத்தனை திருப்தியும், நிம்மதியும் இருக்க முடியாது என்பதைப் போல் அத்தனை திருப்தியாகவும் நிம்மதியாகவும் சிரிக்கிறார்கள்; மகிழ்கிறார்கள்.

சமூக வாழ்க்கையில் கண்ணாயிரத்தை விடச் சிறந்த ஆண் மகன் இந்த வெள்ளரித் தோட்டத்து அத்தானாகத்தான் இருக்க முடியும். ஏனென்றால் இவன் யாரையும் ஏமாற்றி வாழ விரும்புவதில்லை. எவரையும் சார்ந்து நின்று வாழவும் விரும்புவதில்லை. தன் கையால்

# ஃப்ளிட்—
# உலகமெங்கும் பிரசித்தி பெற்ற
# கிருமிநாசினி




**எச்சரிக்கை!** மட்டரகமான போலிகளை வாங்கி ஏமாறுவதைத் தவிர்க்க ஸீலிட்ட அசல் டின்களிலேயே உள்ள ஃப்ளிட்டை கவனித்து வாங்குங்கள்.

எஸ்ஸோ ஸ்டாண்டர்ட் ஈஸ்டர்ன், இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

தனக்காக உழைத்து வாழுகிறான் இவன்: தன்னுடைய புகழுக்கும் பழிக்கும் தானே காரணமாக இருக்க வேண்டு மென்ற எச்சரிக்கையும், தன்னம்பிக் கையும் இவனுக்கு இருக்கின்றன. இவனுடைய மனைவி அதிக விலை கொடுத்துப் பெருமையோடு வாங்கித் தின்கிற ஆப்பிள் பழத்தை விட ஊருணிக்கரை மேட்டில் காய்க்கிற வெள்ளரிப் பிஞ்சில் சிறப்பாகச் சுவை கண்டிருக்கிறான். வாழ்க்கையில் இவர் களைப் போல் கொடுத்து வைத்த வர்கள் வேறெவர் இருக்க முடியும் என்றெண்ணிக் கொண்டே எதிரில் நின்ற அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணை உற்றுப் பார்த்தாள் மோகினி. அந்தப் பெண் வெட்கத்தோடு தலை சாய்த்துச் சிரித்துக் கொண்டே மோகினியை நோக்கிக் கேட்டாள்:

"என்னம்மா; என்னையே அப்பிடிப் பார்க்கிறீங்க....?"

"ஒன்றுமில்லை! இந்த இடத்தில் உங்களுடைய குடிசை ஒன்று மட்டும் தானா? வேறு வீடுகளே இல்லையா?" என்று சம்பந்தமில்லாமல் அவளிடம் வேறு எதையோ கேட்டுப் பேச்சை மாற்றினாள் மோகினி.

"நாங்க மட்டும்தான் தனியா இந்தக் குடிசையிலே இருக்கோம். நாங்களும் வெள்ளரித் தோட்டக் காவலுக்காக நாலு மாதம் இங்கே இருப்போம். அப்புறம் ஊருக்குள்ளாரப் போயிடு வோம். தோட்டம்னு போட்டுட்டா பாதை மேலே வாரவங்க, போறவங்க ளுக்கெல்லாம் கூடத் திருடணு மின்னு ஆசை வருது. பகலிலேதான் திருடறாங்கன்னு பார்த்தால் இராத்திரி இரண்டு மைலுக்கு அப்பாலே இருக் கிற டூரிங் பயாஸ்கோப் ரெண்டாவது ஆட்டம் விட்டுத் திரும்பி வார சனங்க வெள்ளரித் தோட்டத்திலே புகுந்து கைவைக்க ஆரம்பிக்கிறாங்க. அதுக்காக ராவுலேயும் காவல் இருக்க வேண்டி யிருக்கு. தோட்டம் பட்டுப் போய்க் காய்ப்பு தின்னப்புறம் கிராமத்துக் குள்ளே போயிடுவோம். அதுவரை அத்தானும் நானும் இங்கேதான் வாசம்"—என்றாள் அந்தப் பட்டிக்காட் டுப் பெண்.

"வெள்ளரித் தோட்டத்தில் மட்டு மில்லை! நாடு நகரங்களில் வீதி தெருக் களிலும் திருடர்கள் உண்டு பெண்ணே!" என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்டு சிரித்தாள் மோகினி. இதற்குள் அவ ளுடைய அத்தான் கூடை நிறைய வெள்ளரிப் பிஞ்சோடு திரும்பி வந் திருந்தான். அந்தக் கூடையைக்

மருத்துவக் கல்லூரிப் படிப்பு முடிந்து நரம்பு சர்ஜனாகப் பணியாற்றி வந் தான் அருமைத். அவுட் பேஷண்ட் டிபார்ட்மெண்டில் ஒரு பெண்மணி தினம் தினம் வந்து வம்பு வளர்த்தபடி இருந்தாள். ஒரு நாள், பொறுமை இழந்த அருமைத் "அம்மணி! உங்களுக்கு ஒரு நோயும் இல்லையே! எதற்குத் தினம் வருகிறீர்கள்?" என்று கேட்டான்.



'ஹாம்!' என்று ஏளனமாயும் அலட் சியமாயும் தலையை நொடித்தாள் அவள். "கத்துக் குட்டி டாக்டர்கள் தானே! ஏனய்யா, 'ஆஆ'வென்று நாக்கை நீட்டச் சொல் லிக்கூடப் பரிசோதித்தீர்களே; ஒன்றுமே கண்டு பிடிக்க முடியவில்லையா?"

"ஓ! நாக்கா!" என்றான் அருமைத். "அது களைத்துப் போயிருக்கிறது. அவ்வளவு தான். கொஞ்சம் ஓய்வு கொடுங்கள். எல்லாம் சரியாகி விடும்."

கையில் வாங்கிக் கொண்டு, "காவல் முடிஞ்சதும் ஊருக்குள்ளே போயிடு வோமென்றாயே; உங்கள் ஊர் எங்கே இருக்கிறது? " என்று அவனைக் கேட் டாள் மோகினி.

"பக்கத்திலேதாம்மா இருக்குது: இங்கிருந்து தென் கிழக்கா ரெண்டு மைல் போனா 'சொகவாசம்'னு ஒரு கிராமம் இருக்கு. அதுதான் எங்க ஊர்...."

"என்னது? என்னது? அந்த ஊரின் பெயரை இன்னொரு தரம் சொல்லு" என்று அடக்க முடியாத ஆவலோடு மோகினி மீண்டும் வினவினாள்.

"அதுதான் சொன்னேனே; 'சொக வாசம்'பாங்கம்மா."—

"'சுகவாசம்' — எத்தனை பொருத்த மான அழகிய பெயர்?" என்று தனக்குள் மெல்லச் சொல்லித் திருப்திப் பட்டுக் கொண்டாள் மோகினி. அப் போது கண்ணுயிரம் வந்து புறப்படு படுவதற்கு அவசரப்படுத்தவே அவள் விடை பெற்றுக் கொண்டு காரை நோக்கி நடந்தாள்.

"எப்பவாச்சும் இந்தப் பாதையா வந்தால் மறுபடியும் வாங்கம்மா" என்று அந்தப் பட்டிக்காட்டுப் பெண் தன் அத்தானுக்கு அருகில் நின்று சிரித் துக் கொண்டே இரைந்து கூறினாள். அவ ளுடைய பாக்கியத்தை வியந்தவளாக மோகினி காரில் ஏறினாள். அம்மாவும் கண்ணுயிரமும் ஏறிக்கொண்ட பின் கார் சாலையின் புழுதியை வாரி இறைத்து விட்டு விரைந்தது. (தொடரும்)


புதிய பெரிய டப்பாவில்
கால்கேட்
பேபி பவுடர்
அதிகப் பவுடர்...
அதிகச் சிக்கனம்...
புதிய சுலபமாக
அழுந்தும் மூடி!
குழந்தையின் நளினமான
சருமத்திற்கு இதமளிக்கிறது!
New
COLGATE
BABY
POWDER


tik-20
டிக்-20
மூட்டைப்பூச்சிகளைக்
கொல்லுகிறது
டாடா-பைஸன் தயாரிப்பு

# அரசியல் சாஸனத்தைத் திருத்துக

டாக்டர். ஏ. கிருஷ்ணசுவாமி



**டாக்டர் ஏ. கிருஷ்ணசுவாமி பொருளாதாரத் துறையில் வல்லுநர். அரசியலிலும் ஈடுபாடு உள்ளவர். லோக சபையில் அங்கத்தினராக முன்னாட்களில் பணியாற்றியவர். புகழ்பெற்ற டாக்டர் ராமஸ்வாமி முதலியாரின் புதல்வர் என்பது அவர் பேச்சுக்களின் விறுவிறுப்பிலிருந்தும் சுவை மிகுந்த கருத்துக்களிலிருந்தும் தெரியும். இவருடைய பேச்சுக்களில் சாதாரணமாகவே சிந்தனைத் தெளிவு காணப்படும். ஆங்கிலத்தைப் பற்றி இவர் கூறுவனவற்றை ஆட்சியாளர்கள் கவனிக்க வேண்டியது அவசியம்.**

மறக்க வேண்டாம்

நம்மில் அரசியல்வாதிகள் தங்களுக்குச் சௌகரியமான சந்தர்ப்பங்களில் ஞாபக மறதி என்ற வியாதியைத் தேடி வரவழைத்துக் கொள்ளுகிறார்கள்! நமது அரசியல் சாஸனத்தில் ஆட்சி மொழி ஷரத்தை வகுத்த போது அது எந்த அடிப்படையில் செய்யப்பட்டது என்று ஞாபகம் இருக்கிறதா? 1950லிருந்து அடுத்த பதினைந்தாண்டுகளில் — அதாவது ஆங்கிலத்திலிருந்து ஹிந்திக்கு மாறும் போது — ஹிந்தி மொழியானது வளம் பெற்று, நவீனமான ஆட்சி மொழிக்குரிய வளர்ச்சியை அடைய முடியும் என்ற நம்பிக்கையே அந்த அடிப்படை. மேலும், ஹிந்தி ஆட்சி மொழியாவதை நமது நாட்டின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள சமுதாயத்தின் எல்லாப் பகுதியினரும் மனப் பூர்வமாக அங்கீகரிப்பார்கள் என்றும் அப்போது கருதப்பட்டது. இந்த இரு எண்ணங்களும் இப்போது நிறைவேற வில்லை. புதுமையும், வளரும் திறனுமுள்ள சொற் பெருக்கத்தை ஹிந்தி அடையவில்லை. விஞ்ஞானம், தொழில் நுணுக்கம், கலைப் பாடங்கள் இவை யாவற்றிலும் ஹிந்தி மொழியானது மற்ற இந்திய மொழிகளைவிட முன் நிற்க வேண்டுமானால் அது எவ்வளவு அபிவிருத்தி அடைந்திருக்க வேண்டுமோ, அதற்கு இன்னும் பின் தங்கியே உள்ளது. உயர் படிப்புகளுக்குப் போதனா மொழியாக இருக்கும் விஷயத்திலும், சாதாரணமான ஆபீஸ் வேலைகளுக்குப் பயனாகும் விஷயத்திலும் ஹிந்தியானது ஆங்கிலத்தோடு ஒப்பிடுகையில் எங்கோ தொலைதூரத்தில் நிற்கிறது. ஹிந்தி பேசாத பகுதிகளில் அம்மொழியைக் கற்க ஆரம்ப காலத்தில் எவ்வளவு ஆர்வம் இருந்ததோ அது கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் தேய்ந்து கொண்டே வந்திருக்கிறது என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். உண்மையை ஒளிக்காமல் சொல்ல வேண்டுமானால், ஆங்கிலத்தின் இடத்தை ஹிந்தி பெற வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளும் மனோபாவம் மாறி, அப்படியாவதைத் தடுக்க வேண்டும் என்ற உணர்வு வளர்ந்து வந்திருக்கிறது. ஹிந்தி உற்சாகிகளின் ஆக்கிரமிப்புக் கோலத்தினால் இந்த எதிர்ப்பு மனப்பான்மை மேலும் இறுகித்தான் வருகிறது. இந்தச் சூழ்நிலையில், ஆங்கிலத்தின் இடத்தை வேறு மொழி பெறத்தான் வேண்டுமா என்ற பிரச்னையைப் பலர் மீண்டும் சிந்தித்துப் பார்ப்பதில் ஆச்சரியமில்லையல்லவா ?




நம்பிக்கைத் துரோகம்

இப்படி மாறுபட்ட மனோபாவத்துடன் எழுந்த சிந்தனையே 1959-ம் ஆண்டுத் தொடக்கத்தில் மக்கள் சபையில் ஆங்கில மொழியின் அந்தஸ்தையும் எதிர்காலத்தையும் பற்றி நடந்த பெரும் வாதத்துக்குப் பின்னணியாக இருந்தது. அப்போதுதான் பிரதமர் தமது வாக்குறுதியை அளித்தார். இந்த வாக்குறுதி சட்ட பூர்வமான ஆணையில்லாவிடினும், இது சட்ட உருவில் உள்ளடக்கப்படும் என்ற நம்பிக்கையின் மீது பெரிதும் மதிக்கப்பட்டது. ஆட்சி மொழிக்குழுவுடைய சிபாரிசுகளின் மீது வெளியான ராஷ்டிரபதியின் உத்தரவில் வாக்குறுதிக் கருத்து இல்லாததைக் கண்டு, பதினைந்து பாராளுமன்ற அங்கத்தினர்கள், மேற்படி வாக்குறுதி அரசாங்கத்தின் மொழிக் கொள்கையில் ஓர் அம்சமாக இராது என அநுமானித்துப் பிரதமருக்கு எழுதினார்கள். அப்போது பிரதம மந்திரி வாக்குறுதியை மீண்டும் அளித்தார். எனினும் சில வாரங்களுக்கு முன் பிரசுரிக்கப்பட்ட ஆட்சி மொழி மசோதா கோடிக்கணக்கான மக்களை ஏமாற்றி விட்டது. ஸ்ரீ நேருவின் பழைய வாக்குறுதியிலிருந்த விசாலமான மனப்பான்மையை அது மங்கலாகக் கூடப் பிரதிபலிக்கவில்லை. **ஹிந்தியுடன் இணையாக ஆங்கிலத்தை உபயோகிக்க அநுமதிக்கப்படும்! பத்தாண்டுகளுக்குப் பின்**

முப்பது பாராளுமன்ற அங்கத்தினர் கொண்ட ஒரு குழு நிலைமையைப் பரிசீலிக்கும் என்கிறது மசோதா. ஹிந்தியை யூனியனின் ஓர் ஆட்சி மொழியாக உபயோகிக்கத் தேர்ந்தெடுப்பவர்கள் யூனியன் நிர்வாகத்தின் எல்லா உறுப்புக்களிலும் அதன் உபயோகத்தை நீடிக்குமாறு வற்புறுத்துவதற்குச் சகல விதமான ஊக்கமும் அளிப்பது என்பது இம்மசோதாவின் உட்கிடக்கை என்பது வெளிப்படையாகும். 1975ம் ஆண்டில் நியமனமாகவிருக்கும் பரிசீலனைக் குழுவானது அரசாங்கக் காரியங்களில் ஹிந்தியின் உபயோகம் எவ்வளவு அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்பதை ஆராயவே பொறுப்புப் பெற்றிருக்கிறது. ஹிந்தி மொழியின் வளர்ச்சியை ஆராய்ந்து அதன் மீது ராஷ்டிரபதிக்கு ஆலோசனைகள் கூறவே இக்குழு. கணிசமான எதிர்ப்பை மீறி ஹிந்தியை ஆட்சி மொழியாகத் திணிக்கும் அபாயத்திலிருந்து காப்பதற்காகப் பிரதமர் வாக்களித்திருந்தார் என்றும், தற்போதைய மசோதாவோ ஹிந்தியை விஸ்தரிப்பதுதான் தனது லட்சியம் என்று தெளிவாகத் தெரிவிக்கிறது; ஆங்கிலத்தின் உபயோகத்தை அநுமதிக்கலாம் என்று மட்டும் கூறுகிறது அது. இப்போது உள்ள நிலவரப்படி, பிரதமரின் வாக்குறுதி உயிரிழந்து விட்டது. ஏனெனில் அவரது வாக்குறுதியில்லாவிடினும், ஹிந்தி உற்சாகிகள் கோரும் பாத்தியதைகளுக்கு இப்போதைவிட அதிக ஊக்கமளித்திருக்க முடியாது. 1965ம் ஆண்டிலோ அல்லது 1975ல் கூட, எல்லாக் காரியங்களுக்கும் ஆங்கிலத்தை ஹிந்தி அப்புறப்படுத்திவிட முடியாது என்பது நம் எல்லாருக்கும் நிச்சயமாகத் தெரியும். இந்தச் சமயத்தில் ஹிந்தி உற்சாகிகள் மிக அதிகமாக எதிர்பார்க்கக் கூடியது மறையாணியை முடுக்குவதுதான். இப்படி முடுக்குவதற்குச் சட்ட ரீதியான அங்கீகாரம் கொடுத்தாகி விட்டது!

**மறையாணியை முடுக்குகிறார்கள்**

‘ஆங்கிலமா, ஹிந்தியா?’ என்ற பிரச்னை யதார்த்தத்துக்கு மிகவும் முரணான ஒரு கற்பனைச் சூழ்நிலையில் விவாதிக்கப்பட்டு முடிவுகள் எடுக்கப்படுகின்றன. இன்று ஆரம்பப் படிப்பும், உயர்தரப் பள்ளிப் படிப்பும் பெற வசதியில்லாதிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு ஆட்சி மொழியாக எதைத் தேர்ந்தெடுப்பது என்ற பிரச்னை நடைமுறைக்குத் தேவையற்ற ஒரு கற்பனையாகவே இருக்கிறது. எல்லா ராஜ்யங்களிலும் பிரதேச மொழிகளோடு ஆங்கிலத்தை நீடிக்க அநுமதிப்பதுதான் யுக்தமானதும், அறிவுக்கு உகந்ததுமான நடவடிக்கையாகும். உயர் பள்ளிப் படிப்பை இலவசமாகவும் கட்டாயமாகவும் ஆக்கிய பின்புதான் யூனியனின் ஆட்சி மொழி எதுவாக இருக்க வேண்டும் என்ற பிரச்னையைப் புதிதாகப் பரிசீலிக்க வேண்டும்.

**மும்மொழிக் கொள்கை**

இதனிடையில் சர்க்காரின் கல்வி மந்திரி இலாகாவானது மும்மொழிக் கொள்கையை வகுத்துள்ளது. அதாவது, ஆங்கிலம், தாய்மொழி, ஹிந்தி இம்மூன்றையும் ஹிந்தி வழங்காத பகுதிகளில் கற்கச் செய்வது சிலாக்கியம் என யோசனை கூறியுள்ளது. இதைவிட, பள்ளி மாணவன் ஒவ்வொருவனும் தனது தாய்மொழி, ஆங்கிலம் இரண்டையும் கற்றதோடு, வேறு ஏதேனுமொரு இந்திய மொழியில் (அது ஹிந்தியாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை) எழுதவும் படிக்கவும் அறியுமளவுக்குக் கல்வி பெற வகை செய்தால் அது தேசிய ஒருமைப்பாட்டுக்கு நன்மை பயப்பதாக இருக்கும். என்றாலும் இந்த மூன்றாவது மொழியைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பள்ளிகளுக்கோ, மாணவர்களுக்கோ அளிக்காமல், அதனைக் கல்வி மந்திரி இலாகாவே நிர்ணயித்திருக்கிறது. இந்நிலையில், சிக்கல்கள் ஏற்படாதிருக்க வேண்டுமானால் இரண்டு அம்சங்களை எடுத்துக் காட்டி அவற்றுக்குத் தீர்வு கோர வேண்டியிருக்கிறது.



முதலாவதாக, இம்மொழிக் கொள்கையின்படி ஹிந்திப் பகுதி மாணவர்கள் ஆங்கிலமும், தங்கள் தாய்மொழியான ஹிந்தியும் கற்பர். அவர்களில் வர்த்தகத் தொழிலில் ஈடுபட விரும்புபவர்கள், தென்னிந்தியாவில் மட்டுமின்றித் தென் கிழக்காசியாவில் வாழும் ஏராளமான இந்தியர்களின் மொழியான தமிழையோ அல்லது குஜராத்தியையோ மூன்றாம் மொழியாகக் கற்க முடியும். இதே போல ஹிந்திப் பகுதி மாணவர்களில் அகில இந்திய சர்வீஸ்களில் சேர விரும்புபவர்கள் தாங்கள் எந்தப் பகுதியில் பணி புரிய விரும்புகிறார்களோ அந்தப் பகுதியின் மொழியை மூன்றாம் மொழியாகத் தேர்ந்தெடுக்க முடியும். (இதைப் போல் ஹிந்தி பேசாத பகுதியினர் தேர்வு செய்ய முடியாமல் ஹிந்தியையே மூன்றாவது மொழியாகக் கற்க வேண்டியிருக்கும்.) அதாவது தனது தாய் மொழியைத் தவிர வேறேதேனுமொரு மொழியைப் பயில்வது என்கிற அம்சத்தில் ஹிந்தி பேசும் மக்கள் அதிக சுதந்திரம் பெற்றிருப்பார்கள் என்பதைக் காண்கிறோம். இப்படி அநுகூலம் பெற்ற இவர்களும் ஹிந்தி வழங்காத பகுதி மக்களைப் போலவே தான் நடத்தப்படுவார்கள்.

இரண்டாவதாக, ஹிந்தியாக இருந்தாலும் சரி, வேறெந்த மூன்றாம் மொழியாக இருந்தாலும் சரி அதனில் நடைமுறைக்கு எவ்வளவு. அவ

மேயோ அவ்வளவுக்குத் தேர்ச்சி பெற்றிருந்து எழுதவும் படிக்கவும் கற்பித்தாலே பள்ளிப் போதனைக்குப் போதுமானது. எனவே ஹிந்தி வழங்காத பகுதிகளில் நடத்தப்படும் ஹிந்திப் பரீட்சை முடிவுகளும், ஹிந்திப் பகுதிகளில் ஏதேனுமொரு மூன்றாவது இந்திய மொழியில் நடத்தப்படும் பரீட்சை முடிவுகளும் சர்க்கார் பரீட்சைகளின் மொத்தமான முடிவைப் பாதிக்க அனுமதிக்கலாகாது.

துர்ப்பாக்கியவசமாக, மொழிப் பிரச்னையானது நிர்வாகிகளையும் ராஜ நீதி வல்லுநர்களையும் கூட குறுகிய மனப்பான்மையுள்ள பிரசாரகர்களாக்கி விட்டது. சிறுபான்மையினர் மீது முரட்டுத்தனமாகப் பலப் பிரயோகம் செய்வதற்காக ஏற்கனவே பெருத்த கூலி கொடுத்திருக்கிறோம் என்பதை அவர்கள் மறந்து விட்டார்கள். 'சிறுபான்மையினர்கள்' என்ற பிரிவுகள் நீடிப்பதற்கும், தாங்கள் சிறுபான்மையில் இருக்கிறோம் என்ற உணர்வு அவர்களுக்கு இருப்பதற்கும் நேர் காரணம், மொழி, மதம் ஆகிய அம்சங்களைத் தீர்க்கமான சிந்தனையில்லாமல் அணுகுவதுதான். நமது நாட்டிலுள்ள சிக்கலான பல சமூக, பொருளாதாரப் பிரச்னைகள் எல்லாம் மக்கள் பிரிவுகளை அப்பிரிவினர் ஒவ்வொருவரும் தங்களுக்குள்ளேயே ஈடுபாடு கொண்டவர்களாகச் செய்திருக்கின்றன. நாட்டுப் பரப்புக்கும் ஜனத் தொகைக்கும் உள்ள விகிதம் மக்கள் எந்தப் பிரச்னையையும் தங்கள் பகுதிக்குள் உட்படுத்திக் கவனிக்குமாறு செய்திருக்கிறது. இப்படியின்றி வெளியே பார்ப்பவர்களாக — நாடு முழுவதையும் ஒன்றாகக் கருதி அந்தக் கோணத்தில் பிரச்னைகளை அலசக் கூடியவர்களாக — நமது மக்களை உருவாக்குவதற்கேற்ற சூழ்நிலையை உண்டாக்க வேண்டும்.



தேசிய ஒற்றுமை

மொழி விஷயத்தில் சர்க்காரை வற்புறுத்தும் திணிப்புக் கூட்டத்தினரால் தேசிய ஒற்றுமையைப் பிளக்கும் திசையில் நாடு செலுத்தப்பட்டுள்ளது. இந்தத் திணிப்பாளர்கள் ஆட்சி மொழி மசோதாவின் நிறைவேற்றத்தால் மேலும் வலுப் பெற்றிருக்கிறார்கள். இதனால் தேச ஒற்றுமைக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தை நம்முடைய தலைமுறையில் நாம் தடுத்து நிறுத்த வேண்டும். ஹிந்தி வழங்காத பகுதி மக்கள் மீது ஒரு கடமை சார்ந்துள்ளது. அவர்கள் செயலுருப்பெற வேண்டிய பின்கண்ட யோசனையைச் சட்டசபைகளின் மூலம் பாராளுமன்றத்துக்கும், யூனியன் சர்க்காருக்கும் தெரிவிக்க வேண்டும். ஆங்கிலம் எந்தெந்த அரசாங்க அலுவல்களுக்குப் பயனாகி வந்ததோ அவை அவ்வளவுக்கும் இனியும் நீடித்துப் பயனாக்கப்பட வேண்டும்; பதினைந்தாண்டுகளுக்கு மட்டுமின்றி, ஹிந்தி வழங்காத பகுதிகளில் ஒவ்வொன்றிலுமுள்ள மக்கள், தாங்கள் ஹிந்தி மொழியறிவில் ஹிந்தி மக்களுடன் சம அந்தஸ்து பெற்றிருக்கிறோம் என்று உணரும் வரையில் ஆங்கிலத்தை நீடிப்பதற்கு அரசியல் சாஸன ஷரத்தைத் திருத்த வேண்டும் என்பதே அந்த யோசனை.

# நிர்வாகத்துக்கு நிகரற்ற மொழி

பி. கோதண்ட ராவ்



**ஸெர்வென்ட்ஸ் ஆப் இந்தியா ஸொஸைட்டியைப் பற்றி நாட்டில் தெரியாதவர் இருக்க மாட்டார்கள். இச்சங்கத்தைச் சேர்ந்தவர் திரு பி. கோதண்டராவ். நீண்ட காலம் அரசியலில் ஊறித் திளைத்தவர். எந்தப் பிரச்னையையும் அமைதியுடன் ஆராய்ந்து சொந்த விருப்பு வெறுப்புகளைக் களைந்து விட்டு, உண்மை காணும் ஆர்வம் மிக்கவர். உலக நாடுகள் பலவற்றுக்குச் சென்று தமது அறிவையும் ஆற்றலையும் பெருக்கிக் கொண்டிருக்கிறார். ஆங்கிலம் ஆட்சி மொழியாகத் திகழ வேண்டும் என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்ளும் விதத்தில் எடுத்துச் சொல்லுகிறார்.**

தவிர்க்க முடியாதது

ஒரு மொழி வழங்கும் இங்கிலாந்து, ஜப்பான் போன்ற நாடுகளில் எல்லாக் காரியங்களுக்கும் ஒரே மொழி பயன்படுவது போல் பல மொழிகள் வழங்கும் இந்தியாவில் பயன்படாது. எந்த ஓர் இந்திய மொழியும் அகில இந்திய மக்கள் அனைவருக்கும் தாய்மொழியாக ஆகும் என்று நினைப்பதற்கில்லை. அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் ஆங்கிலத்தைப் போல் இந்தியாவில் தேசிய மொழி என்று ஒன்றுமில்லை. ஆகவே, ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளை நாம் உபயோகப்படுத்தியே தீர வேண்டும். இதைத் தவிர்க்க

முடியாது. எந்தெந்த மொழியை, அதனதன் தகுதிக்கேற்ப, எந்தெந்தக் காரியங்களுக்கு உபயோகப்படுத்தலாமோ அவ்வாறு பயன்படுத்துவது தான் புத்திசாலித்தனமாகும். சாதாரணமாக எல்லா இந்திய மக்களும் தங்கள் குழந்தைப் பிராயம் முதல் பழகிப் பேசிப் படித்து லாகவம் பெற்றுள்ள தங்களது பிராந்தியத் தாய்மொழியைப் பெரும்பான்மையாக உபயோகிப்பார்கள். இது இயற்கையே. சமூகத்தில் உறவு கொள்வதற்கும், உணர்ச்சிகளை வெளியிடுவதற்கும், இலக்கியத் துறையில் வசனங்கள், செய்யுட்கள், காவியங்கள், நாடகங்கள், சமயக் கருத்துக்கள் போன்ற படைப்புக்களுக்கும், ஆத்மிக வளர்ச்சிக்கும் ஆத்ம திருப்திக்கும் அவரவர்களுடைய தாய்மொழி மிகவும் ஏற்றது. ஆனால் பிராந்திய மொழிகள் பிராந்திய மக்கள் தேவைகளுக்குப் பயன்படுவது போல் அகில இந்திய அரங்கத்தில் அரசியல் ஒற்றுமையை மக்களிடையே வளர்த்துக் காக்கவும், விஞ்ஞானம், பொறி இயல் போன்ற துறைகளில் கருத்துக்களைச் சொல்லவும், நிர்வாக நடவடிக்கைகளுக்கும், தொழிலுக்கும், முக்கியமாக ராஜ்யங்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்வதற்கும் அயல்நாட்டுத் தொடர்புக்கும் ஏற்றதாக மற்றொரு மொழி அவசியமாகிறது. இத்தகைய பலதரப்பட்ட காரியங்களுக்கு இப்போது மட்டுமல்ல, எப்போதுமே, ஹிந்தியை விட ஆங்கிலம் அதிக தகுதி வாய்ந்தது. இலக்கியங்களுக்கும் பிராந்திய கட்டங்களில் பிரதேச மொழிகளும், அகில இந்தியக் கட்டத்தில் விஞ்ஞானம், நிர்வாகம், தொழில் வளர்ச்சிக்கு ஆங்கிலமும் ஆகிய இரு மொழி முறைதான் இந்தியாவுக்கு மிகவும் ஏற்ற முறை. நம் நாட்டு மொழிப் பிரச்சினைக்கு இதுதான் திருப்திகரமான தீர்வு. இதன் மூலம் நமக்குக் குறைந்த முயற்சியில் உயர்ந்த நலன்கள் கிடைக்கும்.

இலக்கியத் துறையில்...




இந்திய அரசாங்கமும் ராஜ்ய முதல் மந்திரிகளும் மும்மொழி முறையைப் பெரிதும் ஆதரிக்கின்றனர். ஆங்கிலம், ஹிந்தி, பிராந்திய மொழி, இம்மூன்றும் - ஒவ்வொன்றும் வெவ்வேறு லிபி உடையது—பயில வேண்டும் என்பது அவர்கள் கருத்து. இது மிகவும் கஷ்டமானது. இதைக் காட்டிலும் இரண்டு லிபிகளைக் கற்க வேண்டிய ஆங்கிலமும் ஒரு பிரதேச மொழியும் கொண்ட இரு மொழி முறை சுலபமானது. தவிரவும், மும்மொழி முறை செய்யும் எல்லாக் காரியங்களையும் சிரமம் ஏதும் இல்லாமல், சுலபமாகவே இருமொழி முறை செய்துவிடக் கூடியது. எப்படியும் ஹிந்தி, ஆங்கிலம் என்று இரண்டு இணைப்பு மொழிகளுக்கு அவசியமே இல்லை. ஏதாவது ஒன்றே போதுமானது. ஆங்கிலம் இணைப்பு மொழியாவதற்குத் தகுதியுடையது. வெவ்வேறு மொழி பேசப்படும் பல ராஜ்யங்களுக்கிடையேயும் பல மொழி வழக்குள்ள அயல்நாடுகளுடன் தொடர்புக்கும் இணையற்றது ஆங்கிலம். இரு மொழி முறை—அதாவது ஆங்கிலமும் பிராந்திய மொழியும்—பற்றிப் பொதுவாக ஏகோபித்த அபிப்பிராயம் நிலவுகிறது. ஹிந்தியைக் கைவிட்டுவிடுவதுதான் உசிதம்.



ஆங்கிலம் அயல் நாட்டினர் மொழிதான். ஆனால் அந்தக் கருத்து இப்போது முக்கியமல்ல. ஏனெனில் நூறாண்டு காலமாக உயர் கல்வியிலும், நிர்வாகத்துறையிலும், விஞ்ஞானத்திலும், பொறியியலிலும் உபயோகத்திலிருந்து விட்டதனால் இந்திய மொழிகளைப் போலவே ஆங்கிலத்தையும் இந்திய மொழியாகத்தான் கருத வேண்டும்.

இந்த நிலையில் ஹிந்தி மொழி மட்டுமே நாட்டின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்திச் சட்டம் நிறைவேற்றியது மிகவும் வருந்தத் தக்கது. ஹிந்தி பேசாத மக்களின் உணர்ச்சிகளை ஹிந்தி வெறியர்கள் உணரமாட்டார்கள். அவர்கள்தான் அப்படிச் செய்தார்களென்றாலும் எல்லா ராஜ்யத்தவரும், பொது நிலையிலுள்ள இந்திய அரசாங்கமும் அவர்களுக்கு ஒத்துப் பாடுவது நாட்டின் துரதிர்ஷ்டமேயாகும். தனது அதிகாரம், செல்வாக்கு, நாட்டின் நிதி வசதி முதலிய எல்லாவற்றையும் சாதுர்யமான முறையில் ஹிந்தி பேசாத மக்களுக்கு எதிராகப் பிரதமர் பகிரங்கமாகவும் மறைமுகமாகவும் உபயோகித்துப் பங்கு கொள்ளுவது சற்றும் விரும்பத் தக்கதல்ல.

பிரதமரின் சாதுர்யம்

சில அரசியலார்கள் இது விஷயத்தில் ஒரு சமரச ஏற்பாட்டை உண்டாக்கி, அதற்கு ஹிந்தி பேசுபவர்கள், பேசாதவர்கள் இரு சாராரின் இணக்கத்தை (முழுச் சம்மதமில்லாத இணக்கத்தையேனும்) பெற முயற்சி செய்கின்றனர். பிரதமர் ஜவாஹர்லால் நேருஜியே ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்து கொடுத்தார். அதாவது ஹிந்தி பேசாத மக்கள் விரும்பினால்தான் ஆங்கிலத்தின் ஸ்தானத்துக்கு ஹிந்தி ஏற்றி வைக்கப்படும்; அதுவரையில் ஆங்கிலம் ஹிந்தியுடன் துணை மொழியாகத் தொடர்ந்து செயலாற்றும் என்றும் உறுதி கூறினர். ஆனால் அவர் அளித்த

உறுதிமொழிகளை அவராலேயே காப்பாற்ற முடியவில்லை. இப்போது பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி, ஹிந்தி ஒன்று தான் 1965க்குப் பின் அரசாங்க மொழியாக இருக்கும். ஆனால் ஹிந்தியுடன் ஆங்கிலம் செயலாற்ற அனுமதிக்கப்படும், அதுவும் பத்து வருஷங்களுக்குப் பின் பரிசீலனை செய்யப்படும் என்ற நிபந்தனைக்குட்பட்டு. இதை ஹிந்தித் திணிப்பு என்று சொல்லாமல் எப்படிச் சொல்வது? சர்க்கார் மட்டும் ஹிந்தி திணிக்கப்பட மாட்டாது என்று வாய்கூசாது சொல்லுகிறார்கள்.

**சமரசத் திட்டம்**

உண்மையில் இந்தத் திட்டம் சமரசத் திட்டமாக இருக்க வேண்டுமானால் ஹிந்தியுடன் ஆங்கிலமும் சமமான அந்தஸ்தில் செயலாற்ற வழி செய்திருக்க வேண்டும். தென் ஆப்பிரிக்காவில் இப்படித்தான் இரண்டு மொழிகளுக்குச் சம அந்தஸ்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஹிந்தி அல்லது ஆங்கிலம் மாற்று மொழி (alternate language) என்றாவது செய்திருக்க வேண்டும். அப்போது ஹிந்தியோ, ஆங்கிலமோ ஏதாவது ஒரு மொழி மட்டுமே உபயோகத்திலிருக்கும். இரண்டும் இருக்காது. ஆனால் இத்தகைய உண்மை சமரசத்துக்கு ஹிந்தி வெறியர்கள் சம்மதிக்கவில்லை. பிரதமர் நேருஜியும் அவர்களுடன்தான் ஒத்துப் பாடுகிறார். ஒருகால் ஆங்கிலத்துக்கு ஹிந்தி மொழியுடன் சம ஸ்தானம் அளித்திருந்தாலுங்கூட இப்போதுள்ள சூழ்நிலையில் ஹிந்தியுடன் பாரபட்சமின்றிப் போட்டியிட்டுத் தனது தகுதியை நிலைநாட்டிக்கொள்ள ஆங்கிலத்துக்கு வாய்ப்பளிக்கப்படும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. சொந்த முறையில் அளிக்கப்படும் அமைச்சர்களின் வாக்குறுதிகள்கூடப் பிரயோசனமில்லாதவை. அவற்றை நீதி மன்றங்களில் நிறைவேற்றி வைக்க முடியாது.

**திருப்திகரமான தீர்வு**



ஆகவே, இப் பிரச்னைக்கு ஒரே தீர்வுதான் திருப்தியளிக்கவல்லது. சுதந்திரம் கிடைத்த நாளன்று இருந்தது போலவே ஆங்கிலத்தைத் தனி ஆட்சி மொழியாக, ராஜ்யங்களுக்கிடையிலும் அயல் நாடுகளுடனும் தொடர்புகளுக்கு ஏற்ற மொழியாக நீடிக்கச் செய்வதுதான் அது. சமரச ஏற்பாடாக ஆங்கிலத்துடன், ஹிந்தியையும், பிராந்திய மொழிகளையும் உபயோகப்படுத்தலாம் என்று அனுமதிக்கலாம். பிராந்திய மொழியை விஷயப் போக்குவரத்துக்கு உபயோகப்படுத்துவது கூட அந்தந்த ராஜ்யங்களின் விருப்பத்தை அனுசரித்துச் செய்யப்பட வேண்டும். எந்த ஏற்பாடும் அரசியல் சட்டத்தில் ஒரு ஷரத்தாகச் சேர்க்கப்பட வேண்டும். அப்போதுதான் அவை நீதிமன்றங்களில் ஆராயத் தகுதி உடையவையாக ஆகும்.

ஹிந்தி பேசாத மக்கள், ஹிந்தி ஏகாதிபத்தியத்திலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அத்துடன் தங்களையும், ஹிந்தி பேசும் மக்களையும் நவீன கால முன்னேற்றத்துக்கு அழைத்துச் செல்ல வகை செய்ய வேண்டும். அதற்கு ஆங்கிலம் ஒன்றுதான் ஏற்றது. ஆங்கிலமே விடுதலை அளிக்கும்; ஹிந்தி அடிமையாகத்தான் ஆக்கும்.

## ஆட்சி மொழி — கருத்தரங்கு

**ஆங்கிலமா ஹிந்தியா என்ற இந்தக் கருத்தரங்கில் இதுவரை பங்குபற்றியவர்கள்:**

ராஜாஜி, ஸ்ரீமதி மோனு ஹென்ஸ்மன், திரு ஃபிராங்க் அந்தோனி, திரு என். மாதவ ராவ், டாக்டர் ஸி. பி. ராமசுவாமி அய்யர், பேராசிரியர் ரத்தினசாமி, திரு கே. கே. ஸின்ஹா, திரு பி. ஸிவராவ், திரு சா. கணேசன் டாக்டர் கார்வே, திரு பி. கோதண்ட ராவ், டாக்டர் ஏ. கிருஷ்ணசுவாமி

**இனி பங்குபற்றப் போகிறவர்கள்:**

டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியார், ராஜா ஸர் முத்தையா செட்டியார் ஸர் பி. டி. ராஜன், திரு ஸி. என். அண்ணாதுரை, திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர், தமிழகம் திரு சுப்பையா, திரு கிருஷ்ணசாமி பாரதி திரு கருமுத்து தியாகராஜ செட்டியார், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி திரு ஏ. என். பரசுராம், திரு நெடுஞ்செழியன், திரு கே. வி. சூரிய நாராயண அய்யர், ஜனாப் பஷீர் அஹமத் சயீத், திரு என். முருகேச முதலியார், திரு ஜி. கே. சுந்தரம், திரு எம். ஜி. ராமச்சந்திரன்



# உண்டி கொடுக்கும் உயிர்ப்பணி





'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'

— மணிமேகலை

அறமாக அன்று சொல்லப்பட்டது இன்றைய ஓட்ட சாட்ட யுகத்தில் பெரிய நகரங்களில் ஹோட்டல்கள் செய்து வரும் பணிக்கும் ஒரு விதத்தில் பொருந்தும்.

'வேறுபட்ட பல சுவைகளைக் கொண்டதே உலகம்' என்ற முதுமொழியை நாள்தோறும் நிதர்சனமாகக் காட்டி வருகின்றன ஹோட்டல்கள். 'வேற்றுமையில் ஒற்றுமை' என்ற நமது உன்னதமான பண்பாட்டின் அடிப்படை உணவுப் பழக்கங்களிலிருந்தே ஆரம்பமாகி விட்டது!

## சாப்பாட்டு ரசிகர்கள்!

தமிழர்கள் பெரிய ரசிகர்கள்தாம்! சந்தேகமேயில்லை. ரசிகர்கள் என்றால் ஒரு துறையில்தானா? எல்லாவற்றிலுமே அல்லவா அவர்களுடைய அற்புதமான ரசிகத் தன்மை தெரிகிறது! சாப்பாட்டிலும்தான்!

தமிழர்களின் சிற்றுண்டிகளில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் இட்டிலியும் மசாலா தோசையும் இன்று உலகப் புகழ் பெற்ற உணவுப் பண்டங்கள் ஆகிவிட்டனவே! சர்வ தேச அந்தஸ்து அவைகளுக்கு வாய்த்து விட்டன. சமீபத்தில் நமது மதிப்புக்குரிய ராஜாஜி அவர்கள் அமெரிக்கா போயிருந்த போது நியூயார்க்கில் பெருமிதத்துடன் அவருக்குப் பூப்போன்ற இட்டிலி அல்லவா கொடுத்தார்கள்?

எழுத்தும் தொழிலும்

வட இந்தியப் பெரிய நகரங்களில் மசாலா தோசையின் அடியார்களாக விளங்கும் சர்தார் ஜிக்களையும், பிற வட இந்தியர்களையும் சாதாரணமாக நமது பாணி ஹோட்டல்களில் காணலாம். மசாலா தோசையைப்பற்றி ஆங்கிலத் தினசரிகளில் 'மிடில்' கட்டுரைகளும் வெளிவருகின்றன!

இட்டிலி—சட்னி; இட்டிலி—மிளகாய்ப் பொடி; இட்டிலி—சாம்பார்; அல்லது இட்டிலி—மேற்குறித்த எல்லாம்—என்று பலவிதமான இணைப்புக்களில் சுவையைக் கூறுபோட்டு அநுபவிக்கும் பொதுஜனத்தைச் சாதாரண ஹோட்டல்களில் காணலாம்.

முழுதும் சாம்பார் அபிஷேகம் ஆகி அதில் நீந்தும் இட்டிலி வடைகளைக் கர்ம சிரத்தையாகக் கரண்டியால் சிறு துண்டங்களாகப் பொறுமையுடன் கூறு போட்டு, பிறகு ஒவ்வொன்றாக எடுத்துச் சுவைக்கும் இருக்கூட்டத்தினர்தாம் பெரும்பான்மை.

> வியார்ஜி என்ற புனைபெயரில் எழுத்துலகில் பிரசித்தி பெற்றிருக்கும் வி. ஆர். கோபாலகிருஷ்ணன் அவர்கள் செங்கல்பட்டு மாவட்ட பத்திரிகையாளர் சங்கத்தின் துணைத் தலைவர். "ஹோட்டல்—அது ஒரு தனி உலகம்!" என்கிறார் வியார்ஜி. சில நிமிஷங்கள் அந்த உலகில் உலவி வருவோமா?

வியார்ஜி

தட்டுக்களின் விளிம்பு மீறி வழிந்த சாம்பார்க் கடலைக் கணப்பொழுதில் உறிஞ்சிக் கிடந்த பஞ்சுகளாகக் காட்சியளிக்கும் இட்டிலித் துண்டங்களை மீண்டும் பலவந்தமாகச் சாம்பாரில் குளிப்பாட்டுவதில் இவர்களுக்கு மகத்தான உற்சாகம்!

தட்டு காலியாகும் தருணத்தில் கடைசித் துண்டுகள் கரண்டியில் ஏற மறுத்து வழுக்கி வழுக்கிச் செல்லும்போது, இந்தக் 'கலைஞர்கள்' அவைகளோடு 'ஸ்பூனாயுதத்தை'க் கொண்டு நடத்தும் போராட்டம் எதிரில் இருப்பவர்களுக்கு நல்ல பொழுதுபோக்கு. சம்பந்தப்பட்டவர்களுக்கு அது பொறுமைக்கு நல்ல படிப்பினை. சில சமயங்களில் அவர்கள் 'ஸ்பூ'னோடு பொறுமையையும் கீழே எறிந்துவிட்டு எரிச்சலோடு கையையே பயன்படுத்தவும் நேரிடலாம். அல்லது அவலைத் தாண்டிவிட்டு நம்பிக்கையோடு நம்மை எதிர்பார்க்க வைத்த கடைசித் துண்டம் கடைசியில் சதி செய்து தட்டை விட்டு எழும்பி மேசையிலோ, தரையிலோ விழுந்து (குலோப் ஜாமுன் போன்றவை இத்தகைய சதி வேலையை உடன் பிறந்த கலையாகக் கொண்டிருப்பவை!) நம்மை அசடு வழிய வைத்து எதிராளியின் கேலிக்குள்ளாக்கலாம்!

## விசேஷ உறவு

பெரிய நகரங்களில் ஓரளவு பற்றற்ற தன்மையில் இயங்குவனவாக இருந்தாலும் சிறிய நகரங்களிலும், ஊர்களிலும் சமூகத்தோடு பிரத்தியேகமான உறவை ஏற்படுத்திக் கொள்கின்றன ஹோட்டல்கள். நிர்வாகத்தினரும் சரி, பணியாளர்களும் சரி, தத்தம் நிலையில் இந்த நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வது தவிர்க்க முடியாததாகிறது.

பத்திரிகைகளின் கேலிச் சித்திரங்கள், துணுக்குகள் இவற்றின் மூலமாக நமக்கு நன்கு அறிமுகமாகியுள்ள இம்மாதிரி ஹோட்டல் ஒன்றின் முதலாளி ஒரு விரும்பத்தக்க ஆத்மா. கன்றுக் குடுமி; பட்டை பட்டையாக விபூதி; அதன் நடுவே துலங்கும் குங்குமம்; பொதுஜனத்தைத் திருப்திப்படுத்துவதொன்றே தமது ஜன்ம லட்சியம் என்கிற மாதிரியான முக பாவம்; அதில் தவிர்க்க முடியாதபடி தென்படும் இலேசான அசட்டுக் களை; வாழ்வின் புராதனமான சம்பிரதாயங்களிலும் மதிப்பீடுகளிலும் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கை; அவரது ஆழ்ந்த சமயப் பற்றைத் தெரிவிக்கும் வகையில் பின்னணியில் அமைந்துள்ள சுவாமி படங்கள்; தொடர்ந்து சுடர் விடும் நந்தா விளக்கும், கற்றை ஊதுபத்திகளும்; கழுத்திலும், பொத்தான் இல்லாத சட்டை இடைவெளியிலும் மின்னும் மைனர் செயின், நவரத்தின மாலை; வாய் நிறைய வார்த்தைகள் (இவை பல சமயம் வெற்றிலைக் குதப்பலோடு சக வாழ்வு நடத்த நேரிடலாம்); ஒவ்வொருவர் உள்ளே வரும்போதும், 'டே, அண்ணனுக்கு கவனி!' என்று அசரீக் கட்டளையோடு அடிக்கப்படும் மேஜை மணி; இத்தியாதி வர்ணனைகளோடு அவதானம் செய்யும் அவர் பொதுஜன உறவை ஒரு வகையில் (பழைய பாணியில் என்றாலும்) கலையாகப் பயின்றவர்.

உண்மையில் அவர் ஓர் அவதானிதான்: பஸ், ரயில் காலங்களைத் தெரிவிப்பவர்; புதிதாக வருபவர்களுக்கு வீடு பார்த்துத் தருகிறவர்; நீண்ட கால வாடிக்கைக்காரர்களின் அன்யோன்யமான குடும்ப விஷயங்களில் ஆலோசனை கூறுபவர்; அநுதாபம் தெரிவிப்பவர்; தேவைப்படும் சமயங்களில் பத்திய உணவுக்கு ஏற்பாடு செய்பவர்; எல்லாக் காரியங்களிலும் ஒரு வேதாந்தபரமான சிந்தனைத் தொடர்பை ஏற்படுத்துபவர்; இப்படிப் பல்வேறு காரியங்களில் மகிழ்ச்சியோடு ஈடுபடும் ஒரு தனி மனித ஸ்தாபனம் அவர்.

## காலம் மாறுகிறது!

சர்வர்களும் தனிப்பட்ட வாழ்க்கைக்காரர்கள் ஒவ்வொருவரோடும் விசேஷ உறவை ஏற்படுத்திக் கொண்டவர்கள். ஒவ்வொருவருடைய சுவையையும் கணித்து அறிந்து உணவுப் பண்டங்களோடு அன்பையும் சேர்த்து வழங்கி உபசரிப்பார்கள். இதன் காரணமாக ஓர் உரிமைப் பிடிப்பையே ஏற்படுத்திக் கொள்வார்கள்.

மறைந்து வரும் எல்லாப் பழைமையான விஷயங்களைப் போலவே இந்த நிலையும் வேகமாக மறைந்து வருகிறது. இதயம் கலந்த அக்கறை என்பது இப்போது அரிதாகி விட்டது.

வாழ்வின் எல்லா அம்சங்களையும் பாதித்து விட்ட அவசரமும், தன்னலமும் இத்தொழிலையும் பாதித்திருக்கின்றன. காலப் போக்கில் இவை ஓரளவு தவிர்க்க முடியாதவை.

பிற தொழில்களைப் போலவே இதிலும் நிர்வாகத்தினருக்கும், தொழிலாளர்களுக்கும் பழங் காலத்திலிருந்த பரஸ்பர மதிப்பும், அன்யோன்யமும் மறைந்து வருகின்றன.

தொழிற் சட்டங்கள், பிராவிடண்ட் நிதி வசதி போன்றவை மூலம் தொழிலாளர்களின் நியாயமான உரிமைகள் காப்பாற்றப்படுகின்றன. போதிய ஓய்வும், நல்ல வேலைச் சூழலும், சேமிப்புக்கான வசதியும் எல்லாம் தொழிலாளர்களுக்குக் கட்டாயம் அளிக்கப்படல் வேண்டும். சில இடங்களில் நிர்வாகத்தினர் இம்மாதிரி விஷயங்களில் தேவையான அளவுக்குத் தாராளமாக நடந்து கொள்ள மறுக்கின்றனர் என்பது உண்மையாக இருந்தாலும் பொதுவாக நிலைமை மாறி வருகிறது எனலாம்.

நிர்வாகத்தினர் கோணத்திலிருந்து பார்க்கும்போது தொழிலாளர்களுக்குப் பொறுப்புணர்ச்சியும், கடமை மனப்பான்மையும் குறைந்து வருகின்றன என்ற குற்றச்சாட்டு ஓரளவு பரவலாக நிலவி வருகிறது. மற்றத் தொழில்களைப் போலவே இதிலும் இரு தரப்பினரும் பரஸ்பரம் உள்ள இன்றியமையாமையை உணர்ந்து இணக்கமாகச் செயல்படுவதுதான் பொருத்தமானது.




ஒரு பாக்கெட்
சிற்றுணவு

உங்கள் சக்தியை மீட்கிறது

# பார்லேயின் க்ளூகோ
## பிஸ்கெட்டுகள்

உங்கள் குடும்பத்தாருக்கு பார்லேயின் க்ளூகோ பிஸ்கட்டுகள் மூலம் கிடைக்கும் சக்தியை அவர்களுக்குக் கிட்டாமல் செய்யாதீர்கள். பார்லேயின் க்ளூகோ பிஸ்கட்டுகள் மிகச் சிறந்த, அதிசுத்தமான பொருள்களும், கூடுதலான விட்டமின்களும்கொண்டு தயாரிக்கப் பட்டிருப்பதால் அவற்றில் ஊட்ட சக்தி மிகுந்திருக்கின்றன. நீங்கள் தளர்வுற்றபோது, அவை உங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கின்றன. நீங்களே உங்களுக்குச் செய்து கொள்ளும் நல்லுதவி என்னவென்றால், இன்றே பார்லேயின் க்ளூகோ பிஸ்கட்டுகளை வாங்கி நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் அதன்மூலம் புதிய சக்தி, நல்ல உணவு மற்றும் கூடுதலான போஷாக்கையும் பெறுங்கள்.

**க்ளூகோ உட்கொண்டு ஊக்கமாக இருங்கள்**

பார்லே ப்ராடக்ட்ஸ் மானு. கோ. பிரை லிட். பம்பாய்-57

PP. 862 TAJ-EVEREST

## மேல்நாட்டில் ஹோட்டல்கள்

ஹோட்டல் என்று குறிப்பிடும்போது மேல்நாட்டவர்கள் தங்குவதற்கு வேண்டிய வசதிகளோடு (லாட்ஜிங் ஹவுஸ்) உள்ள இடங்களைத்தான் குறிப்பிடுகிறார்கள். ஆனால் வெறும் சிற்றுண்டி சாப்பாடு மட்டும் உள்ள வற்றையும் நாம் அந்தப் பெயரால் வழங்கு கிறோம். 'ஹோட்டல்' என்ற பெயர்ப் பல கையைப் பார்த்து உள்ளே நுழைந்து பல மேல் நாட்டவர்கள் ஏமாறுகிறார்கள்.

இவை தவிர 'மோட்டெல்' என்று வழங் கும் ஒரு வகையான ஹோட்டல்கள் மேல் நாட்டில் உண்டு. பெரிய சாலைகளின் நடு வழிகளில் உள்ள இந்த இடங்களில் மோட் டார் கார்களை நிறுத்தி அவற்றைப் பழுது பார்த்துக் கொள்வதற்கான வசதிகளோடு கூடிய தங்குமிடங்கள் உள்ளன. இம்மாதிரி யான வேறு 'நடு வழி ரெஸ்டாரண்டுக'ளும் உண்டு. நீச்சல் குளம், நடன அரங்கம் போன்ற நவீன வசதிகளும் அவற்றில் இருக்கும்.

இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு இங்கிலாந்தில் இந்த 'காடரிங்' தொழிலில் — (சிற்றுண்டி, சாப்பாடு ஆகியவை அளிக்கும் உணவு விடுதிகள்) புதிய முன்னேற்றங்கள் ஏற் பட்டன. மாறி வரும் தேவைகளுக்கு ஏற்பப் புதிது புதிதான மாற்றங்களும் செய்யப் பட்டன. பழைய முறைகளில் அமைக்கப்பட்ட பெரிய உணவு விடுதிகளுக்குப் பதிலாகக் கச்சிதமான முறையில் அமைந்த சிறு விடுதி களிலேயே மக்கள் நாட்டம் சென்றது. டெலி விஷன் வந்த பிறகு இந்தத் தேவை அதிகமாக உணரப்பட்டது.

லண்டனில் உள்ள 'லயன்ஸ் கார்னர் ஹவுஸ்' போன்றவை இந்தப் பிரச்னையைச் சமாளித்த விதம் அலாதியானது. ஒரு குறிப் பிட்ட வகை உணவுப் பண்டங்கள் மட்டுமே கிடைக்கும் சிறு சிறு 'ரெஸ்டாரண்டு'கள் அமைக்கப்பட்டன. இம்மாதிரி ஒவ்வொரு வகை உணவு வகைகளுக்கும் ஏற்படுத்தப்பட்ட தனித் தனி ரெஸ்டாரண்டுகள் யாவும் ஒரே கூரையின் கீழ் செயல்பட்டன. இவற்றில் உள்ள எல்லா உணவு வகைகளும் ஒரு சேரக் கிடைக்கும் தனிப் பிரிவு ஒன்றும் அதில் ஏற்படுத்தப்பட்டது.

அமெரிக்காவிலும் இம்மாதிரிக் குறிப் பிட்ட உணவு வகைகளை மட்டுமே அளிக்கும் - அவைகள் ஸ்பெஷாலிடி ரெஸ்டாரண்டுகள் என அழைக்கப் படுகின்றன — பல உணவு விடுதிகள் உண்டு.

## அந்நியச் செலாவணி

வெளிநாட்டிலிருந்து வரும் உல்லாசப் பிரயாணிகளுக்கு ஏற்ற வகையில் வசதிகள் நிறைந்த ஹோட்டல்கள் நமது நாட்டில் நிரம்ப ஏற்பட வேண்டும். அந்நியச் செலா வணி வருவாய்க்கு இது நல்ல துறை. தர மான உணவு வகைகளும், அன்பான உப சரிப்பும், சுத்தமான நவீன வசதிகளும் நமது நாட்டைப் பற்றி உயர்ந்த மதிப்பை அவர்களிடையே ஏற்படுத்தவும் உதவும். இப் பொழுது ஹோட்டல் தொழிலில் பயிற்சி யளிக்கப் பிரத்தியேகமான கல்வி நிலையங் களும் நமது நாட்டில் ஏற்பட்டிருக்கின்றன.

## ஒரு தனி உலகம்!

அதிருக்கட்டும். நமக்குப் பழக்கமான ஹோட்டல் ஒன்றில் நுழைவோமா?

''என்ன சார் உங்களுக்கு?''

''என்ன இருக்கு?''

''பாதம் அல்வா, பாசந்தி, மைசூர்பாக், ஜாங்கிரி, பூந்தி, லட்டு, மோகன்டாஸ், பால் பேணி,' ரவா கிச்சடி, ரவாதோசை, ஊத்தப்பம், மசாலா, வெங்காய வடை, பூரி கிழங்கு,'போண்டா — பெங்களூர் அண்டு மைசூர், கோவில் இட்லி... உம் என்ன வேணும்?''

புதுமைப்பித்தன் கதையில் வரும் மெஷின் மாதிரியான சர்வர் ரகத்தைச் சேர்ந்த ஒருவர் தான் இப்படி ஒப்புவிக்கிறார். இத்தனையை யும் சொல்லிவிட்டும், வந்தவர் 'ஸ்ட்ராங்கா ஒரு காப்பி' என்று சொல்லும்போது அலுத் துக்கொள்ளாமல் காப்பி கொண்டு வர உள்ளே செல்லும் மனப் பக்குவம் அவருக்கு உண்டு. எத்தனை விதமான மனிதர்களை நாள்தோறும் பார்க்கிறார் அவர்!

அவருக்கு அசாத்தியமான ஞாபக சக்தி! தின்பண்டங்களின் பெயர்களை இயந்திர கதியில் ஒப்புவிப்பது போலவே எந்த எந்தத் தியேட்டர்களில் என்னென்ன படம் என்று ஒரு பட்டியல் கொடுத்து விடுவார். உங் களுக்கு நேரம் இருந்து, அவருக்கும் ஒழிவு இருந்தால், அவைகளை விமரிசனமே செய்து விடுவார்.

அதோ அங்கே பில் கொடுக்கும் கௌண் டருக்கு அருகில் என்ன தகராறு? நாலு நண்பர்கள் சாப்பிட வந்திருக்கிறார்கள். பில்லுக்குப் பணம், தான் தான் தரவேண்டும் என்று ஒவ்வொருவரும் வற்புறுத்தும் அன்புத் தகராறு.

சர்வர் ஒரு கணம் நின்று இதைப் புன் னகையோடு பார்க்கிறார். மீண்டும் பழைய இயந்திர கதியில் இயக்கம். டேவரா, டம்ளர் களின் ஓசை; காப்பி ஆற்றும் ஓசை; ''அம்பி, சாருக்கு என்ன வேணுமோ கேட்டுக் கொடு!'' மணி அடிக்கும் சப்தம். மீண்டும் சர்வரின் பழைய பட்டியல் ''பாதம் அல்வா, பாசந்தி, மைசூர் பாக், ஜாங்கிரி......''

ஹோட்டல்! — அது ஒரு தனி உலகம்.

''உன் தம்பிக்கு நிறையக் கடி தாசுகள் போட்டிருந்தேனே அதெல் லாம் வந்து சேர்ந்ததாமா?''

''நீங்க கடன் கேட்டு எழுதியிருந்த அந்தக் கடிதம் மட்டும் கிடைக்கல் லேன்னு சொன்னான்!''

# ம. பொ. சி. யும் ஆட்சிமொழியும்

ஐம்பத்தெட்டு வயது நிறைவு பெற்ற நண்பர் ம. பொ. சி. அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். இறைவன் அருளால் அவர் ஆரோக்கிய வாழ்வு பெற்று, நீண்ட நாள் வாழ வேண்டும்.

சென்ற வாரம் சென்னையில் ம. பொ. சி. அவர்களின் பிறந்த நாள், ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் ராஜாஜி, டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், வி. வி. கிரி முதலிய பிரமுகர்களிடமிருந்து அவருக்கு வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. இதைப் பார்த்தபோது ஆங்கிலம் படித்தவர்கள் தமிழ்ப் புலமை பெற்றவர்களை அலட்சியம் செய்கிறார்கள் என்று ம. பொ. சி. கொண்டிருக்கும் கருத்து எவ்வளவு தவறானது என்பதற்கு அவரே சான்றாக விளங்கும் உண்மை மனத்தில் 'பளிச்'சென்று பட்டது.

திரு ம. பொ. சி. அவர்கள் ஆங்கிலம் படித்துப் புலமை பெற்றவரல்ல என்றாலும், அவர் புலமையையோ கருத்துக்களையோ இதுவரை ஆங்கிலம் படித்தவர்கள் யாரும் அலட்சியப்படுத்தியதாக அறியோம். அதற்கு மாறாக, ஆங்கிலம் படித்தவர்கள்தான், அவரது தர்க்கவாதத்தையும் நுட்பமாக ஆராய்ந்து நடுநிலையில் நின்று பேசும் திறமையையும் வெகுவாகப் பாராட்டி வந்திருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட ம. பொ. சி. அவர்கள் மத்திய சர்க்காரின் ஆட்சிமொழி விஷயத்தில் தெளிவற்ற சிந்தனையோடு விளங்குவதைக் காண்கிறோம். வெறுப்பு உணர்ச்சி கொண்டவன் எதையும் நன்கு சீர்தூக்கிப் பார்க்க முடியாமல் அவதிப்படுவான் என்று பெரியோர்கள் கூறும் வாக்கு ம. பொ. சி. விஷயத்தில் உண்மையாக இருப்பதைக்காணப் பரிதாபமாக இருக்கிறது. ஆட்சிமொழி விஷயத்தில் ராஜாஜி குழந்தைக்கும் தெளிவாகும்படி கூறும் விஷயங்களையெல்லாம் ம.பொ.சி. குழப்பிக் கொள்வதைக் காணும்போது அவர் உள்ளத்தில் உள்ள வெறுப்பு எவ்வளவு கடுமையானது என்பது புரிகிறது. யார் மேல் வெறுப்பு? அன்னை கலைவாணி பெற்று இந்தியத் தாயிடம் கொடுக்கப்பட்ட ஆங்கிலத்தின் மீதுதான்.

''ஹிந்திதான் இந்தியாவின் பொது மொழி என்பதை என் தமிழரசுக் கழகம் ஏற்றுக் கொள்கிறது. காரணம் ஹிந்தி பக்தி அன்று; இங்கிலீஷ் எதிர்ப்புணர்ச்சி!'' என்று அவருடைய ''இன்பத் தமிழா, இந்தி — ஆங்கிலமா?'' என்ற புத்தகத்தில் குறிப்பிடுகிறார். இந்த எதிர்ப்புணர்ச்சி காரணமாக ம. பொ. சி. அவர்கள் நாட்டின் பொது மொழிக்கும் அகில இந்திய ஆட்சி மொழிக்கும் உள்ள பாகுபாடு; ராஜ்ய ஆட்சிமொழிக்கும் மத்திய ஆட்சி மொழிக்கும் உள்ள வேறுபாடு; ஆகியவை புரியாமல் தவிப்பதைக் காண நமக்கு உண்மையில் வருத்தமாக இருக்கிறது.

நமது நாட்டில் மொத்தம் பதினான்கு தேசிய மொழிகள் உள்ளன என்று அரசியல் நிர்ணயச் சட்டம் அங்கீகரித்திருக்கிறது. அந்தந்த ராஜ்யத்தில் அந்தந்த ராஜ்ய மொழி ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதே ராஜாஜியின் கருத்து. இந்தக் கருத்துக்கு மாறுபட்ட கருத்தை என்றுமே சொன்னதில்லை. அதற்கு மாறாக, ''இந்தியை மத்திய ஆட்சி மொழியாக்க அவசரப்படும் நீங்கள், ஹிந்தி பேசும் ராஜ்யங்களான உ. பி., பீகார், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் ஆகியவற்றில் ஹிந்தியை ராஜ்ய ஆட்சி மொழியாக இன்னும் சரியாக அமுல் நடத்த முடியாமல் இருக்கிறீர்கள். உங்கள் நிலையே அப்படியிருக்கையில் ஹிந்தி கொஞ்சம்கூடப் பேசாத, அறியாத எங்கள் மக்கள் மீது ஏன் திணிக்கிறீர்கள்?'' என்றுதான் கேட்டிருக்கிறார்.

ஹிந்தி, மத்திய ஆட்சி மொழியாவதற்குப் போதிய தகுதி பெற்றிருக்கவில்லை என்றாலும் அந்த ஹிந்தியைத் தட்டுத் தடுமாறி மேற்கண்ட ராஜ்யங்களில் (ஒவ்வொரு மாதிரி மக்கள்) பேசிப் புரிந்து கொள்ளுகிறார்கள். ஆகவே அந்தப் பரந்த பிரதேச மக்களுடன் நம் மக்கள் தொடர்பு கொள்ள ஹிந்தி ஓரளவு பயில்வது அவசியம் என்று ராஜாஜி கருதினார். அந்த வகையில் ஹிந்தி பொது மொழி ஆகும். அது பல நாற்பதாண்டுகளுக்கு முன்பு முயற்சிகள் எடுத்துக் கொண்டார். அந்த நிலையிலிருந்து ராஜாஜி இன்றும் பிறழவில்லை. காலம்சென்ற பி. ஜி. கெர் தலைமையில் மத்திய ஆட்சி மொழிக் கமிஷன் வந்த போதுகூட இதே கருத்தைத்தான் வெளியிட்டார். ''இருபதாண்டுகளுக்கு எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் தேசம் முழுவதிலுமுள்ள மாணவர்கள் கட்டாயமாக ஹிந்தி படிக்க வசதி செய்யத் தைரியம் இருந்தால் செய்யுங்கள். அதற்குப் பிறகு ஆட்சி மொழிப் பிரச்னையைப் பற்றிச் சிந்திப்போம். அப்படிக் கட்டாயப் படுத்தத் தைரியம் இல்லாவிடில் சும்மா இருங்கள்!'' என்று கூறினார்.

ஆனால் ம. பொ. சி. அவர்கள், ''ஆட்சி மொழியாக இந்தியை ஏற்க முடியாதென்றால், பள்ளியில் புகும் அத்தனை பிள்ளைகளுக்கும் அந்த மொழியைக் கட்டாயமாகப் புகுத்துவானேன்?'' என்று கேட்கிறார்.

மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்குப் போகும் பிள்ளைகளைவிட, வர்த்தகத் துறையில் தொழில் துறையில் பிரவேசிக்கும் மக்களின் எண்ணிக்கை அதிகம். தமிழக மக்கள் தமிழ் நாட்டிலேயே முடங்கிக் கிடக்காமல் விசாலமான பாரதத்தைக் காண அவர்கள் விரைவாக ஹிந்தி பயில வேண்டும் என்று ராஜாஜி விரும்புகிறார்.

ம.பொ.சி. அவர்கள், ''அறிஞர் ராஜாஜி அவர்களின் 'என்றென்றும் ஆங்கிலம்' என்ற தமிழ் விரோதக் கொள்கை...'' என்று ஓர் இடத்தில் குறிப்பிடுகிறார். மற்றோர் இடத்தில், ''தலைவர் ராஜாஜி மாநிலங்களிலும் இன்றுள்ளது போல் என்றென்றும் ஆங்கில ஆதிக்கம் நீடிக்க வேண்டும் என்கிறார். இனியும் இதுதான் அவருடைய கொள்கை என்றும்

தாய்மொழிப் பற்றுள்ள எவரும் ஆதரிப்பதற்கில்லை. தாய்மொழித் துரோகிகள் அரசியல் சுயநலம் கருதி அவரை ஆதரிக்கலாம். அவர்கள் செயல், அழிந்து கொண்டிருக்கும் தமிழுக்குப் பாடை கட்டுவதாகும்'' என்கிறார் ம. பொ. சி.

மேலே குறிப்பிட்ட விஷயங்கள் அவ்வளவும் தவறு.

பாரத நாட்டின் பல்வேறு மொழிகள் பேசும் அத்தனை பேருக்கும் பொதுவான, உரிமையுள்ள மத்திய சர்க்காரின் ஆட்சி மொழி இன்று போல் என்றென்றும் ஆங்கிலமாக இருக்க வேண்டும் என்று சொல்லுவதனால் ராஜாஜி தமிழ் விரோதக் கொள்கையுடையவராக எப்படி ஆகி விடுகிறார் என்பது தெரியவில்லை.

மாநிலங்களில் ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்று ராஜாஜி சொல்லாததை அவர் மேல் பழியாகச் சுமத்துகிறார் ம. பொ. சி. தமிழ்ப் பண்பின் காவலராக விளங்கும் அவர் எப்படிப்பட்ட மொழிகளை உதிர்த்திருக்கிறார்! அந்தோ பரிதாபம்!

பள்ளிகளில் தாய்மொழி மூலம் போதனை நடைபெற வேண்டும் என்று ராஜாஜி நாற்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்து சொல்லி வருகிறார். சொல்லி வருவதோடு செயல் முறையில் கொண்டு வர முற்பட்டார். காலஞ்சென்ற அ. மாதவய்யா அவர்களுடன் சேர்ந்து நாற்பதாண்டுகளுக்கு முன்பே கலைச் சொற்களைத் தமிழில் மொழிபெயர்க்க முயற்சி எடுத்துக் கொண்டார். முதன் முறை சென்னைப் பிரதம மந்திரியானபோது தமிழ் போதனை முறைக்குத் திட்டம் வகுக்க முயற்சி எடுத்துக் கொண்டார். கலைச் சொல்லாக்கத்துக்கு ஆர்வமூட்டினார். விஞ்ஞான பாடங்களில் ஒன்றிரண்டைத் தாமே தமிழில் எழுதி வெளியிட்டார். பதவியை விட்டு விலகிய காலத்தும் விஞ்ஞான விஷயங்களைப் பாமர மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் எழுதித் ''திண்ணை ரசாயனம்'' போன்ற சிறு புத்தகங்கள் வெளியிட்டார். தாவர சாஸ்திரத்தைத் ''தாவரங்களின் இல்லறம்'' என்ற பெயரில் ஓர் அரிய நூலாக வெளியிட்டார். இவை மட்டுமின்றி, கல்லூரி ஆசிரியர்கள், கல்வித் துறை விற்பன்னர்கள் அழைக்கும் கூட்டங்களில் எல்லாம், ''புரியாத விஷயத்தைப் புரியாத மொழியில் மாணவர்களுக்கு விளக்கப் பார்க்காதீர்கள். தாய்மொழியின் மூலம் விளக்குங்கள்'' என்று கூறித் தாமே ஒரு கருத்தைத் தமிழில் விளக்கிக் காண்பித்து வந்திருக்கிறார். பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் ''தமிழில் உயர்தரக் கல்விக்குரிய பாடபுத்தகங்கள் இல்லையே, மொழிபெயர்க்கப்பட்ட புத்தகங்கள் தரமாக இல்லையே!'' என்று குறைப்பட்டபோது, ''ஐயா, பேராசிரியர்களே! பாடபுத்தகங்கள் வேண்டுமானாலும் ஆங்கில புத்தகங்களாக இருந்து விட்டுப் போகட்டும், போதனையை ஆங்கிலக் கலைச் சொற்கள் கலந்த தமிழ் மொழியில் நடத்துங்கள்!'' என்று நல்லதொரு யோசனை கூறினார். இப்படியெல்லாம் தமிழில் பல கலைகளும் வரவேண்டும் என்று ஆர்வம் காட்டும் ராஜாஜியைப் பார்த்து, ''தமிழ் விரோதக் கொள்கை யுடையவர்'' என்றால் யாரும் கைகொட்டிச் சிரிக்க மாட்டார்களா?

மொத்தத்தில் ம. பொ. சி. அவர்கள் ராஜாஜியைப் பற்றிப் பல அபாண்டமான கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். ம. பொ. சி.யா இப்படி எழுதியிருக்கிறார் என்று நம்ப முடியாத அளவுக்கு எழுதியிருக்கிறார்.

''ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்த போதுதானே ஒப்புதல் கையெழுத்திட்டார். இப்போது ஏன் ஆட்சேபிக்கிறார்?'' என்று கேட்கிறார்.

அரசியல் முறைகள் தெரியாதவர்கள் இப்படிப் பேசலாம். ம. பொ. சி. இவ்வாறு சொல்வது வியப்பாக இருக்கிறது.

ராஜாஜி அந்தக் காலத்தில், ஹிந்தி ஆட்சி மொழியாகலாம் என்று நினைத்திருந்தார் என்றே வைத்துக் கொள்ளலாம். அந்தக் கருத்தை இன்று மாற்றிக் கொண்டால் என்ன தவறு?

அதே காலத்தில் அரசியல் நிர்ணயச் சட்டத்தில் உறுதியாக எழுதப்பட்ட எத்தனை பகுதிகளை நேரு அவர்கள் இந்தப் பதின்மூன்று ஆண்டுகளில் மாற்றும்படி கேட்டு மக்கள் சபையின் அனுமதியும் பெற்றிருக்கிறார் என்பதை ம.பொ.சி அவர்கள் சிந்திக்கவேண்டும்.

ஹிந்தி மத்திய ஆட்சி மொழியானால், ஹிந்தி தாய்மொழியாகப் பெற்றவர்களுக்கே அதிக சலுகைகளும், வாய்ப்புக்களும் ஏற்படும். அவர்களுடைய ஆதிக்கமும் ஏற்படும்! ஆங்கிலம் எல்லா மொழியினருக்கும் அந்நிய மொழியாதலால், எல்லாருக்கும் சம வாய்ப்புக்கள் ஏற்படும். ம. பொ. சி. அவர்கள் மாநிலங்களுக்கு அதிக உரிமைகளைக் கேட்கும் கொள்கையுடையவர். மாநில சுயாட்சிக் கருத்து வெற்றிகரமாகச் செயல்பட ஆங்கிலமே மத்திய ஆட்சிமொழியாக இருந்தால் தான் சாத்தியமாகும். அவர் ராஜாஜியுடன் ஒன்று சேர்ந்து போராட வேண்டும். ஆனால் அவர் ஆங்கிலத்தின் மீதுள்ள வெறுப்புணர்ச்சியால் தம்முடைய அடிப்படைக் கொள்கையையே மறந்து விட்டார்! ''ஆங்கிலம் அந்நிய மொழி என்று புறக்கணித்தால், அதனால் விளையக் கூடிய பெரும் பயனை இழந்துவிடுவோம். முகத்தின் மீது கோபப்பட்டு மூக்கை அறுத்துக்கொள்ளக் கூடாது!'' என்று ராஜாஜி ஒரு முறை தடுத்ததைத்தான் ம.பொ.சி. இன்று செய்து கொண்டு வருகிறார்.

அந்நிய தந்தி, அந்நிய ரயில், அந்நிய வைத்தியம் என்றெல்லாம் சொல்லாமல் புத்திசாலித்தனமாக இருப்பது போல் பாஷை விஷயத்திலும் இருப்போமாக. ஹிந்திமொழி தென்னாட்டுக்கு அந்நிய மொழி. உலகமொழியாகிய ஆங்கிலம், பாரத நாட்டின் பல பிரதேசங்களுக்கும் பட்சபாதமின்றிப் பயன்படக் கூடியது. இந்த மொழியை ஏன் விட்டு விட வேண்டும்? இந்தப் பன்னிரண்டு ஆண்டுகள் கௌரவமாக வாழ்ந்தோம் அல்லவா? அதே போல் இனியும் வாழலாம். எல்லா வெறுப்புக்களையும்விட பட்சபாதத்தை வெறுக்க வேண்டும். ஹிந்தி அகில இந்திய ஆட்சி மொழியாவது பட்சபாதம். தென்னாட்டு மக்களைக் கீழ்ச்சாதியினர் ஆவதற்கு வழிசெய்வதாகும்.

# மக்ளீன்ஸ் பற்களை வெண்மையாக்குகிறது என்பதற்கான ஆதாரம்

## 1 அதை உணருங்கள்

பற்களில் கறை படிந்திருக்கிறதா? அது இயற்கையான வெண்மையை மறைக்கிறது. இப்போது மக்ளீன்ஸ் கொண்டு பல்துலக்கி அது கறையை எவ்வாறு அகற்றுகிறது என்று உணருங்கள்.

## 2 அதை ருசியுங்கள்

நீங்கள் அனுபவிக்கும் அந்த குளுமையான ருசிக்குக் காரணம் மக்ளீன்ஸில் இருக்கும் 3 கலவைப் பொருள்களும் திறம்பட வேலை செய்வதால்தான். அவை பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கி பாதுகாக்கின்றன.

## 3 அதைப் பாருங்கள்

உங்கள் புன்முறுவலில் காணும் வெண்மையைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். உங்கள் பற்களை முன்பிருந்ததைவிட மக்ளீன்ஸ் பற்களை இன்னமும் வெண்மையாக்குகிறது. நீங்களே இதைப் பரீட்சித்துப் பாருங்கள்.

வெண்மை
யான
பற்களுக்கு
மக்ளீன்ஸ்



இப்பொழுது நடைபெறுகிறது

பாரகன் • மேகலா • ஸ்ரீ முருகன்
தங்கம் மற்றும் தென்னாடெங்கும்



ஹரிஹரன் பிலிம்ஸ்

# ஆனந்த ஜோதி

கதை, வசனம் - ஜாவர் சீதாராமன் • பாடல்கள் - கவிஞர் கண்ணதாசன்
சங்கீதம் - மெல்லிசை மன்னர்கள் விஸ்வநாதன் - ராமமூர்த்தி

டைரக்ஷன்
வி. என். ரெட்டி • ஏ. எஸ். ஏ. சாமி

தயாரிப்பு • பி. எஸ். வீரப்பா

# பாக்கியசாலி

## எஸ். ரங்கநாயகி

குருக்ஷேத்திரத்தில் தரும புத்திரரின் பாசறை. கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்து இருந்தார் யுதிஷ்டிரர். அருகில் அர்ஜுனன் இல்லை. அர்ஜுனன் இருப்பின் இந்தக் கவலைகளுக்குக் காரணமும் இருக்காது. துரோணர் பத்ம வியூகத்தை வகுத்து விட்டார். போருக்கு அழைப்பு வந்து விட்டது. எதிரிகளின் அறைகூவலை மறுப்பது அவமானகரமான விஷயம். இந்த வியூகத்தின் முறையை அர்ஜுனன் ஒருவன் மட்டுமே அறிவான்! வேண்டுமென்றே அர்ஜுனனை சம்சப்தகர்கள் போருக்கு அழைக்க, அச்சமயத்தில் துரோணர் இந்த ஏற்பாட்டைச் செய்திருப்பாரோ!

''பெரியப்பா!''

யுதிஷ்டிரர் திரும்பி நோக்கினார். அர்ஜுனனின் அருமை மைந்தன் அபிமன்யு வணங்கிக் கொண்டிருந்தான்.

''வாப்பா, குழந்தை!'' யுதிஷ்டிரர் வரவேற்றார்.

போருக்கான முரசொலி கேட்டது. அபிமன்யு தருமரை நோக்கிக் கூறினான். ''தந்தையே, நேற்று நேர்ந்த அவமானத்தின் அழுக்கு இந்த வேளைக்கு விலகியும் இருக்காதே. அதற்குள் ஏது இந்தப் போருக்கான அழைப்பு?''

பளிச்சென ஏதோ நினைவுக்கு வந்தவர் போல் தருமர் தலை தூக்கினார். ''அபிமன்யு! இப்போதுதானடா, நினைவுக்கு வருகிறது...''

''என்ன நினைவு?''

''போர் அழைப்பைக் கேட்டாயல்லவா? நேற்று கிடைத்த தோல்விக்கு இது பழி வாங்கும் படலம்.''

''பழி வாங்குவதா? பாண்டவர்களிடம் பழி வாங்க ஒருவனுக்குத் துணிவும் உண்டோ?'' வீரம் தலை தூக்க வினவினான்.

அவனது வீரத்தை மனத்தோடு மெச்சினார் குந்தி புத்திரன். ''சரியாகத்தான் சொல்கிறாய் அப்பா! ஆனால்.... உனக்குத் தெரிந்திருக்காது. பத்ம வியூகத்தை அமைத்து மார் தட்டி அழைப்பு விடுகிறார்களப்பா.'' தருமர் சற்று நிறுத்தி விட்டுப் பிறகு கூறினார். ''நம் படையில் அர்ஜுனன் ஒருவன் மட்டுமே அதில் நுழைந்து புறப்படுவதை அறிவான். அவனோ தூரத்தில் சென்று விட்டான். போரின் அழைப்பை ஏற்காவிடில் வீரர்களுக்கு அவமானம்..... அபிமன்யு! உன்னைப் பார்த்ததும் தான் என் மனம் சற்று ஆறுதல் கண்டது. இந்த வியூகத்தைப் பற்றி அர்ஜுனன் உனக்குச் சொல்லிக் கொடுத்திருப்பதாகக் கூறியுள்ளான். நீ இருக்கும்போது என்ன கவலை?''

உற்சாகத்துடன் கேட்டு வந்த அபிமன்யு மெள்ளத் தலை குனிந்து விட்டான். ஏதோ யோசனை!

தருமர் அபிமன்யுவை நோக்கினார்..... இதென்ன, அபிமன்யுவின் முகம் உற்சாகம் இழந்து, மெள்ளக் களையிழந்து காணப்படுகிறதே! ஒருகால் போருக்குப் போக விருப்பமில்லையோ! ஆம், அப்படித்தான் இருக்க வேண்டும். தந்தையாகும் பேரின்பத்தை அடையப் போகிறான். குழந்தையை ஆவலோடு எதிர் நோக்குகிறான். உத்தரையின் அருகிலேயே பெரும் பொழுதைக் கழிக்க விரும்புகிறான். போரில் வெற்றி தோல்வி நிச்சயமில்லை. அவனைப் போருக்குப் போகவே சொல்லியிருக்கக் கூடாது.



''அபிமன்யு, தலைநிமிர்ந்து சொல்லப்பா! ஏதோ நினைவில் சொன்னேன். உத்தரையின் அருகில் இருந்து கவனிக்கவேண்டியது பெரிய பொறுப்புத்தான்....... இந்த வயதில் எனக்கு எவ்வளவு மறதி பார்!''

அபிமன்யு துடிதுடித்து விட்டான். தான் ஏதோ தவிப்பில் இருந்ததைப் பெரிய தந்தை இப்படி மதிப்பிட்டு விட்டாரே!

''தந்தையே! இப்படிக் கூறும்படி உங்களை ஏற்படுத்தி விட்டதற்கு மன்னிப்புக் கோருகிறேன். பாண்டவ குலத்தோர் வீரர்கள், யுத்த லட்சுமியை விரும்புபவர்கள், மனைவியின் அருகிலேயே நிற்பவர்கள் அல்ல என்பதைத் தாங்கள் அறிவீர்கள். என் தயக்கத்துக்குக் காரணம்.....''

''சொல்லப்பா!''

''தந்தையிடம் கற்ற இந்தக் கலை பாதியில் நின்றுவிட்டதே! வியூகத்தில் நுழைவதை மட்டும் நான் அறிவேன். ஏதேனும் நேரிடின் திரும்பி வரும் கலையைக் கற்கவில்லை... தாங்கள் இடும் கட்டளையை நிறைவேற்றுவது எப்படி என்றே யோசனை....''

''அபிமன்யு! கவலை வேண்டாம்.'' பீமசேனன் உள்ளே வந்தபடி கூறினான். ''நீ

வியூகத்தில் நுழையும்போது நாங்களும் உன்னைப் பின் தொடர்ந்து வந்துவிடுவோம். அதனால் உன்னை உனக்கு ஒரு தீங்கும் ஏற்படாது. அஞ்சாமல் வியூகத்தை உடைத்து விட்டு நுழைந்து எங்களுக்குவழிகாட்டிவிடு.''

அபிமன்யுவின் முகம் மலர்ந்தது. இவ்வளவு வீரர்கள் பின் தொடரும்போது ஏது கவலை? பெரிய தந்தையின் கட்டளையைக் காப்பாற்ற இனித் தடங்கல் ஏதும் இல்லை.

அபிமன்யு உடனே புறப்பட்டுவிட்டான். நேராக உத்தரையின் இருப்பிடம் சென்றான்.

''உத்தரை! என் தந்தை இல்லாத போது வியூகத்தை அமைத்துப் போருக்கு அழைப்பு விடுக்கிறார்கள் நம் பகைவர்கள். அவர்கள் கர்வத்தைச் சூரணமாக்கும் கௌரவம் எனக்குக் கிடைக்கப் போகிறது. உன் கோமளக் கையினால் மங்கள திலகம் ஏற்று ஒரு நிமிடத்தில் யுத்த சன்னத்தமாகிவிடுவேன்....'' அபிமன்யுவின் முகத்தில் யுத்த மதம் பிடித்த களிப்பு.

அவள் திடுக்கிட்டு அபிமன்யுவின் மீது சாய்ந்தாள். ''அன்பரே! நான் சொல்லப் போவது உங்களுக்கு விருப்பமாக இராது என்பதை நான் அறிவேன். என்னை மன்னித்து விடுங்கள். இன்று யுத்த களத்துக்கு நீங்கள் போவதை நிறுத்திக் கொள்ளுங்கள்....வேண்டாம்.....'' கண்ணீர் அருவியுடன் உத்தரை கெஞ்சினாள்.

அபிமன்யு சற்றே சினம் கொண்டு தள்ளி நின்றான். ''உத்தரை! இது என்ன பைத்தியக்கார ஓலம்? க்ஷத்திரிய குலத்தில் பிறந்தும்; புகுந்தும்விட்ட பிறகு இவ்வளவு பயமா? வீர அபிமன்யுவின் கைப்பிடித்த நீயா இவ்விதம் கூறுகிறாய்?''

உத்தரை கணவனின் கையைப் பிடித்துக் கொண்டாள். ''கெட்ட கனவு ஒன்று கண்டு விழித்த நிலையில் இருந்தேன்... இன்று என் மனம் நிம்மதியாயில்லை. அநேக அபசகுனங்கள்... இன்னொரு நாள் போர் முனைக்குச் செல்லுங்கள்.''

மனைவியின் முதுகை அன்போடு தடவினான். ''உத்தரை! க்ஷத்திரிய குலத்தோர் கனவு, சகுனம் போன்ற பதங்களைப் பொருட்படுத்த மாட்டார்கள். வீரர்கள் போருக்கு முன்வைத்த காலைப் பின் வைக்க மாட்டார்கள். மரணம் எனக்குப் பெரிதல்ல. பெரிய தந்தையின் கட்டளை பெரிது'' என்று கூறியவன் மெள்ளச் சிரித்தபடி காதோடு கூறினான்: ''உத்தரை, பிறக்கப் போகும் செல்வன் வீரத் தந்தையின் புதல்வன் என்ற கௌரவம் அடைவதை நீ விரும்பவில்லையா? போருக்குப் பயந்து நின்றான் என்றால் என் மகனே எனக்கு மதிப்பு அளிக்க மாட்டானே! உத்தரை, சீக்கிரம் விடை கொடு.''

உத்தரை இணங்கினாள். கணவன் மனம் திரும்பாது என அறிந்தாள். செம்பஞ்சுக் கைகள் அவளது கணவனின் நெற்றியில் நடுக்கத்துடனேயே திலகமிட்டன.

பாசறையில் பெரு வெள்ளம். சோக வெள்ளம். ஒருவரும் ஒன்றும் பேச முடியாது தவித்து நிற்கின்றனர். அநியாயம், அக்கிரமம். யாவரும் அறிந்த உண்மை. மகாரதர்கள் ஒன்று சேர்ந்து வயதில் குறைந்த அபிமன்யுவைத் தனித்து நிற்கும்போது எப்படித் தாக்கி அழித்து விட்டனர்! விதி அந்த உருவில் நின்றது என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிடில் பின் வந்த பீமன் முதலானோர் அபிமன்யுவைப் பின்தொடர முடியாதபடி ஜயத்ரதன் வியூகத்தை அடைத்துவிட்டிருக்க முடியுமா?

தருமன் புலம்பித் தவிக்கிறார்: ''நானல்லவோ மைந்தன் மரணத்துக்குக் காரணம்! நான் யாருக்கு என்ன பதில் சொல்ல முடியும்? குலத்தை நாசமாக்கி இந்த மண்ணை எதற்கு ஆள வேண்டும்! கிருஷ்ணா, வேண்டாமப்பா இந்தக் கோர விளையாட்டு. எனக்கு மண் வேண்டாம். மக்கள் வேண்டும். பொன்னும் பொருளும் வேண்டாம், உயிரும் அன்பும் வேண்டும்...''

பரந்தாமன் மௌனமாக அமர்ந்து இருக்கிறார். இவ்வளவு நேரம் துயரத்தில் ஆழ்ந்து கிடந்த அர்ஜுனன் ஆவேசத்துடன் எழுந்தான். ''கண்ணா! இது என் பிரதிக்ஞை! கேட்டுக் கொள். நான் இல்லாதபோது பத்ம வியூகத்துக்கு அழைப்பு விடுத்து ஜயத்ரதன் காரணமாக ஒருவர் உதவியும் கிட்ட முடியாதபடி என் அருமை மைந்தன் கொல்லப்பட்டான். இதற்குக் காரணமான ஜயத்ரதனை நாளை மாலைக்குள் கொன்றுவிடப் போகிறேன்....''

அருகில் நிழல் தட்டியது. தள்ளாடித் தள்ளாடி வந்து நின்றவள் உத்தரை. கணவன் புறப்பட்டுச் சென்றது முதல் அவளுக்கு மனக் கலக்கம்.

உத்தரைக்கு எவ்விதம் யார் இந்த அவலச் செய்தியைச் சொல்வது எனத் தவித்துக் கொண்டிருந்தவர்கள் உத்தரையை நேரில் கண்டதும் அனைவரும் தலை குனிந்தனர். உத்தரை நிலைமையைப் புரிந்து கொண்டு விட்டாள். உடனே மூர்ச்சையானாள்.

''மாமா! மாமா!'' தளர் நடையுடன் குழந்தை பரீட்சித்து உள்ளே நுழைந்தான்.

''வாப்பா குழந்தாய்!'' கண்ணன் குழந்தையை அணைத்து உச்சி முகர்ந்தார்.

''மாமா நானும் உன்னுடன் வரப் போகிறேன்!''

''எங்கேயடா, குழந்தாய்?''

''திருடித் தின்ன!'

''திருடித் தின்னவா?''

''தெரியாதது போல் பேசாதே! சுபத்ரை பாட்டி எல்லாம் சொல்லிவிட்டாள். நீ வெண்ணெய், தயிர் எல்லாம் திருடித்தான் சாப்பிடுவாயாம்!''

''எல்லாக் கதைகளையும் சொல்லிவிட்டாளாக்கும் உன் பாட்டி. ஆனால் குழந்தாய், நான் இப்போதெல்லாம் திருடப் போவதே இல்லையப்பா! என்னைப் பார். எவ்வளவு பெரியவனாக வளர்ந்து விட்டேன். உறியெல்லாம் கைக்கு எட்டும். திருடுவதிலும் கஷ்டப்பட்டுத் திருடினால்தான் ஆனந்தம்!''

பரீட்சித்து சற்று மௌனமாக இருந்தான். ''சரி, மாமா, நான் இங்கேயே வரப் போகிறேன்.''

''இதென்னடா, வம்பு! உன் அம்மா விட மாட்டாளே!''

"நீயும் உன் அம்மா, அப்பாவை விட்டு விட்டு வளர்ந்தாயாமே!"

"என் அப்பா சிறையில் இருந்தார்."

"என் அப்பாவும்....." சடக்கெனக் குழந்தையின் குரலில் ஓர் அடைப்பு. முகத்தில் துயரம். "மாமா...மா...மா..."

"என்னப்பா?"

"மாமா, அப்பா...வை.. நான் பார்க்கவே யில்லை...." கண்களில் நீர்த் தேக்கம்.

வாசுதேவனுக்கும் உள்ளத்தில் வேதனை.

"மாமா! அம்மா சொல்கிறாள். எனக்குப் பாக்கியமே யில்லையாம்...."

கண்ணன் குழந்தையை மடியில் வைத்துக் கொள்கிறார். "யாரடா சொன்னது நீ பாக்கியமற்றவன் என்று? பாண்டவ குலத்தில் நீதான் பெரும் பாக்கியசாலி என்று எல்லோரிடமும் சொல். தெரியாது பேசுபவர்களின் பேச்சைக் கேட்காதே."

"உண்மையாகவா மாமா?"

"ஆமாமடா, ராஜா! பெரும் உண்மை!"

குழந்தையின் மனத்தில் மீண்டும் மகிழ்ச்சி நிழலாடியது. "மாமா! நான் போகிறேன்!"

"இங்கேயே இருப்பதாகச் சொன்னாயே!"

"அம்மா தனியாக இருப்பாளே!" குழந்தை ஓடி விட்டான்.

உத்தரை மௌனமாக அமர்ந்து கிடந்தாள். தூரத்தில் குழந்தை பரீட்சித்து விளையாடிக் கொண்டிருந்தான். அவன் சிரிக்கும் போதெல்லாம் உத்தரை அவனிடம் அபிமன்யுவைக் கண்டாள்.

தன் நினைவு மறந்து இருந்தவளின் தோளில் இரு சின்னஞ் சிறு கைகள் பூப்போல் பதிந்தன. பின்பு முகத்தில் வழிந்த நீரைத் துடைத்தன. "அம்மா, நீ ஏன் அழுறும்?"

"இல்லையேடா, குழந்தை"

"நீ அழாதே. நான் பெரிய தாத்தாவைப் போல் நல்லவனாக இருப்பேன்; தாத்தாவையும் அப்பாவையும் போல் வீர தீரத்துடன் இருப்பேன். நீ அழாதே!"

"நல்லதடா, குழந்தாய்!" என்று கூறிய உத்தரை அப் பேச்சினின்று குழந்தையின் மனத்தை மாற்ற, "நீ சாப்பிடும் நேரமாகிறதேடா, எழுந்து வா" என்றாள்.

"ஊஹூம். நான் சாப்பிட மாட்டேன்."

"இதென்னப்பா, பிடிவாதம்?"

"நீ கதை சொல்லணும்."

"கதையா.... க..தையா....?" உத்தரைக்கு மீண்டும் பழைய நினைவு.

குழந்தை தாயின் சஞ்சலத்தைப் பார்த்தான். "கதை தெரியாவிட்டால் அழாதேம்மா. நான் உனக்குச் சொல்கிறேன். நேற்று பாட்டி சொன்னாள்."

"சொல்லப்பா!"

"ஒரு ஊரில் ஒரு ராஜாவாம். ஐந்து அண்ணன் தம்பியாம். அவர்களைக் காட்டுக்கு யாரோ ராஜா துரத்தி விட்டானாம். ஒரு வருஷம் ஒருத்தர் கண்ணிலும் படாமல் இருந்தபோது ஒரு பெண்ணைப் பார்த்தார்களாம். அந்த ராஜா தன் பிள்ளைக்கு அந்தப் பெண்ணை விவாகம் செய்து வைத்தானாம். அந்தப் பிள்ளை ரொம்ப ரொம்ப நல்லவனாம். ராஜாவுக்கும் காட்டுக்குத் துரத்தின ராஜாவுக்கும் சண்டையாம். அப்போது அந்தப் பிள்ளை பெரிய வீரனாகச் சண்டைக்குக் கிளம்பினானும். வீரத்தோடு கிளம்பி ரொம்ப ஜோராகச் சண்டை போட்டானும்...... பாவம் அம்மா எதிரியைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து மேலே பாய்ந்து...."

"நிறுத்து. நிறுத்து" உத்தரை அலறினாள். 'மகனே! இவ்வளவு புகழ் வம்சத்தில் பிறந்தும் தந்தையைக் காண வில்லையே என் உள்ளம் துடிக்கிறது. நீ பாக்கியமற்றவனாகி நிற்கிறாயே!" என்று கதறினாள்.

"குழந்தாய் பரீட்சித்து!" வாசுதேவனின் குரல் கேட்டது. பரீட்சித்து ஓடிச் சென்று கண்ணனை அணைத்துக் கொண்டான்.

"உத்தரை, உன் மகன் சுபத்திரையின் வீட்டிலல்லவோ இருப்பான் என்று நினைத்தேன்?" என்றார் கண்ணன்.

"ஆமாம், மாமா! அங்குதான் இருந்தேன். அம்மா தனியாக இருக்கிறாளே என்று ஓடி வந்து விட்டேன்" என்றான் குழந்தை.

"உத்தரை! திரௌபதியும் சுபத்திரையும் அடிக்கடி உன் மகனை அழைத்துச் சென்று விடுவதன் காரணம் தெரிந்திருக்குமே....."

உத்தரை பதில் பேசாது கண்ணனை நோக்கினாள்.

"இருவரும் புத்திர சோகத்தில் துடிக்கும் மனத்தை உடையவர்கள். ஆயினும் ஓர் ஆறுதல். தங்கள் மைந்தர்களின் குணத்தையும் ரூபத்தையும் பேரனிடம் காண்கிறார்கள். மூத்தோர்களுக்கு ஆறுதல் அளிக்கவே பிறந்துவிட்ட உன் மகன் பாக்கியசாலி!"

கண்ணன் கூறிவிட்டு நிறுத்தினான்.

"ஒப்புக் கொள்கிறேன், மாமா! ஆனால் அவன் தந்தை இந்தப் பிஞ்சு முகத்தையும் காணாமல் சென்று விட்டாரே! தந்தை முகமும் காணாத பாலகனுகப் பாக்கியமற்று நிற்கிறானே! யுத்தத்துக்கு முன்பே அவன் பிறந்திருக்கக் கூடாதா?" என்று உத்தரை புலம்பினாள்.

"உத்தரை, உன் மகன் யுத்தத்துக்கு முன் பிறந்திருந்தால் நீ புத்திர சோகத்துக்கும் ஆளாகி இருப்பாய்......"

"ஐயோ, இதென்ன வார்த்தை?"

"யுத்தத்தின் முடிவுக் காலத்தை நீ மறந்து விட்டாயோ! அசுவத்தாமனின் கெட்ட எண்ணம் காரணமாகத் தூக்கத்திலிருந்த திரௌபதியின் புதல்வர்கள் ஒவ்வொருவரும் கோரமாகக் கொல்லப்பட்டனர். அத்துடன் நில்லாமல் மறுநாள் பாண்டவ வம்சமே முற்றிலும் நாசமாக ஒரு துரும்பைக் கிள்ளி மந்திரம் ஜபித்து விட்டான் அசுவத்தாமன். உத்தரை, நினைத்துப் பார், அச்சமயம் உன் மகன் கர்ப்பப் பிண்டமாக இருந்ததால் மந்திரம் தாக்கியும் என்னால் காப்பாற்றப்பட்டான். இப்புவியில் ஜனித்திருந்தவனாக இருந்தால் நான் அவனைக் காப்பாற்றுவது கஷ்டம். பஞ்சபாண்டவர்கள் தருமத்தைக் காக்கப் போர் புரிந்தார்கள். அத்தருமம் நீடித்து அரசாள உன் மகன் ஒருவனே மணியாக நிற்கிறான். போரின் சுப முடிவு உன் மைந்தன் ஒருவனே. உன் மைந்தன் பாக்கியமற்றவன் என யார்தான் சொல்ல முடியும்?..." வாசுதேவன் மெள்ள நிறுத்தினார்.

உத்தரையின் மனம் சமாதானக் கரையை அடைந்தது. புயல் ஓய்ந்த அநுபவம். மைந்தனை இறுக அணைத்துக் கொண்டாள்.

# நெருஞ்சி முள்



ஆலங்கரை வாய்க்கால் மதகுக்கு இருந்த பழைய களையே போய், பழக்கமில்லாத வேற்று முகத்தைப் பார்ப்பது போல் இருந்தது. கல்லும் காரையுமாக இருந்தாலும் அந்தப் பழைய வசதி வருமா? இதற்குப் போய் எந்த முட்டாள் புதுச் சிமின்டு போடச் சொன்னான்? வண்டியும் சைக்கிளும் போகிற சாலையைக் கவனிப்பாரைக் காணுமாம்; மதகுக்குத்தான் வந்த தாம் திருப்பணி! வழக்கம்போல் ஒய்யாரமாய்ப் போய் உட்கார முடிகிறதா? அப்படியே போய் உட்கார்ந்தாலும் காலை பத்துப் பதினொரு மணிக்குள் அதுவும் இந்த மார்கழி மாதத்தில் இப்படியா சில்லென்று கட்டுக் கொளுத்தும்?

பசப்பு ரமணிக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. சின்னக் கடப் பாரையாகக் கொண்டு வந்து உட்காருகிற இடத்தைத் தட்டி அகலமாக இடித்துவிடலாமா என்றுகூட நினைத்தான். ஆனால் எதையும் அவன் தானே செய்வது வழக்கமில்லை. அதற்குத் தகுந்த ஆளைத்தான் பிடிக்க வேண்டும். இதென்ன பெரிய காரியம்? நினைத்தால் நடக்காமலா இருந்துவிடும்?

''பீ...பீ....பீப்பீ....பீ...ஈ....ஈ...''

பூவரச மரத்தடியில் மாட்டுக்கார மக்கான் இலையைச் சுருட்டி நாதஸ்வரம் பண்ணி ஊதிக் கொண்டிருந்தான். ''பீபீ...பீப்-பீப்'' ஊதல் இடக்குப் பண்ணி அடைத்துக் கொண்டது. இலையெல்லாம் வாய் எச்சிலாக வழிய ஊதுவதை விடவில்லை. அந்த இலைக்கு ஆச்சு; அவனுக்கு ஆச்சு.

ரமணியின் முகத்தில் புன்னகை அரும்பியது. சரியான ஆளைதான்.

''எலே மக்கான்! என்னடா இது? நாயனமா?''

''ஆமாங்க. பீப்பீ...பீப்...பீப்...''

''எலே அப்படி இல்லேடா, இப்படிக் கொண்டா, சொல்றேன். வேணும்! வேணும். இரு சொல்றேன். உன் எச்சில் இலை வேணும். புது இலையா பறிச்சு, நாயனம் பண்ணி ஊதிக் காட்டறேன், பாரு...''

ரமணிக்கு இந்த 'நந்துருணி' வேலை யெல்லாம் கொஞ்சம் நன்றாகவே





# ஆர்வி

செய்வாரும். "பீப்பீ...ச...ச... பிப்பிப்பீய்" மக்கான் ஊதியதைவிட இது சிறிது அதிகமாகவே போயிற்று. திக்கலையும் அடைப்பையும் காணோம்.

"சின்ன ஐயா, சின்ன ஐயா, அது எப்படின்னு கொஞ்சம் சொல்லித்தாங்க ஐயா!" என்று மக்கான் பல்லைக் காட்டிக் கெஞ்சினான்.

"இது கிடக்கட்டும்; தபால்காரச் சாயபு இன்னும் வரலியே—?"

"அதுக்குள்ளாற எப்படி வருவாரு? இனிமேல் தான் வருவாரு... வந்தா உங்களெப் பாக்காமெ யாப் போவாரு ஊருக்குள்ளாற? இன்னும் நானு எலே பறிச்சிக்கிட்டு வரவா? ஊதலு செஞ்சு தரீங்களா?"

"ஒன் எச்சிக் கையாலேயா? ஊதலாம்; அதெல்லாம் வாணாம். வேணும்னு ஒண்ணு செய்யிறியா?"

"சொல்லுங்க; என்னது?"

"ஓரணுத் தர்றேன். ஓடிப் போய் மங்கலத்துலே ஒரு ஊதலு வாங்கிக்கிறியா?"

"மங்கலத்துக்குப் போயியா? கடையிலேயா?"

"ஆமாடா!"

மக்கான் ஒரு கணம் மலைத்தான். ஓரணு அவன் சபலத்தைக் கிளறியது. மறுகணம் படுக்கையை அடுத்த இடலில் நின்ற மாடுகள் அந்தச் சபலத்தை மாற்றியது.

"ஊரும்; அது எப்படி முடியும்? பொளுது சாயவேணாப் போகலாம். இப்ப முடியாதே!"

"அப்ப ஓரணு கெடையாது."

மக்கான் ஓரணுவைப் பற்றிய பேச்சே ருசிப்பது போல் வெறுமனே நின்றான்.

"என்னடா நிக்கறே? இல்லாட்டி இன்னொண்ணு செய்யிறியா?"

"சொல்லுங்க ஐயா, சொல்லுங்க, சொல்லுங்க!"

"சொன்னுக்க அந்தமாதிரியே நிச்சயமாச் செய்திடணும். முடியாது கிடியாதுன்னு சொல்லப்படாது. சரிதானு?"

"சரிதான்."

"சின்னக் கடப்பாரை கெடைக்குமா உனக்கு? கெடைக்காட்டி தோசைக்காரப் பொன்னம்மா கிட்டே சொல்லிச் சித்தே எரவல் வாங்கிக்கவேண்டா... இதா பாத்தியா ஓரணு... எடுத்துக்கறியே. மங்கலத்துக்கும் போவாணும். ஊதலும் வாங்க வேணும். அது என்னாத்துக்கு? கொஞ்ச நேரத்திலே ஒடிஞ்சு போவும். அதனாலே ஓரணுவுக்குப் பொரிகடலே வாங்கிக்க. அந்தக் கடப்பாரையைக் கொண்டாந்து இதோ பாத்தியா, இந்த எடத்துலே இடிச்சுத் தட்டிவிட்டுடு. என்ன, முழிக்கிறே? இதாப் பாருடா, இங்க கொஞ்சம் வெடிச்சாப்பலேகூட இருக்கு. கொஞ்சமா பேத்துவிட்டுட்டாப் போதும். உடக்கார வாட்டமா இருக்கும். இங்கே உக்காந்து வாட்டமா, ஜம்முனு நாயனம் ஊதலாம். புரியுதா?"

மக்கான் முகம் பயத்தினால் கறுத்துப் போயிற்று.

"ஏலே, என்னடா பயம்? ஒருத்தருக்கும் தெரியாமே ராத்திரியிலே வந்து இடிக்கிறது. இது ஒரு கஷ்டமா?"

"ஐயையோ—ராத்திரியிலேயா?"

"ஆமாடா. ராவுலே இடிச்சாத் தான்டா ஒருத்தரும் பாக்கமாட்டாங்க. கப்பிப்புனு ராவுலே இடிக்கப்பிட்டுப் பேசாமே போயிடணும். ஆரு கண்டாங்க, நீதான் இடிச்சேன்னு...."

மக்கான் மருள மருள விழித்தான். அவனை அறியாமல் அவன் தலையசைந்தது.

"அப்பப்போ — ஓரணு வேணும்னு கூசாமப் போ. காத்தமுத்துப் பய வருவான். மம்புட்டியாலேயே இதை ஒரு நொடியிலே பேத்துப்புட்டுப் போயிடுவான். காம்பைத் தட்டறாப்பலே நானு தட்டுத் தட்டினுன்னு வெடிப்பு பேத்துக்குமே.... போற போக்கிலே ஓரணுவை வாங்கிட்டுப் போறான்" என்றான் ரமணி.

காத்தமுத்துப் பயல் இந்த ஓரணுவை வாங்கிக் கொண்டு போவதாவது? ஊரிலே அவன் ஒருவன்தான் துணிச்சல்காரனா? அவன் ஒருவன்தான் சாமர்த்தியக்காரனா? எல்லாரும் அவனையே



திருவாளர் C. D. விஜயரத்ன முதலியார் ''மாடர்ன் டெய்லரிங் ஹவுஸ்'' ப்ரொப்ரைட்டர், 144, ராஸ்தாபேட், பூனா-2. 22-5-'63 அன்று தனது 61-வது வயதில், இருதய நோயால் காலமானார்.

வருத்தமுள்ளோர் — மனைவி, மகன் இருவர், சுற்றத்தவர் மற்றும் நண்பர்கள். ●

கொண்டாடுவதாவது? மற்றவர்கள் அதைப் பொறுத்துக் கொண்டு இருப்பதாவது?

"'சரி; நான் பாத்துக்கறேன்'' என்று கையை நீட்டி அந்தக் காசை வாங்கிக் கொண்டு விட்டான் மக்கான்.

"டேய், டேய்! என்னடா நயிஸ் காட்டி, காசு வாங்கறே?'' என்று பின்னாலிருந்து குரல் கொடுத்தபடி வந்து விட்டான் காதர் கல்தான். சைக்கிள் வண்டிச் சக்கரமெல்லாம் மண் சேறு. 'கொர்ர்ர்...ர்' என்று மண் உராயும் சத்தத்துடன் அவன் சைக்கிளை உருட்டிக் கொண்டு வந்தான்.

"ஏலே, மாடு நாத்தங்கால்லே எறங்குதுடா!'' என்று மக்கானை எச்சரித்து விரட்டினான் ரமணி.

காதர் பாய், மக்கான் ஓடிப் போய் ஏமாந்ததைக் கண்டு சிரித்தான். ரமணியும் அலட்சியமாய்ச் சிரித்தான். "இன்னிக்கு ஒன்னுமில்லியா?'' என்றான்.

"வா அல்வாஹ்......இன்டைக்கு ஒன்னையும் காணமே'' என்று காதர் கல்தான் தபால் கட்டைப் பிரித்துப் புரட்டினான். ரமணி எட்டிப் பார்த்துக் கொண்டே வந்தான்.

"அதோ இருக்கே பாய்! இல்லேங்கறியே! குப்புசாமி பெயர் குண்டு குண்டா....அதான்!''

"அதான் சார்...அந்தப் புது ஹெல்த் அஸிஸ்டென்டு...''

"அவருக்குத்தான் ...... நம்ப கிட்டே சொன்னாரே அவருதான். இதைத்தானே அவரு எதிர்பார்த்துகிட்டிருக்காரு. முத்திரையைக் கொண்டா பார்ப்போம்.''

காதர் கல்தான் தயக்கமெல்லாம் ரமணியின் கையிலிருந்த கால் ரூபாயைப் பார்த்ததும் நீங்கிவிட்டது. அவனிடமே அந்த ஊர் விஜயத்தை முடித்துக் கொண்டதற்கு அத்தாட்சியாகக் கையெழுத்து வாங்கிக் கொண்டு ஆங்கூருக்குப் போகும் வயல் கரை வழியாகச் சைக்கிளைத் திருப்பி மிதித்தான்.



ரமணி கையிலிருந்த உறையையும் மனித நடமாட்டமே இல்லாத சாலையையும் மாறி மாறிப் பார்த்தான். இப்படி அவன் மற்றவர்களுக்கு வந்த தபாலை வாங்கிக் கொண்டது முதல் தடவையல்ல. இதே குப்புசாமிக்கு, இதே கையெழுத்தோடு வந்த இரண்டாவது கடுதாசி இது......

ரமணி மதகு ஓரமாக இறங்கிய ஒற்றையடித் துறை வழியே தெளிந்து ஓடிய வாய்க்காலில் இறங்கினான்.

தண்ணீரில் ஒற்றை விரலை நனைத்து, அந்த ஈரத்தை உறையின் வாய்ப்புறமாகத் தடவினான். ஒரே தொடியில் ஒட்டுப் பாகத்தைத் துளிக்கூட பிசிறு இல்லாமல் பிரித்தான்; படித்தான்.

"........ பாத கமலங்களில் வணங்கி, பங்காரு (அடியாள்) எழுதிக் கொண்டது. ராப்பத்து உற்சவத்தில் பெருமாள் தெற்குப் பிராகாரம் தாண்டி மேற்குப் பக்கம் திரும்பியதும், பன்னீர் மரத்தடியண்டை வருகிறேன். அடியாள்.... ஆகாரம் பிடிக்காமல், தூக்கம் பிடிக்காமல் தவிக்கிற தவிப்பு! மறக்காமல் வந்து, ஆசை முகத்தைக் காட்டி, அடியாளை அமுத மழை பொழிந்து அருள வேணும்.

உங்களையே நினைந்து வாடும் அடியாள்
பங்காரு நாச்சியார்.''

ரமணி அந்தக் கடிதத்தைத் திருப்பித் திருப்பிப் படித்தான். அந்தத் தபால் மேலத் தெருவிலிருந்த பங்காரு நாச்சியாரால் தெற்குத் தெருவில் இருந்த குப்புசாமிக்குத்தான் எழுதப்பட்டிருக்கிறது. தபால் பெட்டியில் போட்டு விட்டால், அது கட்டோடு மங்கலம் தபாலாபீசுக்குப் போய், முத்திரை பெற்றுக் கொண்டு மறுபடியும் அந்த ஊருக்கே வந்து, போக வேண்டியவரிடம் போய்ச் சேர்ந்து விடுகிறது. நடுவில் இப்படி ஒரு தணிக்கை நடக்கும் என்று யாருக்குத் தெரியும்?

வாய்க்கால் ஓரமாகக் கூனிக் குறுத்து நின்ற கருக மரத்தடிக்குச் சென்றான் ரமணி. அதன் பாலும் பதமான பிசினைத் தொட்டு உறை வாயில் தடவி, பழையபடி ஒட்டினான். பிறகு ஒட்டின உறையை, சூடேறிய மதகில் ஒற்றி உலர வைத்தான். சற்று நேரத்தில் ஈரம் காய்ந்து மொடமொடப்பு உண்டாகி விட்டது. பிரித்துப் பார்த்த அடையாளமே தெரிய வில்லை.

## 2

"பீபி பீப்பீ பிப்பீபி......''

நாதஸ்வரத்திலே நாட்டை தத்தளித்துக் கொண்டிருந்தது. பெருமாள் பன்னீர்ப் பூமாலையையும் பிச்சிப்பூ, அரளிப்பூமாலையையும் நெருக்கமாய் அணிந்து கொண்டு படிச் சட்டத்தில் ஏறியமர்ந்து எழுந்தருளி விட்டார். புளிக்காப்புச் சாத்திய உற்சவ மூர்த்தியின் முகம் பளிச்சென்று இருந்தது. தலையிலே ராஜக் கிரீடம்; தோளிலே இருத்துழாய் ஆரம்; மார்பிலே பாசி ஏறிய கெம்புப் பதக்கம். பெருமாள் பனிக்கு அடக்கமாகவே பவனி புறப்பட்டிருந்தார். இராப் பத்து உற்சவத்தில் நாலாவது நாள். கைதீவட்டிகளின் செங்கொழுந்துகள் காந்த விளக்குகளின் வெளிச்சத்தைப் பார்த்துக் காந்திக் கொண்டிருந்தன. படிச்சட்டாவாரையை, பக்கத்துக்கு இரண்டு பேர்களாகச் சுமக்க, அர்ச்சகர் நடுவில் அசைந்தாடி வர, பட்டுக் குடைக் குஞ்சம் ஊசலாட, பெருமாள் தெற்குப் பிராகாரம் திரும்பி விட்டார். அவரைச் சுற்றி வந்து கொண்டிருந்த பத்துப் பதினைந்து பக்தகோடிகளும் திரும்பி விட்டார்கள்.

பெருமானுக்குப் பின்னால் வரும் போதே சின்ன மணியக்காரர் மகள் பங்காரு தன் தோழி சம்பாவோடு கை கோட்டி வெளிச்சத்தில் நிற்பதைப் பார்த்துவிட்டான் பசப்பு ரமணி. அவன் கவனிக்கிறது தெரியக் கூடாது என்றுள் அத்தியயன பட்டருக்குத்

துணையாக நிற்க வேண்டியதுதான். அங்கிருந்துதான் அவளைக் கவனிக்கலாம். அவள் நடமாட்டத்தைக் கவனிக்கலாம்.

பார்வைக்குப் பரம சாது போல் இந்த உலகத்தைப் பற்றி ஒன்றும் தெரியாதவள் போலத்தான் இருந்தாள் பங்காரு. அவளுக்கு இந்த அடக்கமெல்லாம் கொஞ்ச நாட்களாகத்தான் வந்திருந்தது. அவளைத் தெரியாதவர்கள் ஊரில் இல்லை. சின்னக் குழந்தையாக இருந்த போது துறு துறு வென்று பெரிய விழிகளும் பட்டுக் கன்னங்களுமாகப் பார்க்கிறவர்கள் கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டே இருப்பார்கள். கொழு கொழுவென்று இருக்கும் கைகளும் கால்களும். ஏழெட்டு வயதான பின்னர் உடம்பு இளைத்து மெலிந்துஉயர்ந்து காணப்பட்டாள். ஆனால் முகமும் நிறமும் மட்டும் அப்படியே இருந்தன. பத்துப் பதினொரு வயதில் சிற்றெறும்பைப் போல் நடையில் ஒரே பரபரப்பு. ஒரு நிமிஷம் இருந்த இடத்தில் மறு நிமிஷம் கால் நிற்காது. எதிலும் ஒரு அவசரம்; வேகம். பேச்சுக்கூட அப்படித்தான். பாவாடையும் தாவணியும் அணியத் தொடங்கியபோது கண்கள் பம்பரமாய்ச் சுழலத் தொடங்கின. கைகளும் கால்களும் குறும்புத்தனமாக இயங்கின. பேச்சும் பார்வையும் ஆளையே வெட்டும். கையைக் கொட்டிக் கலகலவென்று சிரிப்பாள். வாசற்படி தாண்டும்போதே துள்ளல்தான். நொடிக்கு நொடி மாறும் உணர்ச்சிகளை அப்படியே காட்டுகின்ற முக பாவம். தெளியும் மெல்லிய கனி இதழ்கள். கோபம், ஆனந்தம், துக்கம், வெட்கம் எல்லாம் வைரக் கல் ஜொலிப்புத்தான். துளி அசைந்தால் ஒளி மாறும் மாயத்தை அவள் யாரிடம்தான் கற்றாளோ? பெரியவன், சின்னவன் என்று யாரையாவது லட்சியம் செய்ய வேண்டுமே. ஊஹூம். யாரைக் கண்டாலும் பரிகாசம்தான். யாரைச் சந்தித்தாலும் ஒரு நொடிப்புத்தான்.

பயந்தவள் போல் என்ன பாசாங்கு செய்வாள் தெரியுமா? சிரிக்காமல் பேசுவதும் பேசாமல் சிரிப்பதும் முன்னால் போகவிட்டுப் பின்னால் விகண்டையாக நடப்பதும் அவளுக்கு என்று அமைந்த தனிப் பாணி.

யாராகத்தான் இருக்கட்டுமே. 'அது—இது'தான்! அக்கினிக் குறிப்புத்தான்!

அப்படிப்பட்ட பங்காரு சிற்றாடை கட்டிக் கொண்ட பிறகு எங்கே வெளியே தலை காட்டினாள்? அபூர்வமாய் அதற்கு இதற்கு என்று வந்து தலையைக் காட்டினாலும் எவ்வளவு அடக்கமாக மாறிவிட்டாள்! தலையைக் குனிந்துகொள்வதும், சன்னமாய்ப் பேசுவதும், சாடையாகப் பாராமல் பார்ப்பதும், நாணச் சிரிப்பாக முறுவலிப்பதும் இதெல்லாம் என்ன மாறுதல்? எங்கே அந்தத் துள்ளலும் மிண்டலும்! எங்கே அந்த நொடிப்பும் நடிப்பும்?

பசப்பு ரமணி நடப்பது போல் அவள் நாலைந்து பெண்களிடம் நடந்து காட்டியதை அவனே ஒரு தடவை பார்த்திருக்கிறான். அத்தனை பெண்களும் கெக்கலி கொட்டிச் சிரிப்பதைக் கேட்டு ஒக்கச் சிரித்துவிட்டு அவன் போயிருக்கிறான். பசப்பு ரமணி இப்போது தெரியாமல் பல்லை வைத்து உதட்டைக் கடித்துக் கொண்டாள். 'கடைசி வரையில் பார்க்காமலா போய் விடுவது?'

## 3

பெருமாள் தெற்குப் பிராகாரத்தின் கோடிக்குப் போய்விட்டார். பங்காருவும் சம்பாவும் பவழ மல்லிச் செடி ஓரமாக நின்று கொண்டிருந்தார்கள். பால் விழிகள் வெளிச்சத்தில் பளபளத்தன. சாட்டைப் பின்னலைக் கை சுழற்றியது. முகத்திலே அடக்க முடியாத பூரிப்பு; ஆவல். கை தீவட்டிகளின் வெளிச்சத்தில் சம்பாவின் தோளைப் பிடித்துக் கொண்டு, செம்பரத்தைப் பூ அரைப் பூத்திருப்பது போல் அவள் நின்று கொண்டிருந்தாள். மற்றவர்கள் கண்ணில்படவே அவளுக்குக் கூச்சமாக இருந்தது. கண்கள் இரண்டும் ஆலவட்டம் போட்டன. குதிப்பில்லாத நினைப்பு; அதைப் போலவே துடிப்பு.

புறாக் குஞ்சு நெஞ்சு போல அவள் இளமார்பு படபடத்தது. விவரமில்லாத கலவரம்.

கிட்டத் தட்ட எட்டு நாட்களாக இதே சங்கடம்தான். இதே வருஷத்துப் பகல் பத்து — இராப் பத்து உற்சவத்துக்கு அவன் எந்த வேளையில் புறப்பட்டானோ தெரியவில்லை. காலை, மாலை இரண்டு வேளையும் அவன் பெருமாள் சேவைக்குப் போய்க் கொண்டிருந்தான். சம்பா மிகவும் கெட்டிக்காரிதான். இருந்தாலும் முதலில் எல்லாம் அவளுக்குப் பங்காருவின் போக்குப் புரியவில்லை. எப்பொழுதும் கலகலவென்றிருப்பவள் பேச்சை மறந்து லயித்துப் போய் நிற்கிறாளே என்று போகப் போகத்தான் அவளுக்குச் சங்கை உண்டாயிற்று. லயிப்பு பெருமாளிடத்திலே நின்றதா அதையும் தாண்

டிப் போயிற்று என்று பங்காருவின் பார்வையோடு தன் பார்வையையும் ஓட்டினாள். முதல் தடவை அது கொஞ்சம் அதிசயமாகத்தான் பட்டது. பங்காருவின் கடைக்கண் விழி பெருமாளின் எழிற்கோலத்தை எட்டவில்லை. பாதியிலேயே தயங்கித் தயங்கித் தடைப்பட்டு நின்றுவிட்டது.

பளிச்சென்று களையான முகம்; நெளி நெளியாக வாரியிருந்த கருண்ட தலை. நெற்றியிலே தெரிந்தும் தெரியாமலும் இருந்த சிவப்புக் கோடு. படிப்பும் பண்பும் கலந்த ஒளி விழிகள்; அரும்பு மீசை. சட்டை போட்டுப் போட்டுச் சிவந்த குருத்து மேனி. அதில் வெயில் பட்ட இடமெல்லாம் வெந்நீர் சூடு பட்டது போல் கன்னல் சிவப்பு. மெல்லிய தங்கச் செயின்; இடுப்பிலே சுற்றிய பட்டு அங்க வஸ்திரம். கழுத்திலே மாலைதான் இல்லை. இல்லாவிட்டால் கல்யாண மாப்பிள்ளையேதான்.

"தெற்கு வீதியில் இருக்காரே, குப்புசாமி, அவருக்குக் கண்ணிலே என்னடி பங்காரு?" என்று ஒரு நாள் சாயங்காலம் கோவிலிலிருந்து திரும்பி வரும்போது குறும்புத்தனமாகக் கேட்டாள் சம்பா.

"குப்புசாமியா — அது யார் அது, குப்புசாமி...?"

"ஊஹும்; தெரியாதுல்லே உனக்கு? சின்ன ஹெல்த் ஆபீசரை உனக்குத் தெரியவே தெரியாது; இல்லே? உங்க வீட்டுக்குக்கூட ஒரு தரமோ ரெண்டு தரமோ வந்து உங்க நாயினு கூடப் பேசிக்கிட்டிருந்ததை நான் பார்த்திருக்கேன். உனக்கு மட்டும் தெரியாதாக்கும்?"

பங்காரு அவளுடைய கையைப் பிடித்து அந்தரங்க செல்லமாகக் கிள்ளினாள். "அவர் பேரு கூட உனக்குத் தெரியுமா?"

"இந்த ஊருக்கு வந்து ஒரு வருஷம் ஆகப் போறதே! இதுகூடத் தெரியாமலா போகும்?"

"அப்புறம் அவரைப் பத்தி இன்னும் என்ன என்ன தெரியும்?"

"இன்னும் என்ன என்ன தெரியும்னு? முக்கியமா என்ன தெரியணுமோ அதெல்லாம். இன்னும் கல்யாணம் ஆகல்லே—அது தெரியும். அது முக்கியமில்லையா உனக்கு?"

"எனக்கா?"

"உனக்கு இல்லே. கேக்கறவங்களுக்குப் பொதுவாச் சொல்றேன். அது ஒண்ணு போதாதா?"

"சம்பா!"

"உம்..."

"அவர் ஒரு நாளு நம்ம வீட்டுக்கு வந்திருந்தாரு."

"ஏதோ ஒரு நாளு நாங்கூடப் பார்த்திருக்கேன்.."

"அவரைப் பத்தி என்ன நினைக்கிறே நீ?"

"ஐயையோ — நான் ஒண்ணுமே நினைக்கல்லியே! ஆளு என்னமோ பாக்கறதுக்கு நல்லா இருக்கார். சின்ன வயசு; பெரிய வேலை. கல்யாணம் பண்ணிக்கிறவ பாக்கியசாலிதான்!"

"உம்?"

"உங்கிட்டே பேசினாரா?"

"உம்... 'நயினு இல்லையா?'ன்னு விசாரிச்சார். "சாப்பிடுறீங்க; உட்காருங்க'ன்னேன். சரின்னு திண்ணையிலே உட்கார்ந்தார். நானும் போயி, பசு மோரைக் கரைச்சு ஒரு போணியிலே கொண்டு போய் வச்சேன். 'தாங்க்ஸ்'ன்னார். நான் உள்ளே வந்திட்டேன். அவர் கண்ணு மட்டும் உள்ளேயேதான்... தனியே உக்காந்திருக்காரேன்னு பாவமா இருந்தது..."

"சரி; அவர் கண்ணு உள்ளேயே பார்த்தது உனக்கு எப்படித் தெரியும்?"

"நான்தான் முற்றத்துக் கதவோரமாய் மறைஞ்சிருந்து...சீசீ!... நீ பெரிய வம்புக்காரி. நான் ஒண்ணும் யாரையும் பாக்கலே. அவர் பார்த்திருந்தாலும் தெரியாது..."

"நீ செய்ததுதான் தப்பு!"

"என்ன? என்ன தப்பு?"

"வெட்கமாகத்தான் இருந்திருக்கும். இருந்தாலும் இன்னும் ரெண்டு வார்த்தை நீ பேசியிருக்கணும். படிச்சவராச்சே! பட்டிக்காட்டுப் பெண் மாதிரி கதவு மூலையிலா போய் மறைஞ்சிருக்கிறது?"

பங்காருவுக்கு உடனே பெரிய கவலையாகிவிட்டது. 'ஒரு சமயம் சம்பா சொல்றமாதிரி நினைத்து விடுவாரோ? நான் என்ன அவ்வளவு பட்டிக்காடு மாதிரியாகவா இருக்கிறேன்? இருக்காது. சம்பா தெரியாமல் சொல்கிறாள். அப்படி இருந்தால் கதவு மூலையைப் பார்க்க அவர் கண் ஓடோடி வந்திருக்குமா? மோர்ப் போணியை எடுக்கிற சாக்கில் வந்தபோது, நெருங்கவே என்ன படபடப்பாக இருந்தது? ஆனால் நாயினுவுக்குத் தெரியாமல் அவர் பார்த்த பார்வை! பெரிய ஆள்தான் அவர்! கண்ணிரண்டும் இப்படியா சுருக்குப் போட்டுச் சுண்டி இழுக்கும்?' பங்காரு நம்பிக்கையைத் தளர விடவில்லை.

*ஆடிப் பெருக்கில் ஆற்றுக்குப் போய்க் குளித்துவிட்டு வரும்போது அவன் மொட்டுப்போல் பின்னாலேயே வருவதை அவள் கண்டாளா? உச்சிப் பொழுது நேரத்தில் கால் சூடு பொறுக்காமல் அவள் புல்வாரிசை மிதித்துக் கொண்டே நடந்து வந்தாள். தோளிலே பிழிந்து போட்டிருந்த துணிகள். கையிலே மஞ்சள் சோப்புப் பெட்டி. போகும்போது மூன்று பெண்களாகத்தான் ஆற்றிலே குளிக்கப் போனார்கள். ஒருத்தி முன்னாலேயே திரும்பிப் போய்விட்டாள். மற்றொருத்தி புறப்பட நேரமாகும். அதனால் பங்காரு மட்டும் தனியாக வீட்டுக்குத் திரும்பினாள். பக்கத்தில் வரும்வரையில் குப்புசாமி பின்னால் வருவதை அவள் கவனிக்கவில்லை. அவனைக் கண்ணால் பார்த்ததும் அவளுக்குக் குப்பென்று வேர்த்துக் கொட்டியது. அவன் முன்னால் போய்விட்டும் என்று கால்கள் பின்ன, இன்னும் கொஞ்சம் ஓரமாக ஒதுங்கி அடியெடுத்து வைத்தாள். அவ்வளவுதான்; வைத்த [illegible] கொத்து நெருஞ்சி முள்!

"சச்ச. ச்சு பொடி மணல்! போதாதற்குப் பாதையில் நெருஞ்சி முள். காலில் செருப்புப் போட்டுக்கப்படாதா?" என்று சொல்லிக்கொண்டே போனான் குப்புசாமி. அவள் குனிந்து முள்ளை எடுத்துவிட்டுத் தலையைத் தூக்கிப் பார்ப்பதற்குள் குப்புசாமி வெகுதூரம் போய்விட்டான். அவளுக்கு என்ன காரணமோ கோபம், கோப

* இந்தக் காட்சியைத்தான் இவ்விதழ் அட்டைப் படத்தில் வண்ண ஓவியமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் கல்பனா.

> **கவலை வேண்டாம்!**
>
> ஹோட்டலுக்கு வந்தவர் (சர்வரைப் பார்த்து): என்னப்பா! எவ்வளவு லேட்டு! நான் முழுதும் இங்கேயே தான் பட்டினி கிடக்கணுமா?
>
> சர்வர்: வேண்டியதில்லை! நாங்கள் ஏழு மணிக்கு ஹோட்டலை மூடி விடுவோம்!

மாய் வந்தது. ஆனால் யாரிடம் கோபம் என்று மட்டும்தான் புரியவில்லை!

அவள் நினைத்தது நூற்றுக்கு நூறு பலித்து விட்டதே! பகற்பத்து உற்சவத்துக்கு ஒரு சமயம் அவன் வந்தாலும் வருவான் என்று அவள் ஒரு புள்ளி போட்டாள். அதே போல் அவன் வந்திருந்தான். சும்மா பொழுது போக்க வரவில்லை மைனர் மாதிரி. மேல் அங்கவஸ்திரத்தை இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொண்டு நெற்றியிலே ஒற்றை நாமத்தோடு ஆசார சிரத்தையோடு வந்திருந்தான். பொன்னை உருக்கி வார்த்தது போல் இருந்தது அவன் உடல். பார்த்த கண்கள் மறுமுறை பார்க்க ஓடின. அதோ, அவனும் அவளை எடுத்த எடுப்பிலேயே கவனித்து விட்டான். கண்களிலே ஒரு பிரகாசம். முறுவல் செய்யும் முகம்.

அவன் அவளைக் கடந்து சென்றபோது அவள் தனியாகவே நின்று கொண்டிருந்தாள்.

"கூட யாரும் வரல்லியா துணைக்கு? நாயினா இருக்காரா வீட்டிலே?" என்று கேட்டான் அவன். ஒரு நொடிதான் அவள் கண்கள் அவனுடைய முகத்தைப் பூர்ணமாகப் பார்த்தன. ஆனால் அந்த நொடிகூட அவளால் தாக்குப் பிடிக்க முடியவில்லை; அத்தனை கூச்சமாக இருந்தது. தலையை ஓர் அசைப்பு அசைத்துக்கூட அவளால் பதில் அளிக்க முடியவில்லை.

திருத்துழாய் வாங்கிவரப் போன சம்பா வருவதற்குள் ஒரு புதிய உலகுக்கே தான் போய் வந்துவிட்டதாகத் தோன்றியது. முகமெல்லாம் செந்தாமரைப் புஷ்பம் போலப் போக்கென்று சிவந்துவிட்டது. சம்பா என்னென்னவோ கேட்கிறாள். ஒன்றுமே பங்காருவின் காதில் விழவேயில்லை.

"என்ன பங்காரு, என்ன ஆச்சு?"

"ஒண்ணும்; ஒண்ணும். நாம் போகலாம் வா!"

குப்புசாமி முன்னால் போய்க்கொண்டிருந்தான். அவளுக்குத் தன் உலகத்து இன்பமெல்லாம் ஒன்றாக வடிவெடுத்து நடந்து போவது போல அத்தனை பரவசமாக இருந்தது.

"இப்பத்தான் தோணித்தாக்கும். திரும்பிப் பார்க்க!" என்று வாய் விட்டே தன்னை மறந்து சொல்லிவிட்டாள். சம்பாவுக்கு இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது.

"என்னடி பங்காரு இது!"

"பின்னே கொஞ்சம் மெதுவாகத்தான் போனால் என்னவாம்?"

"நான் மெதுவாகத்தானே நடக்கிறேன்."

"அதைத்தான் சொல்றேன். கொஞ்சம் நடையை வேகமாகப் போட்டால் என்ன?"

"பிடிக்க முடியாதுடீ—"

"ஏன் முடியாது? எல்லாம் முடியும்! என்னது, என்ன சொல்றே? நான் எதுக்காக ஒருத்தரைப் போய்ப் பிடிக்கணுமாம்! அக்கறை இருந்தால் நிற்கட்டுமே!"

குப்புசாமி நின்றான்; கொஞ்சம் சிரித்தான்.

"அக்கறை இருக்குமடீ பங்காரு!" என்றாள் சம்பா.

"இருக்கும், இருக்கும்" என்று பழிப்புக் காட்டினாள் பங்காரு.

அவனைத் தாண்டிப் போவதற்குள் அவளுடைய நெஞ்சே விம்மி வெடித்துவிடும் போலிருந்தது. அப்புறம் அவளுக்கு வீட்டுக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தோம் என்பதே தெரியவில்லை. காமிரா அறைக்குள் போய்ப் படுத்து ஊமைக் கனவுகள் கண்டபோது—

மேஜைப் பெட்டியிலே தனியே வாங்கி வைத்திருந்த தபால் உறைகளும் காகிதமும் கண்ணிலே பட்டன. ஊருக்குள்ளே இருப்பவர்களுக்குக்கூடத் தபால் எழுதலாம் என்று நினைப்பு அவளுக்கு உதவியாகக் கைகொடுத்தது. சிறிதும் யோசிக்கவில்லை; தயங்கவில்லை. பேனாவை எடுத்து எழுதுவதற்கு உட்கார்ந்தாள்.

என்ன எழுதுவது? இரண்டு மணி நேரம் ஒரே போராட்டம்—

"......பெருமாள் சந்நிதியில் என்னவோ கேட்டீர்கள். நான் பதிலே சொல்லாமல் வெட்கப்பட்டுக் கொண்டு இருந்துவிட்டேன். முன்புகூட காலில் நெருஞ்சி முள் குத்தின போது பேசினீர்கள். அப்பொழுதும் பேச முடியவில்லை. இதற்காக என் பேரில் கோபம் வைக்கவேண்டாம். ஏதாவது தப்பு இருந்தால் மன்னிக்கவும். அடுத்த தடவை பேசுகிறேன். ஆனால் பேசத்தான் வெட்கமாக, இல்லை, பயமாக இருக்கிறது. திரும்பி வருகிறபோது என்னைப் பார்த்தீர்களே, கொஞ்சம் சிரித்தீர்களே ஏன்?

அடியாள் நமஸ்காரம்
பங்காரு நாச்சியார்"

ஆவது ஆகட்டும் என்று சிவப்புப் பெட்டியினுள் அப்படியும் இப்படியும் ஆயிரம் தடவை பார்த்துக் கொண்டு கடிதத்தைப் போட்டு விட்டாள்.

அன்றைக்கு அவள் கோயிலுக்குப் போகத் துணியவில்லை. அதற்குப் பிறகும் மூன்று நாள் போல அவளால் போக முடியவில்லை. அப்புறம் அவள் துணைக்குச் சம்பாவை அழைத்துக் கொண்டு மல்லத் தெரு வீதி வழியாகப் போனாள். அவன் கண்களில் எப்படி விழிப்பது என்று நெஞ்சில் பெரிய உதைப்பு. கீழத் தெருவிலிருந்து நேரே போவதற்குச் சுருக்கு வழி இருந்தும், நெஞ்சிலே அச்சம் இருந்தும், அவள் தெற்கு வழியாகவே போகச் சம்மதித்தாள்.

"அவர் வாசலில் இருக்கப் போகிறாரடி. ஏன் இப்படி அழைத்துக் கொண்டு வந்தே?"

"எல்லாம் தெரியும். பேசாமலிரு. நான் எல்லாம் விசாரித்துவிட்டேன். நல்ல ஜாதி, நல்ல குடும்பந்தானும்! அதனாலே ஆசை தீர உன்னை, சாயங்கால வெய்யில் முகத்தில் படற போது பார்த்துக்கட்டுமே. நீ மட்டும் என்ன? உன் ஆசையும்தான் பூர்த்தியாகட்டுமே!"

# சிறந்த தரத்துடன் சிக்கனமும்
## குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது



எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டால்க்கில் உங்களுக்கு பெயர் பெற்ற கால்கேட்டின் சீரிய தரம் கிட்டுகிறது.



எத்தனை நறுமண முடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்- வெளியே செல்லுமுன்- தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.



எத்தனை நேர்த்தியானது! எத்தனை மிருதுவானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது.




# கால்கேட்
## ஆல்-பர்ப்பஸ் டால்க்

அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது!

CAPT. G.2. 1M.

---

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

13 & 15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

ARUNA

ஜம்மியின்

# லிவர்க்யூர்

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி கோளாறுகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும் சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர்கள் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார்கள். அப்பொழுது அவர்களைக் கலந்து ஆலோசிக்கலாம்,

| | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| திருவனந்தபுரம் | 13 | 9 to 12 பகல் | எம். வி. கணபதி அய்யர் & சன்ஸ்<br>ஆட்டுகுளங்கரை |
| அய்யம்பேட்டை | 16 | 3 to 5 மாலை | டாக்டர் என்.கே. அப்துல் முத்தாலிப்<br>(என்.கே.ஏ. ஹாஸ்பிடல் |
| தஞ்சாவூர் | 17 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ராஜா சத்திரம் |
| பட்டுக்கோட்டை | 18 | 9 to 11 காலை | சத்திரம் ஆபீஸ் |
| திருத்துறைப்பூண்டி | 18 | 3 to 5 மாலை | டி.வி. சந்திரசேகரம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| மன்னார்குடி | 19 | 9 to 11 காலை | மீரா கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 19 | 3 to 5 மாலை | அபுபக்கர் பில்டிங்ஸ் |
| நாகப்பட்டினம் | 20 | 9 to 11 காலை | எஸ். டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்<br>கெமிஸ்ட்ஸ் |
| நன்னிலம் | 20 | 3 to 5 மாலை | ஜி. எஸ். ராஜன் & ஆர். ஆர். சுவாமி<br>ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மாயூரம் டவுன் | 21 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ராமகிருஷ்ண வைத்திய சாலை<br>1, கிருஷ்ணராயர் சந்து |
| சீர்காழி | 22 | 9 to 11 காலை | எஸ். நடராஜன், வாய்க்கால்கரைத் தெரு |
| விருத்தாசலம் | 22 | 3 to 5 மாலை | ஸ்ரீ நடராஜா மெடிகல் ஹால் |
| சிதம்பரம் | 23 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ஸ்ரீ நடராஜா டிஸ்பென்சரி, கெமிஸ்ட்ஸ் |
| கடலூர் என். டி. | 24 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | கமலா & கம்பெனி, கெமிஸ்ட்ஸ்<br>புதுப்பாளையம் |
| பாண்டிச்சேரி | 25 | 9 to 11 காலை | ஆனந்தா எம்போரியம், டுப்ளே தெரு |
| திண்டிவனம் | 25 | 3 to 5 மாலை | விஜயா மெடிகல் ஸ்டோர்ஸ் |
| விழுப்புரம் | 26 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | திரு [illegible]வாசனி விஹார் ஹோட்டல்<br>பாண்டி ரோடு |
| காஞ்சிபுரம் | 28 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | 89, சாலைத் தெரு, பெரிய காஞ்சிபுரம் |
| வேலூர் | 29 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | வி. பி. சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ்<br>லாங் பஜார் |
| சித்தூர் | 30 | 9 to 11 காலை | ஓரியண்டல் லாட்ஜ், ஹைரோடு |
| திருப்பதி | 30 | 3 to 5 மாலை | டாக்டர் ஆர்: கோபிநாத்,, 28 கபீந்த்ர<br>மண்டபம் தெரு |
| கரக்பூர் | 4 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், என்.டி.இ.<br>155, ரயில்வே மார்க்கெட் |
| ஜம்ஷெட்பூர் | 15 | 9 to 11 மாலை<br>3 to 5 மாலை | செட்டி கெமிஸ்ட்ஸ், சாக்சி |

## ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

சென்னை — கும்பகோணம் - திருச்சிராப்பள்ளி

குறிப்பு: எல்லா நாட்களிலும் வழக்கம்போல் எமது கிளினிக்கில் ஆலோசனைகள் கூறப்படும்

''சீச்சீ! நீ ரொம்ப மோசம்பா!'' என்று அவன் வெட்கச் சிரிப்புச் சிரித்தான்.

சம்பா அவனுடைய சங்கடத்தைக் கண்டு நையாண்டியாகச் சிரித்தாள். ''சீச்சீ! நீ போ, நான் உன்னோடு வரவே மாட்டேன்!'' என்று பெருமாள் கோவில் படியிலேயே உட்கார்ந்துவிட்டாள் பங்காரு.

''வராவிட்டால் போயேன்!'' சம்பா கோவிலுக்குள் போய்விட்டாள்.

குப்புசாமி வந்தான். பங்காரு தன்னை அறியாமல் எழுந்து நின்றான்.

''நாயினு இருக்காங்களா?''

''உம்...''

''கூட வந்த பெண் எங்கே? போகச் சொல்லிட்டியா?''

''ம் ம் ம்...''

''பேச மாட்டியா?''

''அச்சோ — சம்பா வந்து விடுவாள். நான் போறேன்.''

''உன் அடிதாசியை நான் பத்திரமாக வைச்சிருக்கேன். தினம் அஞ்சாறு தடவை படிக்கிறேன். படிச்சின்டே இருப்பேன்.''

''உம்.. ஆசையைப் பாரேன்!''

''அடி பங்காரு! ஏ—பங்காரு!''

''அப்புறம் பாக்கறேன். நான் போகட்டுமா?'' சம்பாவின் குரலைக் கேட்டதும் அவன் குப்புசாமியை அங்கேயே விட்டுவிட்டு ஓட்டமாகத் துள்ளி ஓடி மறைந்தான்.

''இருக்காரா, போயிட்டாரா?'' என்றாள் சம்பா.

''யாரைக் கேட்கிறே?''

''எல்லாம் தெரியும். எலுமிச்சை மரத் தடியிலே நின்னு நடந்ததை யெல்லாம் பார்த்துண்டுதான் இருந்தேன்.''

''சீச்சீ! நீ ரொம்பப் பொல்லாதவள்!''

''நடுவிலே நான் ஏன் கூப்பிட்டேன் தெரியுமா? அதோ பார், பட்டாமணியகாரர் வீட்டு ரமணியை!''

''நல்ல வேளை; பொழைச்சேன்!''

பங்காரு பெருமூச்சு விட்டாள். மேலெல்லாம் முத்து முத்தாக வேர்வை அரும்பு கட்டி விட்டது. பகல்கொழுந்தில் பனி தங்கியிருப்பது போல்.

## 4

பெருமாள் பல்லக்கு மேற்குப் பிராகாரம் திரும்பிவிட்டது. சின்னமுத்துவின் சீவாளி எச்சில் பதப்பட்டு இறுக்க இறுப்புக் கெல்லாம் இதமாகப் போய்க் கொண்டிருந்தது. பசுபு ரமணி இருட்டிலே நின்று குருட்டு யோசனை செய்து கொண்டிருந்தான். பெருமாள் எந்தப் பிராகாரம் போனாலென்ன? சின்ன முத்து என்ன கீர்த்தனம் வாசித்தாலென்ன? அவனுடைய குறியெல்லாம் கோபுர வாசலில்தான். அதோ,— குப்புசாமிதான்!

''ஆரு, ஹெல்த் அஸிஸ்டெண்ட் சாரா?''

''அ...அ...ஆமாம்... ஓ — நீங்களா?''

''பெருமாளைச் சேவிக்கவா? ஏன் இத்தனை லேட்டாக...?''

''ஆமாம். கொஞ்சம் வேலையிருந்தது.''

''அதானே பார்த்தேன்... ஹி ஹி ஹி... பஞ்சாயத்து போர்டு பிரஸிடெண்டைப் பார்க்கப் போயிருந்தீங்களோ?''

''இல்லியே...ஏன், அவர் பார்க்கணும் னாரா என்னே?''

''ஊஹூம்; வந்து, உங்களைப் பார்க்கணு மின்னு, பேசணுமின்னு யார்கிட்டேயோ பேசிண்டிருந்தார். அதுதான் கேட்டேன். அது சரி, உங்க வீட்டிலே — உங்க அம்மா கிட்டே ஒரு தபால் கொடுத்துப்பிட்டு வந்தேனே. வாங்கிக்கிட்டீங்களா?''

''ஓ—நீங்கதான் கொடுத்திட்டுப் போனதா? நீங்க....''

''ஹிஹி...போஸ்ட்மென் காதரை வழி யிலே பார்த்தேன். உங்களுக்கு மட்டும் ஒரே தபால்தான் இருந்தது. 'கொடுத்திட றீங்களா?' இன்னு கேட்டான். சரின்னு வாங் கிட்டு வந்து கொடுத்தேன்...''

''ரொம்ப தாங்ஸ்....அவ்வளவுதானே?''

---

## லடாக்கில்



## நம் வீரர்கள்

எல்லைப்புறப் பிரதேசமாகிய லடாக்கைப் பற்றிய விசேஷக் கட்டுரை இவ்விதழின் வேறு ஒரு பக்கத்தில் வெளியாகி இருக்கிறது. தங்களுக்குப் பழக்கமில்லாத மலைப்பாங்கான வறண்ட இடத்தில் நம் ஜவான்கள் அனுபவிக்கவேண்டியிருக்கும் சிரமங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. அங்கே சாலைகள் ஏதும் சரியானபடி கிடையாது. ஆனபடியால் உணவு போன்ற அவசியத் தேவைகளைக் கூட விமானத்தில் ஏற்றிப் போய்த்தான் போடவேண்டும். வானிலிருந்து விழும் உணவை நம்பித்தான் அவர்களும் வாழ்கிறார்கள். காற்றின் அடர்த்திக் குறைவான சூழ்வில் சாதாரணமாகவே மூச்சு வாங்கும் என்னும் பிரங்கி போன்ற கனமான பொருள்களை மலைச் சரிவுகளில் இழுத்துக் கொண்டு ஏறுவது எவ்வளவு கடினம்! காற்றின் அடர்த்தி குறைவான காரணத்தால் துப்பாக்கிகளை ரொம்பவும் சாமர்த்திய மாக இயக்காது போனால் நிச்சயம் குறி தப்பிவிடும்! பனி உறையும் நிலைக்கும் தாழ்வான குளிர் மிக்க பகுதிகளில் உறை யணியாத கரத்தால் துப்பாக்கி யின் எஃகுப் பகுதியைத் தொட்டால் விரல் எஃகுடன் ஒட்டிக் கொள்ளும். பின்னர் தோலைப் பிய்த்துக் கொண்டு தான் விரலை விடுவிக்க வேண்டி யிருக்கும்! இதுபோன்ற எத்தனை எத்தனையோ துன்பங் களைப் பொறுமையுடன் சகித்துக்கொண்டு விழிப்புடன் இருக் கும் வீரர்களுக்கு நம் நன்றியை யும் வாழ்த்துக்களையும் தெரி விப்போம்.

"ஏன், நீங்க என்னமோ பயந்திட்டீங்களா? அதான் நினைச்சேன். எழுத்தைப் பார்த்தா அவர் மகள் பங்காரு நாச்சியார் எழுத்தைப் போலிருக்குது. அதனாலே பிரஸிடெண்ட் அப்பாவ் பேரைச் சொன்னதும் உங்களுக்கு ஒரு மாதிரியாப் போயிட்டுதோன்னு....."

"சே, சே! அதெல்லாம் இல்லே. எனக்கு என்ன பயம்? நான் யார் எழுத்தையும் பார்த்ததில்லே. நான் வரட்டுமா?"

"அதுக்கில்லே; நீங்க என்னைத் தப்பா நினைக்கக்கப்படாது. இந்த ஊரிலே இருக்கிற வங்களே இதே ஊரிலே இருக்கிறவங்களுக்குக் கடுதாசி எழுதித் தபாலில் போடறதா, ஊரிலே கொஞ்சம் கரைசலா பேச்சு அடி படறது."

"அப்படியா? அது எப்படி... எப்படி?"

"பயப்படாதீங்க, சார். நான் இருக்கேன். உங்களுக்கு ஏன் கவலே?" என்று பசப்புச் சிரிப்புச் சிரித்தான் ரமணி.

அவ்வளவு தூரம் பேசிய பிறகு, குப்புசாமிக்குப் பிராகாரத்தினுள் போவதும், பங்காருவைச் சந்திப்பதும் உசிதமாகப் படவில்லை. இப்போது போய் விட்டுத் தனியாக வந்தாலும் வரலாம் என்ற எண்ணம் வரவே, ரமணியோடு பேசிக் கொண்டே வெளியில் வந்தான்.



"இதென்ன, சார். பேசிக் கொண்டே வந்திட்டீங்களே. பெருமாளைப் பார்க்காமல்!" என்றான் ரமணி.

"என்னமோ போகட்டும். நாழியாகி விட்டது. பெருமாளை நாளைக்குப் பார்த்துக் கொண்டால் போச்சு!" என்று சொல்லிக் கொண்டே அவனிடம் சொல்லிக் கொண்டு சந்து வழியாகத் திரும்பினான் குப்புசாமி.

ஆனால் பாப்பு ரமணி வந்த காரியம் முடிந்ததென்று தன் வீட்டுக்குப் போகவில்லை. தெருக் கோடியில் தேரடிக்கு அருகில் கிடந்த பெரிய பாறாங்கல்லில் போய் உட்கார்ந்து கொண்டான். அந்த இடம் இரண்டு பக்கமும் கவனிப்பதற்கு வசதியான முச்சந்தி. மாட்டுக்கார மக்கான் வந்தாலும் பார்க்கலாம்; பன்னீர் மரத்தடிக்குப் போய் ஏமாந்து விட்டுத் திரும்பப் போகிற பங்காரு வந்தாலும் பார்க்கலாம். இருவரையும் எதிர்பார்த்து அவன் வெகு நேரம் காத்திருந்தான். நேரம் ஆக ஆக, அவனுக்கு ஆனந்தம் பொறுக்கவில்லை. அடியாள் பங்காரு நாச்சியார் அங்கே கால் கடுக்கக் காத்திருக்கிறாள் என்ற நினைப்பில் சிரிப்புத்தான் அவனுக்குப் பொத்துக் கொண்டு வந்தது. குஷி தாங்கவில்லை.

பின்புறத்திலிருந்து குப்பென்று பிச்சிப்பூ மணத்தது. அவன் திரும்பிப் பார்த்தான். பனிக் குளிருக்கு அடக்கமாகப் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு இருளிலே பனிச்சென்று தனியாக வந்தாள் ஞானலி. உள்ளூர் கர்ணத்தின் மனைவி அவள். உள்ளூர் வாத்தியாருடைய பெண். அவள் சரியான வாயாடி.

"என்ன ஞானு, கணக்கப் பிள்ளையை விட்டு விட்டுத் தனியாப் புறப்பட்டுட்டே? ஏகாந்த சேவையா?"

"ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொண்ணு. அவர் அடங்கலே எடுத்து வைச்சுண்டு உட்கார்ந்திட்டார். பனி பாழாயிடப்படாதேன்னு நீ பாறாங்கல்லைப் பிடிச்சிண்டிருக்கே பார். அதைப் போல. நான் பெருமாளைப் பார்த்துட்டு வரப் புறப்பட்டுட்டேன். உனக்கு அது பொறுக்கலியா?"

"அதுக்கில்லே, வந்து...உனக்கு, நீ இந்த ஊரிலேயே இருந்திண்டு, இந்த ஊரிலேயே இருக்கிற ஒருத்தனுக்குக் கடுதாசி எழுதித் தபால்லே போட்டிருக்கியா?"

"ஏண்டா, தடித் தாண்டவராயா? என்னமா இருக்கு உம் மூளை? என்ன கேள்விடா கேக்கிறே நீ?"

"ஸ்...ஸ்...ஸ்... சொல்றதை முழுக்கவும் கேட்டுட்டுப் பேசேன். அந்த மாதிரி ஒரு காரியம் இந்த ஊரிலே இன்னிக்கு நடந்திருக்கு. அதைத்தான் சொல்றேன்."

"இதென்ன அதிசயம்!"

"பிரஸிடெண்ட் அப்பாவ் இல்லே, அவர் மகள் பங்காரு எழுதியிருக்கா! இதோ, பாரு, ஞானு! அந்தப் பங்காருவைப் பார்த்தா சொல்லு. பன்னீர் மரத்தடியிலே காத்திருந்து ஏமாந்து போகப் போறா. அவன் அப்பவே திரும்பி வீட்டுக்குப் போயிட்டானும்னு சொல்லு."

"அவன்னு எவன்?"

"எவனோ ஒருத்தன். அதை ஏன் கேக்கறே நீ? முடிஞ்சாச் சொல்லு. இல்லேன்னா தன்னாலே ஏமாந்து போகட்டும்."

ஞானலி 'ஏதோ தனக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டு போய் விட்டாள். ஆனால் ரமணி தனக்குத்தானே சிரித்துக் கொண்டான். அன்றைக்கு அவனுக்குச் செலவு ஐந்தணாத்தான். இதற்கு எத்தனை விஷயங்கள் நடந்திருக்கின்றன?

## 5

ஞானு தெற்குப் பிராகாரத்துச் சந்துக்கு வந்ததும் சிறிது தயங்கி நின்றாள். இருட்டை மறைப்பது போலப் பன்னீர்ப் பூவும் பவழ மல்லிப் பூவும் கலந்து கதம்பமாக வாசனை வீசின. இருந்தாலும் பாதையை விட்டுத் துளி விலகினாலும் போதும். நறுக்கு என்று நெருஞ்சி முட்கள் காலைக் குத்தும். அதற்குப் பயந்து அவள் கொஞ்சம் நின்றாள்.

தென்புறத்து மதிலிலே ஒரு சின்னக் கதவு. மடித்து, மக்கி, ஜீரணமாகி விட்ட கதவு. அதைத் தாண்டினால் நந்தவனம்தான். ஞானலி அந்தச் சின்னக் கதவு வரையில் வந்து இருட்டிலே தலையை நீட்டிப் பார்த்தாள். நெஞ்சிலே நெருஞ்சி தைப்பது போல் சுருக்கென்றது. வெள்ளைத் துணி தெரிந்தது; பேச்சுக் குரலும் கேட்டது. இருட்டில் பழகிய கண்கள் வெள்ளைத் துணிக்குப் பக்கத்திலே பெண்ணொருத்தி நிற்பதையும்

# ஜலதோஷம், ஜுரம் போன்ற உணர்ச்சி இவைகளிலிருந்து

ஜலதோஷம் ஜுரம் ஆகியவைகளின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே 'ஆஸ்ப்ரோ'வை உட்கொள்ளுங்கள். தலைவலி, பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட ஆஸ்ப்ரோவின் அபாயமற்ற செயல்திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'விலுள்ள தீவிர சக்திப்பொருள் மற்றெதையும்விட அபாய மில்லாமல் வலியைப் போக்கக்கூடியது என மருத்துவக்கலை நிரூபித்துள்ளது.

ஒரு தூய மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்கு அதை நிவாரணமளிக்க வைத்தியர்களால் தினந்தோறும் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது. 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலிநிவாரணி. வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## துரிதமாகவும் பூர்ணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ'




'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்கள்



## 'ஆஸ்ப்ரோ'

## ஏவ்வகையிலும்

## அபாயமற்றது — சிறந்தது

'ஒரு நிக்கோலஸ் தயாரிப்பு

A.D. 152. TAM

# Shakti Silks சக்தி ஸில்க்குகள் - மற்றும் ஸூட்டிங்குகள்




போதார் தயாரிப்பு

எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை! நீங்கள் எங்கு சென்றாலும் தன்னம்பிக்கையுடனும், தோற்றப் பொலிவுடனும் விளங்க உங்களுக்கு சக்தி ஸூட்டுகள் இன்றியமையாதவை. இவை நாள்பட உழைப்பவை மற்றும் மடிப்பு கலையாமல் நிற்பவை. சக்தி ஸூட்டுகள். உருக்குலையாமல் காலையில் அணியும்போதிருந்த வனப்புடன், நாள் முழுவதும் விளங்குபவை.

கசங்காமல், சுருக்கம் விழாமல் எப்பொழுதும் புதுமை பளபளப்புடன் விளங்கும் சக்தி ஸில்க்குகளை அணிந்து நாள் முழுவதும் மகிழ்ச்சியுடன் திகழுங்கள்.

SHILPI - SM 292A TAM

கண்டனை. 'சரிதான்; அப்பாம் மகன் பங்காருதான் அவன். அவன் யாரு? எங்கோ கேட்ட குரலாக இருக்கிறதே!' என்று உற்றுக் கேட்டாள். குரல் நிதானம் பிடிபடக் கொஞ்ச நேரம் பிடித்தது. சின்னக் குரலில் பேசினால் என்ன செய்ய முடியும்? மடித்துப் போன கதவு அசைப்பில் கைபட்டு, 'டொர்' என்று சமயம் தெரியாத கைக் குழந்தை போல் அழுதது. அவ்வளவுதான்.

எதிரே குத்துச் செடி போல நின்ற உருவம் ஒன்று மெதுவாக அசைவது போல் ஞானவிக்குப் பட்டது. அவள் திடுக்கிட்டுப் போய்ப் பார்த்துக் கொண்டே நின்றாள். அசைந்த உருவம் மெல்ல அவளை நோக்கி வந்தது. கிட்டே அது நெருங்க நெருங்க, ஞானவி வெலவெலத்துப் போனாள். நாக்கு உலர்ந்து மேலண்ணத்துடன் ஒட்டிக் கொண்டது.

''அ....அ....அ....''

அவ்வளவுதான்; மறுகணம் ஒரு கை அவள் வாயை அடைத்தது. இன்னொரு கை அவள் கண்ணைப் பொத்தியது. மூச்சை முட்டுகிற பயத்தில் ஒரு சின்னக் குழப்பம். ஞானவி திரும்பிப் பார்க்காமல் இரண்டே பாய்ச்சலாக வந்த வழியே பாய்ந்து ஓடினாள். சந்நிதி விட்டுப் பிராகாரம் வந்ததும் அவளால் அடியெடுத்து வைக்க முடியவில்லை. பாதங்களில் குத்துக் குத்தாகப் பாய்ந்து உறவாடின நெருஞ்சி முட்கள். ஞானவி உட்கார்ந்து விட்டாள். பயம் நெஞ்சையடைக்க, மூச்சு இரைத்தது. தலை ஒரே சுற்றலாகச் சுற்றி, கண்ணை இருட்டியது. தன் வாயையும் கண்ணையும் பொத்திய கைகள் ஒரு பெண்ணின் கைகள்தான் என்று நிதானப்பட அவளுக்கு அரை நாழிகைக்கு மேல் பிடித்தது.



அவள் கண்ணுக்கு எதிரிலேயே ஒருத்தி பின் ஒருத்தியாக இரண்டு பெண்கள் ஓட்டமும் நடையுமாகச் சந்நிதியிருந்து வெளிப்பட்டு, பிராகாரத்தின் வழியே சென்று மறைந்து விட்டார்கள். ஒருத்தியின் முகமாவது ஞானவிக்குத் தெரியவில்லை. மிகவும் கஷ்டப்பட்டு அவள் அவர்களை அடையாளம் கண்டு கொள்ளப் பார்த்தாள். ஆனால் அதற்குள் மற்றோர் ஆண் உருவம் வேகமாக வெளியில் வந்தது. முகத்தைச் சிறிதும் காட்டாமல் இருட்டிலே மறைந்து விடப் பார்த்தது. ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! அந்தச்சமயம் பார்த்துத்தானா அவன் காலிலும் அடையாக முட்கள் தைக்க வேண்டும்? அத்தனையும் நெருஞ்சி முள்!

ஞானவி எழுந்திருந்து விட்டாள். ஆவலை அடக்க மாட்டாமல் அருகிலும் வந்து விட்டாள்!

''பாழும் நெருஞ்சி முள்! இப்பத்தான் என் கால் முழுக்கக் குத்தி எடுத்துப் போட்டேன். உழவாரம் போட்டுச் செதுக்கி எறிய மாட்டான், இந்தச் சனியன் பிடித்த ஆம்வான்? முழு நீளத்துக்குத் தாடியும் நெத்தி முழுக்க நாமமும் எதுக்காக இந்த உருப்படாதவனுக்கு?'' என்று அருகில் நின்றவனுக்காகப் பரிந்து கொண்டு பொரிந்தாள்.

குப்புசாமியினால் தப்பித்துக் கொண்டு போக முடியவில்லை. ஆம்பளை நோவதா, அவளை நோவதா? நேரம் தெரியாமல் காலிலே பாய்ந்த நெருஞ்சி முள்ளைத்தான் நொந்து கொண்டான். முள்ளை எடுப்பதில் அவன் முனைந்திருந்தபோது காலடியில் கிடந்த கடுதாசை மெல்லக் குனிந்து எடுத்துக் கொண்டு வேகமாகப் போனாள் ஞானவி.

## 6

பிரஸிடெண்ட் அப்பாய் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த ஐந்தாறு பேர்களும் அப்படியே திகைத்துப் போய் விட்டார்கள். ஒருவரை யொருவர் அதே திகைப்போடு ஒரு முறை பார்த்துக் கொண்டார்கள். எதிரே ஆளோடியில் கட்டைச் சிங்காரம் முண்டா புரள மேல் துண்டிலும் அந்த மாட்டுக்கார மக்கான் பயல் கைகளைப் பிணைந்து முறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தான். ஐந்தாறு பேர்களுக்கு நடுவிலே உட்கார்ந்திருந்த பட்டாமணியத்தின் முகத்தில் ஈயாடவில்லை. அவமானத்தினாலும் கோபத்தினாலும் அவர் முகமே கறுத்துப் போய் விட்டது. கணக்குப் பிள்ளைக்கு உள்ளூற ஒரே கொண்டாட்டம். அவர்தான் புலன் விசாரணை நடத்திக் கொண்டிருந்தார்.

''எலே, இப்பவாளும் மரியாதையா உள்ளதைச் சொல்லிப்புடு. உன்னை விட்டுடச் சொல்றேன். பழியை இன்னொருத்தர் மேலே வச்சுப்புட்டுத் தப்பிச்சுக்கிற சங்கதி இங்கே நடக்காது.''

மக்கான் கண்கள் ரத்தம் வடிவதுபோல் சிவந்திருந்தன. அவன் அழுது கொண்டே பயத்தோடு தலையை ஆட்டினான்.

''உன்னை இந்த வேலை செய்யச் சொன்னது ஆரு? அதைச் சொல்லு.''

''சத்தியமா அந்தச் சின்ன ஐயா தாங்க!''

''அவரு இடிக்கச் சொன்னா நீ இடிச்சிப்பிடறதா? உனக்கு எங்கேடா போச்சி புத்தி? இப்ப அவரைக் கூப்பிட்டுக் கேக்கணுமா? உள்ளதைச் சொல்லிப்புடு. அப்புறம் உன் வண்டவாளம் வெளிப்பட்டுடும்.''

மக்கான் விசித்து விசித்துத் தேம்பினான்.

''சொல்றாலே!'' என்று பெரிய அதட்டலாக வந்தது. நடுநடுங்கிப் போனான் மக்கான்.

''எலே, காத்தமுத்து! போய்க் கூட்டியாடா அந்தப் புள்ளையாண்டானை! அதையும் தான் கேட்டுப்புடுவோம்.''

மூன்று முறை ரமணியைத் தேடி ஆளுக்கு மேல் ஆளாகப் போய் விட்டு, அவனைக் காணோம் என்று திரும்பி வந்தார்கள்.

''என்னங்கடா, வெளையாடறீங்க! எங்கேடா, போயிட்டாரு, சீமைக்கி! போய் அந்த மதகாங்கரையிலே பாருங்கடா!'' என்றார் வைத்தித் தேவர்.

''பாத்துட்டோமுங்க! ஆளு இந்த நெட்டிலேயே இல்லீங்க!''

"நிசந்தானா? சேதி தெரிஞ்சப்புறம் ஆம்டுவாரா?" என்றார் வீரப்பக் கோனார்.

"உள்ளேயிருந்து இட்டே டிமிக்கிக் கொடுக்கிறாரோ? அப்ப மதவாங்களைக் கட்டையிலே இடிக்கச் சொன்னதும் நிசந்தான் போல!" என்றார் பக்கிரியா பிள்ளை.

"அபவாதத்தைச் சொல்லாதீங்க ஐயா—நீர விசாரிக்கப்பட்டுப் பேசுங்க ஐயா!" என்று கையை விரித்துப் பிரலாபித்தார் பசப்பு ரமணியின் தந்தை பட்டாமணியம்.

"பின்னெ, விசாரிக்காமெயா? அதுக்குத் தானே நாம இந்தாலெ கூடியிருக்கோம்!" என்றார் தேவர்.

எல்லாவற்றையும் கதவு மறைவில் நின்று கொண்டு பார்த்துக்கொண்டுதான் இருந்தாள் பங்காரு. நேரம் அவள் நரம்புகளை இழுத்துக் கொண்டிருந்தது. அவளுக்குத் தெரியும் அந்த ரமணி இருந்த இடம். ஆனால் அதைத் துணிந்து எப்படிக் கூறுவது? சொன்னது தெரிந்துவிட்டால் அப்புறம் அவள் கதி என்னவது? அவள் அதை மறைக்கப் பார்ப்பதிலே அவள் தோழி சம்பாவுக்கு அசாத்திய கோபம்.

"அடி, உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். நடக்கறது நடக்கட்டும். நீ போய்ச் சொல்லி வைச்சிடாதே!" என்று அவளைத் தடுத்து வைத்திருந்தாள் பங்காரு.

ரமணி, அவர்கள் வீட்டுத் தோட்டத்தில் தான் வைக்கோல் போர் மறைவில் இருந்த வண்டிக் கூண்டுக்குள் முழங்காலை மடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். கொல்லை வழியாகப் பங்காரு வீட்டிலிருந்து மோர் வாங்கிப் போக வந்த சம்பா அவனைப் பார்த்து விட்டாள். அவள் பார்த்ததை அவனும் பார்த்துவிட்டான்.

"இங்கே நான் இருக்கிற சேதி தெரிஞ்சுதோ, அப்புறம் எல்லாச் சேதியும் தெரிஞ்சிடும். ஜாக்கிரதை!" என்று பொத்தாம் பொதுவாக மிரட்டினான் ரமணி. அதை அப்படியே பங்காருவிடம் வந்து சொல்லி விட்டாள்; அந்தக் கணம் முதல் பங்காருவின் உயிர் கூட்டிலேயே தரிக்கவில்லை. எந்த நிமிஷத்தில் என்ன வருமோ என்று எண்ணுவதையெல்லாம் எண்ணிவிட்டாள். எண்ணியதில் பாதியைச் சம்பாவிடமும் சொல்லியும் விட்டாள். அதற்குப் பிறகும் சம்பா உள்ளதைப் போட்டு அவ்வளவு பேருக்கும் எதிரில் உடைக்கத் துடித்ததைக் கண்டு பங்காருவுக்கு என்ன செய்வது என்று புரியவேயில்லை.

"இதோ பாரு சம்பா, நாயினுவுக்கு எதுக்கப் போய் இதைச் சொல்லி வச்சியோ அப்புறம் உசிரோட என்னை நீ பாக்க மாட்டே!" என்றுகூடச் சொல்லிவிட்டாள்.

வெகு நேரம் வரையில் சம்பா பொறுத்துப் பார்த்தாள். ஏதேதோ குருட்டு யோசனைகள் செய்து பார்த்தாள். ஆற்றங் கரையில் குளிக்க வந்த அத்தனை பெண்களிடமும் ஜானகி ரகசியமாய் என்ன சொல்லிக் கொண்டிருந்தாள் என்பது அவளுக்குத்தான் தெரியும். அது பங்காருவுக்கு இன்னும் எட்டவே இல்லை. சம்பாவிடமே வந்து ஜானகி முதல் நாள் இரவு நடந்தது அத்தனையும் ஒன்று விடாமல் சொன்னதுதான் இதில் பெரிய அதிசயம்.

"அப்படியா? ஆனா நீ கண்ணுலெ பாத்தியா?" என்று கேட்டாள் சம்பா.

"காவலுக்கு நின்னவ என் கண்ணெ வந்து பொத்தினளடி. இருந்தாலும் பங்காருவும் குப்புசாமியும் பன்னீர் மரத்தடியில் நின்னு பேசினதை என் காதாலெ கேட்டேன்!" என்று ஆரம்பித்து நடந்ததை யெல்லாம் விவரித்தாள் ஜானு.

"ஏது, ஏது, காவலுக்கு நின்னு உன் கண்ணையும் பொத்தினது நான்தான்னு கூட சொல்லுவே போலிருக்கே!"

"என்ன கண்ணராவியோ? யாருடி கண்டது? இருந்தாலும் இருக்கும். உலகத்திலே யாரைத்தான் நம்ப முடியறது?"

சம்பாவுக்கு இந்தப் பேச்சைக் கேட்டது முதல் பெரிய வேதனையாகத்தான் இருந்தது. கலக்கத்தினால் வயிற்றைப் புரட்டியது. அதைப் பங்காருவிடம் உடனே சொல்லா விட்டால் மண்டை வெடித்து விடும் போல் இருந்தது. அதனால்தான் மோர் வாங்க வருபவளைப் போல் அவள் வந்தாள். இந்தச் செய்தி இன்று சாயங்காலத்துக்குள் ஊரெல்லாம் பரவி விடும். அப்புறம் அது அப்பாய் காதுக்கும் எட்டி விடும். அதற்குப் பிறகு என்ன ஆகும்? சம்பகத்தினால் அதற்கு மேல் யோசித்துப் பார்க்கவே முடிய வில்லை. எவ்வளவு கண்ணியமான குடும்பம்! எவ்வளவு அருமையான பெண் இந்தப் பங்காரு! அவள்தான் ஆகட்டும் எத்தனை பொருத்தமான ஜோடி. எல்லாம் பாழாகவா போவது?

பங்காரு விஷயம் புரியாமல் தன்னைத் தடுக்கிறாளே! கையெடுத்துக் கும்பிடுகிறாளே! காலில் விழுந்து கெஞ்சிக் கேட்பதாகச் சைகை காட்டுகிறாளே! 'அடி! அசட்டுப் பெண்ணே! உன் மானத்தையும் உன் குடும்ப கௌரவத்தையும் நாளைக்கு நீ எப்படிக் காப்பாற்றப் போகிறாய்?' என்று சம்பா பொருமிய வாறு கூடத்துப் படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். பிறகு விருட்டென்று எழுந்து வீட்டுக்குப் போகிறவள் போல அவள் பெரியவர்கள் உட்கார்ந்திருந்த திண்ணையை நோக்கி வந்தாள். எல்லோரையும் ஒரு சுற்றுப் பார்த்து விட்டு, பங்காருவின் நாயினாவைப் பார்த்து, "நாயினா, கொஞ்சம் உள்ளே வந்து விட்டுப் போங்களேன். அத்தை உங்களை ஒரு நிமிஷம் அவசரமாகக் கூப்பிடுறாங்க!" என்றாள்.

'அடிப் பாவி! உனக்குத்தான் என்ன துணிச்சல்! என் நாயினாவிடம் ரமணியைக் காட்டிக் கொடுக்கப் போகிறாயா? அப்படி யானால் அவன் என்னைக் காட்டிக் கொடுக்காமல் போய் விடுவானா?' என்று கதற முடியாமல், கதவுக்குப் பின்னால் மறைந்து நின்று கொண்டு உள்ளம் குமுறினாள் பங்காரு.

சம்பாவும் அவள் நாயினாவும் அத்தனை நேரம் என்ன பேசினார்களோ, அவளுக்குத் தெரியாது. அவள் இந்த உலகத்திலேயே இல்லை. ஆனால் அவள் நாயினாவின் மீசை துடி துடித்ததை மட்டும் அவள் கண்டாள். அதை இரண்டாம் முறை பார்க்கிற துணிவு அவளுக்கு இல்லை. கண்ணை இறுக மூடிக் கொண்டு, 'பெருமாளே! என்னை மீட்க வர மாட்டியா?' என்று பாகாய் உருகி இளகிப் போய் நின்றாள்.

# பெங்கால் கெமிகல்ஸின்

# காந்தாரிடின்

கூந்தல் தைலம்

பட்டுப்போன்ற மிருதுவான கூந்தல் வளமாக வளர்வதற்கு



## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெ அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணெ அடுப்பு

சுவையான சமையல் — சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள்:

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

77, பௌபஜார் தெரு, கல்கத்தா - 12

படத்திலுள்ள ரோகிணி என்னும் பெண் பம்பாயிலுள்ள V. D. கோரேடியா என்பவரின் குழந்தை. மேற்படி குழந்தை நன்றாக ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தது. திடீரென்று காய்ச்சல் வந்து இளம்பிள்ளை வாதத்தால் (Infantile Paralysis - Pollo - Mylitis) நிற்கவோ நடக்கவோ முடியாமல் கஷ்டப்பட்டு பல ஆங்கில, ஆயுர்வேத சிகிச்சைகள் செய்து குணமடையாமல் கடைசியாக பம்பாயிலுள்ள பிரபல Dr. S. M. மர்ச்சண்ட் என்பவரின் யோசனைப்படி கோயமுத்தூர் தெலுங்குபாளையம் ஆஸ்பத்திரியில் டாக்டர் அர்ஜுனன் அவர்களிடம் சிகிச்சைப் பெற்று பூரண குணம் அடைந்து நடக்கும் காட்சியைக் காண்கிறோம்.

பேபி ரோகிணி



வயது 3

அப்பாவ் பழைய இடத்துக்குப் போய் உட்கார்ந்து கொண்டார். "டேய், சிங்காரம்! கொல்லைத் தோட்டத்துக்குப் போய்க் கன்னுக்குட்டி நிக்குதாம். அதைப் புடிச்சுத் தோட்டத்திலே கட்டிப்புட்டு, ரெண்டு வக்கலைப் பிடுங்கிப் போட்டுப்பிட்டு வா. சொல்லிறேன்!" என்று உத்தரவு போட்டார்.

போனவன் சற்றைக்கெல்லாம் தலை தெறிக்க ஓடி வந்தான். "அவரு இங்கே யிருக்காரு. இங்கேயிருக்காரு....!" என்று கத்தினான்.

"ஏன்டா, கத்தறே? யாருடா, இருக்காரு?"— அதட்டல் போட்டார் அப்பாவ்.

"பட்டாமணியாரரு மகனைத்தான் சொல்றேன்!" என்றான் அவன்.

அவன் சொல்லி முடிப்பதற்குள் ரமணியே தனுக்கு நடை போட்டுக் கொண்டு எழுந்து வந்து விட்டான். அவனைக் கண்டதும் அத்தனை பேரும் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்கள்.

"என்னையா நீங்களாம் தேடினீங்க? நான் இங்கேதானே, தோட்டத்து வண்டியிலே உட்கார்ந்திருந்தேன். ராத்திரியெல்லாம் கண் முழிப்பு. வாட்டமா வண்டிக் கண்டு கிடைச்சதேன்னு படுத்தேனு? சரியான தூக்கம். என்ன இது, எல்லாரும் என்னையே இப்படிப் பார்க்கிறீங்க? அட, மக்கான் பயலா? ஏலே, ஏன்டா, அழுவுறே? ஏன், இவன் கையைப் பிடிச்சுக் கட்டியிருக்கு? ஏலே என்னடாலே செய்தே? மதகை இடிச்சுப் பிட்டியாடா சொன்னுப் பலே. அட, உன்னைத் சொல்லு கெடக்கு!" என்று சவடாலாக அடுக்கிக் கொண்டே திண்ணைக் குறட்டிலே வந்து நின்றான் ரமணி.



ஒருவராவது வாயைத் திறக்க வேண்டுமே. ஊஹூம், மூச்சுக் காட்டவில்லை. சற்று முன்பு அவனைப் பற்றி நினைத்தது வேறு; இப்பொழுது நினைப்பது வேறு என்று ஆகி விட்டது.

"மதகை இடின்னு சொன்னவன் நான்தான். அதுக்கு இப்ப என்ன தண்டனை கொடுக்கணுமோ, கொடுங்க. ஏத்துக்கறேன்" என்றான் ரமணி. கொஞ்சமும் அச்சமோ கூச்சமோ இல்லாமல்.

"அதுக்கு நாங்களாம் தண்டனை கொடுக்க முடியாது. கொடுக்க வேண்டியவங்க வேறே இருக்காங்க. செப்புத் தொப்பியும் காக்கி உடுப்புமா!" என்றார் கணக்குப்பிள்ளை.

"அப்ப அங்கே அனுப்புங்க!"

"பட்டாமணியக்காரரே! இனிமே நீங்களே போலீசுக்கு எழுதிப்புடலாமே!"

"சரி; எழுதுங்க! ஆனா அதுக்கு முன்னாலே உங்களுக்கெல்லாம் ஒண்ணு சொல்லிப்புட்டுப் போகணும்னு நினைக்கிறேன். கலியாணமாகாத பொண்ணு ஒண்ணு இருட்டுத்தனமா உள்ளூரிலே இருக்கிற ஆணுக்குக் காயிதம் எழுதறதும், இருட்டுத்தனமா கோயில்லே சந்திக்கிறதும் குத்தத்திலே சேர்த்ததா, குத்தத்திலே சேராததா?"

"என்னது, என்னது? சொல்றதை விளங்கும்படியா சொல்லு தம்பி! யாரு, யாருக்கு, என்ன எழுதினாங்க?"

"அதைச் சொல்லிக்கலாம் மெதுவா. முதல்லே அது குத்தமா, இல்லையான்னு கேட்போம்....!"

"குத்தந்தான்!"

"அப்ப இதுக்கு என்ன சொல்றீங்க? மொதல்லே பிரசிடெண்ட்வாள் பாக்கட்டும். இஷ்டமிருந்தா வாயை விட்டுப் படிக்கட்டும்; சொல்லட்டும்" என்று ரமணி, மடியில் கசங்கிப் போய் வைத்திருந்த கடிதத்தை அப்பாவிடம் நீட்டினான்.

அவர் அதை வாங்கிப் பார்த்த போது மற்றவர்கள் மௌனமாய், விஷயம் புரியாமல் உட்கார்ந்திருந்தார்கள். ஞாயிறு முதல் நாள் இரவு காலடியில் கண்டெடுத்த கடிதந்தான் அது. பங்காரு நாச்சியார், ஹெல்த் அஸிஸ்டெண்டு குப்புசாமிக்கு எழுதிப் போட்ட கடிதம்தான்.

'கப் சிப்'பென்று திண்ணையில் மௌனம் நிலவியது. அப்பாவ் அந்தக் கடிதத்தை ஒரு முறை படித்தார். கண்கள் மறைத்தன. மறு முறை படித்தார். எழுத்துக்கள் எழுந்து குதிப்பது போல் இருந்தன. மூன்றாம் முறை படித்த போது அவர் மீசை துடித்தது. புருவங்கள் நெறிந்தன.

"டேய்! கட்டைச் சிங்காரம்!" என்று கர்ஜனை புரிந்தார் அப்பாவ்.

"எசமான்!"

"போய்க் கூட்டியாடா அந்தக் குப்புசாமியை இங்கே!"

"சரிங்க!"

"ஆளு இல்லேன்னு வந்தியோ, உன் கால் முட்டியைப் பேத்துப்புடுவேன். எங்கேயிருந்தாலும் சரிதான். ஆளைக் கண்டு பிடிச்சுக் கொண்டாரணும்!" என்று கடுமையாக உத்தரவு போட்டார்.

கட்டைச் சிங்காரம் எசமான் குறிப்பறிந்து விரைவாக ஓடினான்.

பிறகு ரமணியைப் பார்த்து, "இதுக்கும் மதகை இடிக்கச் சொல்றதுக்கும் என்ன தம்பி சம்பந்தம்?" என்றார் அப்பாவ் சிம்மக்குரலில்.

"யாரு சொன்னது சம்பந்தம் இருக்குன்னு? நான் சொல்லல்லியே. ஊருக்குப் பொது மதகு. அதே போலக் கோயிலும் ஊருக்குப் பொது. கோயில்லே தகாதபடி நடந்துகறதும் தப்புத்தானே?"

"ஒருத்தனுக்கு வந்த தபாலை அவனுக்குத் தெரியாமெ உடைச்சுப் பார்க்கிறதும், ஒட்டிக் கொடுக்கிறதும் ஒனக்கு முறையான காரியமோ? ஹூம்?" என்று கர்ஜித்தார் அப்பாவ்.

ரமணி பேசாமல் இருந்தான். அங்கிருந்தவர்களுக்கு ஒன்றும் சரியாக விளங்கவில்லை.

கட்டைச் சிங்காரம் குப்புசாமியை அழைத்து வந்து விட்டான். கைகூப்பிக் கொண்டே படியேறிய அவனை, அப்பாவ் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். நல்ல களையான முகம். அரும்பு மீசை. அளவான உயரம். அப்பாவ் அவனைப் பார்த்து விட்டுப்

பிறகு தம் கையிலிருந்த கடிதத்தை ஒரு முறை பார்த்தார். உட்பக்கமும் எட்டிப் பார்த்தார். குப்புசாமி அவர் கையில் இருந்த கடிதத்தைக் கண்டதும் அப்படியே வெல வெலத்துப் போனான்.

"கூப்பிட்டீங்களாமே!"

"ஆமாம். மொதல்லே உட்காருங்க. வந்து... உங்க குடும்பம் உசந்த குடும்பமின்னு எல்லாருக்கும் தெரியும். எப்பவுமே எங்க தாய் வழியிலே எட்டின சொந்தம் கூட. அதனாலே தெரியும். ஆமா.... இப்ப ஒரு சந்தோஷமான நிலை வந்துட்டுது. அதுக்குத் தான் கூட்டியாறச் சொன்னேன். இதோ, இது உங்களுக்கு வந்ததுதானே?"

குப்புசாமி தயக்கத்துடன் தலையாட்டினான்.

"இதை எழுதினது சரிதான்னு நீங்க நினைக் கிறீங்களா?"

"ஏன்?"

"என்னைக் கேக்காதீங்க. நான் கேக்கறேன் உங்களே!"

"மத்தவங்க, நீங்க எல்லாம் என்ன நினைப் பீங்களோ, எனக்குத் தெரியாது. என் வரையிலே அதிலே தப்பில்லே. என் வாழ்க் கையிலே அது ஒரு திருப்பம். என் உயிர் இருக்கிற வரை இது எனக்குப் புனிதமா இருக் கும். பெருமாள் அறியச் சொல்றேன். இது என்னிக்கும் என் நெஞ்சிலே நிலைச்சிருக்கும்."

"அப்படியானாலும் உங்க தைரியத்தை நான் மெச்சிக்கிறேன். உங்க துணிவையும் நேர்மை யையும் கொண்டாடறேன். உங்ககிட்டே நான் எதிர்பார்த்ததும் இதுதான். இவ்வளவு பேருக்கு எதுக்க நீங்க ஒத்துக்கிட்டாப் பலே நானும் சொல்லிப்புடறேன். எங்க பங்காருவுக்கு ஏத்த மாப்பிள்ளைதான் நீங்க... எப்ப சௌகரியமோ அப்பத் தேதியை வைச்சுக்கலாம். சரிதானே?"

குப்புசாமி இதற்குப் பதில் சொல்லவில்லை. அப்பாவுக்கு எதிரே வந்து அவரை வணங்கி எழுந்தான். எல்லாரும் கலியாணப் பேச் சைக் கேட்டு ஆனந்தமாய் முணு முணுத் தார்கள். ரமணிக்கு மட்டும் மெத்தென்ற புல் தரையில் கால் வைக்கப் போய், நெருஞ்சி முள்ளைக் குத்திக் கொண்டதுபோல் இருந்தது. இருந்தாலும் அவன் எழுந்து வந்து குப்பு சாமியின் கையைப் பிடித்துக்கொண்டான்.

"சார். அப்பாவ் ரொம்பப் பெரிய மனிதர். நீங்களும் அதே போலத்தான். ரொம்பப் பொருத்தம். அதிலே துளியும் சந்தேகமில்லே."

"எல்லாம் சரி; நடந்தது என்ன? எங் களுக்கு ஒன்றும் விவரமா விளங்கலியே!" என்றார் வீரப்பக் கோனார்.

"அதுக்கென்ன? வீட்டுக்குப் போனதும், தானே தெரிஞ்சுக்குவீங்க. வீட்டிலே சம்சா ரத்தின் வாயாலே உங்களுக்கு விபரீதமாச் சேதி எட்டறதுக்கு முந்தி, பெருமாள் புண்ணியத்திலே இது சுபமா முடிஞ்சிட்டுது. இதுக்கு முக்கியமான காரணம் யாரு தெரி யுமா? ஏ — சம்பா! கொஞ்சம் இப்படி வா. சொல்றேன்! எல்லாரும் உன்னைக் கொஞ் சம் பார்க்கட்டும். நம்ப ரமணியும் பார்த் துக்கட்டும்!" என்றார் அப்பாவ்.

ஒரே ஒரு நெருஞ்சி முள் ரமணிக்கும் தெரி யாமல் ரமணியின் மடியில் வந்து விழுந்தது.

சம்பா ஒரு மஞ்சள் பூ; ரமணி அந்தச் செடியின் முள்!

# கேள்வியும் விடையும்

குறுந்தொகையில் ஒரு பாடல். இன்பச் சுவை நிறைந்தது. எப்படியோ கல்லூரிப் பாடத் திட்டத்தில் புகுந்து விட்டது. அந்தச் செய்யுளுக்குப் பொருள் சொல்லும் நாள் வந்ததும் பேராசிரியருக்கு யோசனையாகப் போய் விட்டது, பொருள் சொல்லலாமா, வேண்டாமா என்று!

ஒரு முடிவுக்கு வந்த அவர் "இந்தச் செய் யுள் சர்வகலாசாலைப் பரீட்சைக்கு வராது. எனவே, கவலைப்படாதீர்கள்! மேலே படிப் போம்!" என்று சொல்லிவிட்டார்.

சர்வகலாசாலைப் பரீட்சை வந்தது. வினாத் தாளைப் பார்த்த பேராசிரியருக்குப் பேர திர்ச்சியாகிவிட்டது. எந்தச் செய்யுள் வராது என்று அவர் மாணவர்களுக்குச் சொல்லி யிருந்தாரோ அதே செய்யுளைப் பரீட்சையில் கேட்டிருந்ததுதான் அதற்குக் காரணம்.

தன்மானம் போய் விட்டதே என்ற கவலையுடன் வீட் டுக்குப் போய்விட்டார். மாண வர்களின் முகத்தில் விழிக்கவே அவருக்கு என்னவோபோல் இருந் தது. வீட்டுக்குச் சென்று தம் அறைக்குள் புகுந்து கொண்டவர் வெளியே தலைகாட்டவில்லை.

பரீட்சை எழுதி முடித்த மாண வர்களோ நேராக அவர் வீட்டுக் குப் படையெடுத்து விட்டனர். மாணவர்கள் தம்மைத்தேடி வந்து இருப்பதைக் கேட்ட அவர் மரியா தைக்கு எழுந்து வெளியேவந்தார்.



"என் சார், வாட்டமாக இருக்கிறீர்கள்?" என்று மாணவன் ஒருவன் கேட்டான்.

"ஒன்றுமில்லை. எந்தச் செய்யுளைக் கேட்க மாட்டார்கள் என்று கூறிச் சொல்லிக் கொடுக்காமல் விட்டேனோ, அதையே கேட்டு விட்டானே பாவி! என்னால் உங்களுக்கு மதிப் பெண் குறைந்துவிட்டதல்லவா?" எப்படியோ பேசி முடித்தார் பேராசிரியர்.

"அதற்காகவா சார் இப்படி வாட்டமாக இருக்கிறீர்கள்? நீங்கள் சொல்லித் தராமல் விட்ட செய்யுளில் ஏதோ விசேஷமிருக் கிறது என்று தீர்மானித்து நாங்களாகவே படித்துப் புரிந்துகொண்டு விட்டோம் சார்! ஒருவராவது அந்தக் கேள்விக்கு விடை யளிக்கத் தவறவில்லை. நீங்கள் சொல்லித் தராமலே சொல்லித் தந்துவிட்ட அந்தச் செய்யுளைப் புரிந்து கொள்வதில் நாங்கள் சிறிதும் தவறிழைக்க வில்லை!" என்றனர் மாணவர்கள் அனைவரும் ஏகோபித்தாற்போல்.

தமது மாணவர்களின் அறிவுக் கூர்மையை மனத்துள் மெச்சிக் கொண்டாலும் கும்பகோணம் கல்லூரித் தமிழ்ப் பேராசிரிய ராக இருந்த மகா மகோபாத்தி யாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ.வே. சாமிநாதையர் அவர் களுக்குப் பல்கலைக் கழகத்தினர் தம் நம்பிக்கையில் தண்ணீரை ஊற்றியது பிடிக்கவில்லை.



# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் முப்பத்தொன்று

## இலட்சியச் சதுரங்கம்!

மூத்தரையர் தம்மீது சாட்டிய பெருங் குற்றச்சாட்டுகளைக் கூடப் பொருட்படுத்தாமல், அவருடைய அந்தக் கோபப் பேச்சுக்கிடையே பரமேசுவரவர்மனின் இப்போதைய நிலை பற்றி வெளிப்பட்ட விவரத்தைக்கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சியுற்றவராய் நிமிர்ந்து, ''என்ன சொன்னீர்கள், அன்பரே! நம் பல்லவ மன்னர் விடுதலைப் போர்க் குரல் எழுப்பி விட்டாரா? சளுக்கியரை எதிர்க்கத் தம் குடி மக்களைத் திரண்டெழும்படி கட்டளையிட்டு விட்டாரா?'' என்று ஆவல் மோதவிடும் குரலில் அவசரமாகக் கேட்டார் பரவாதிமல்லர்.

கோபாவேசக் கொந்தளிப்புடன் நின்று கொண்டிருந்த மூத்தரையர் அவரைக் கூர்ந்து பார்த்து, ''கலைஞரே! இன்னமும் நீங்கள் என்னை ஏமாற்றும் முயற்சியிலேயே ஈடுபடுவதாகத் தெரிகிறது! அம்மாதிரி முயற்சி எதுவும் இனிமேல் என்னிடம் பலிக்காது என்ற முடிவுடன் தயவுசெய்து இங்கிருந்து எழுந்து போய் விடுமாறு உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்!'' என்று உள்ளார்ந்த சீறலுடன் கரகரத்தார்.

உடல் குன்றித் தலைகுனிந்த பரவாதிமல்லரின் முகம் அவமானத்தால் வெளிறிச் சிறுத்தது. வெண் கவரி போன்ற தம் நீண்ட தாடியை மடித்துக் கடித்தவாறு சில விநாடி மௌனமாயிருந்த அவர் திடுமெனத் தலைதூக்கி, ''சந்திரலேகைச் சிற்றரசரே! உங்களுக்கு ஒரு விஷயத்தை நினைவுபடுத்த விரும்புகிறேன். என்னையோ பழையாறைச் சோழரையோ நல்லவர்களாக்கிக் கொள்ளும் பொருட்டு உங்களைத் தேடி நான் வந்ததாக நீங்கள் சொல்வது முற்றிலும் தவறு. நாம் இருவரும் இங்கே அசந்தர்ப்பமாகத்தான் சந்தித்துக் கொண்டோம். அதை மறந்து விட்டுப் பேசுகிறீர்கள்'' என்று உள்ளடங்கிக் குமுறும் சினத்துடன் படபடத்தார்.

மூத்தரையர் இதைக் கேட்டு அலட்சியமாக நகைத்தார்: ''வெள்ளத்தில் மூழ்கப் போகிறவன் துரும்பைத் தோணியாக்கிக் கொள்ள முயல்வது போன்ற பேச்சு இது. இன்று நீங்கள் இவ்விடத்திலே என்னைப் பார்த்திராவிட்டால், நாளை வேறு எங்கேனும் சந்தித்து இதே விவரங்களைத் தான் சொல்லியிருப்பீர்கள். ஏனென்றால், உங்கள் அருயிர்க் கூட்டாளியான பழையாறைச் சோழரின் கட்டளை அது என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.''

''நிலைமையை உணராதவர்களும், நுனிப் புல் மேய்கிறவர்களும் இப்படித்தான் எதையும் சீர்தூக்கிப் பாராமல் எடுத்தெறிந்து பேசி விடுவார்கள்!.... நண்பரே! நீங்கள் சொல்வதுபோல் இன்று நான் உங்களைச் சந்தித்திராவிட்டால், நாளை அல்லது மறு நாள் — அல்லது இன்னும் சில தினங்களில்—வேறொருவர் வந்து இதே விவரங்களைச் சாங்கோபாங்கமாகத் தெரிவித்திருப்பார்!''

''ஓ..... இந்தச் சாமர்த்தியமான பொய்ப் பிரசாரத்துக்குச் சேதியக் கலைஞரைத் தவிர வேறு சிலரையும் தயார்ப்படுத்தி வைத்திருக்கிறாரோ பழையாறைச் சோழர்?''

''சந்திரலேகைச் சிற்றரசரின் அன்புக்கும், நம்பிக்கைக்கும் உரியவரான பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரைத் தமக்குச் சாதகமாகப் பேச வைக்கப் பழையாறைச் சோழரால் இயலாது என்றே நினைக்கிறேன்!''

இதைக் கேட்டுச் சட்டென்று திரும்பிய மூத்தரையர், ''என்ன! கோவிந்தவர்மரா?'' என்றார் தம்மை மீறிய துடிப்புடன்.

''ஆமாம், அன்பரே! பாண்டிய மன்னரிடம் படையுதவி பெற்று வரப் பரமேசுவரவர்மரின் கைச் சாத்தைத் தகடோலை செய்து தாங்கள் கொடுத்தனுப்பிய ஓலையுடன் மதுரைக்குச் சென்றிருக்கும் இளவரசர் கோவிந்தவர்மர் தான் தங்களிடம் வந்து இவ்விவரங்களைச் சொல்ல நேரிட்டிருக்கும் என்கிறேன்!'' — மகிழ்ச்சியும் மனவேதனையும் கலவையிட்ட குரலில் இவ்வாறு மொழிந்தார் பரவாதிமல்லர்.

முறுக்கேறி நின்ற மூத்தரையர் திடீரெனத் தளர்ச்சியுற்றவராய்த் திருதிருவென விழித்துப் பார்த்து, ''கலைஞர் சொல்வதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லையே!'' என்று குழறினார்.

''அதாவது, பழையாறைச்

ஜெகசிற்பியன்



சோழர் பல்லவருக்கு எதிராகச் சளுக்கியருடன் சேர்ந்த உண்மைக் காரணங்களையும் அவர் தம் உயிரைப் பணயம் வைத்து ஆற்றிய மகத்தான காரியங்களையும், கோவிந்த வர்மரே வந்து உங்களிடம் சொல்லி விருப்பார் என்கிறேன், நண்பரே! ஆனால் பல்லவ இளவரசர் இப்போதைக்கு உங்களைச் சந்திக்க இயலாத நிலையில் இருப்பதாலும், அவரைச் சந்தித்து உண்மைகளை அறிந்து கொள்ளுமுன் நீங்கள் அவசரப்பட்டு, அருமையாக உருவாகி வரும் சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் கெடுத்துக் குழறுபடியாக்கி விடுவீர்களோ என்பதாலும்தான் நானே அந்த விவரங்களையெல்லாம் தெரிவிக்கத் துணிந்தேன்.''

''பல்லவ இளவரசர் என்னை ஏன் சந்திக்க இயலாத நிலையில் இருக்கிறார் என்கிறீர்கள் கலைஞரே? அவருடைய வருகையை நான் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேனே!''

இளநகை புரிந்த பராவாதிமல்லர் ஏகத்தாளக் குரலில் கேட்டார்: ''பாண்டியருக்கும் சளுக்கியருக்கும் நெல்வேலி என்னும் இடத்தில் போர் மூண்டு விட்ட சேதியை நீங்கள் அறிவீர்களா, நண்பரே?''

''ஆபத்துதவி இளங்காரிக்குடையானின் மூலம் நேற்றுத்தான் எனக்கு அந்த விவரம் தெரிய வந்தது.''



''ஆமாம், நண்பரே! அந்த நெல்வேலிப் போர்க்களத்தில் பல்லவ நாட்டின் விடுதலைக்காகப் பாண்டியருக்குத் துணை நின்று சளுக்கியப் படை வீரர்களின் தலைகளை உருட்டிப் பந்தாடிக் கொண்டிருக்கிறார் நம் இளவரசர் கோவிந்த வர்மர்! அதனால் தான் அவர் தங்களை வந்து சந்திக்க நாளாகும் என்றேன்!''

அளவுக்கு மீறிய வியப்பால் அதிர்ச்சியுற்று ஆட்டம் கண்ட முத்தரையர், ''அப்படியா?'' என்று கண்ணையும் வாயையும் அகலத் திறந்தார். பிறகு சட்டென்று நிமிர்ந்து, ''படையுதவி பெற்று வரப் போன பல்லவ இளவரசரைப் பாண்டிய மன்னர் தம் படைத் தளபதியாக்கிக் கொண்டு விட்டாரா என்ன?'' என்று ஆத்திரத்துடன் விளித்தார்.

பராவாதிமல்லரின் முகத்தில் ஓர் ஏளனச் சிரிப்பு இழையோடியது. ''பாண்டிய மன்னரிடம் படையுதவி கோரிய தாங்கள் அந்த எவ்வழியாகக் கொண்டு வந்து, எப்படிப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறீர்கள் நண்பரே?''

''எங்களுக்குத் தேவையான போது பாண்டிய மன்னர் படை உதவி அளிப்பார் என்பதற்கு வாக்குறுதி மட்டுமே பெற்று வரும்படி பல்லவ இளவரசனை அனுப்பி வைத்தேன்.''

''அந்த நிலைமை அடியோடு மாறி விட்டது. சளுக்கியரை எதிர்த்துப் போரிட வேண்டிய கட்டாய நிலை இப்போது பாண்டியருக்கே ஏற்பட்டு விட்டது. எனினும், தமது நாட்டின் வட எல்லையைக் காத்துக் கொள்வதோடு அந்தப் போரை நிறுத்தி விடுவது என்பது பாண்டிய மன்னரின் நோக்கம் அல்ல. பல்லவ நாட்டின் மண்ணிலிருந்தும் சளுக்கியரை விரட்டியடிக்க வேண்டும் என்று அவர் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார். எனவேதான் படையுதவி கோரப் போன பல்லவ இளவரசரைப் போர் முனைக்குத் தம்மோடு அழைத்துச் சென்று விட்டிருக்கிறார். நெல்வேலிப் போர்க்களத்தின் கிழக்கு முனையில் இப்போது சளுக்கியரைக் கதி கலங்கச் செய்து கொண்டிருப்பது பாண்டியப் படைகள் அல்ல; பழையாறைச் சோழரின் வீரம் செறிந்த சோழியப் படைகளே. அந்தப் படைகளைத்தான் நமது பல்லவ இளவரசர் தலைமை தாங்கி நடத்திக்



பானிபத் போரைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

இவ்வினாவுக்கு ஹிந்தி மொழி பேசும் மாணவன் ஒருவன் எழுதிய விடை வருமாறு:

பானிபத் என்பது ஆசியும் உலகத்தில் இருக்கும் ஓர் இடம். இரு ஆட்சியாளருக்கிடையே ஏற்பட்ட கருத்து வேற்றுமை காரணமாகப் பெரும் போர் தொடங்கியது. இரு தரப்பினரும் பெரிய பெரிய படைகளை அங்கு கொண்டு குவித்துக் கொண்டனர். போர் தொடங்கியது. மூன்று நாட்கள் இடைவிடாமல் நடந்தது. இயற்கையினாலேயே அந்தக் குரூரத்தைக் காணச் சகிக்கவில்லை. புயலையும், பெரு மழையையும் ஏவி விட்டது. புயலுக்கும் பெரு மழைக்கும் ஈடு கொடுக்க முடியாமற் போகவே இரு தரப்புப் படைகளும் வெற்றிகரமாய்ப் பின்வாங்கி ஓடின. இருதரப்புப் படைகளின் மீதும் மழை வெற்றிக் கொடி நாட்டவே அந்த இடத்துக்குப் 'பானிபத்' (மழை பெய்யுமிடம்) என்ற பெயர் நிலைபெற்றது.

கொண்டிருக்கிறார். நெல்வேலியிலிருந்து சளுக்கியர்கள் பின்வாங்கினாலும் அதோடு அவர்களை விட்டு விடாமல் பல்லவ நாட்டின் வட எல்லைக்கு அப்பால் விரட்டியடிக்கும் வரையில் அந்தப் போரைத் தொடர்ந்து நடத்தத் திட்டமிட்டிருக்கிறார் பாண்டிய மன்னர். அப்போது சோழியப் படைகள் மட்டுமல்லாது பாண்டியப் படைகளும் நமது இளவரசர் கோவிந்த வர்மரின் தலைமையில் செயல்பட ஆரம்பிக்கும். இதற்குக் காரணம் என்னவென்றால், பல்லவ நாட்டின் விடுதலைப் போரைப் பாண்டிய மன்னரே தலைமை தாங்கி நடத்த முற்பட்டால் நமக்குள் பல விபரீத சந்தேகங்கள் எழலாம் என்பதாலேயே அவர் இத்தகைய ஓர் ஏற்பாட்டைச் செய்திருக்கிறார். இவ்வளவுக்கும் மூலப் பிதா யார் தெரியுமா, நண்பரே? உங்கள் கண்ணுக்குப் பச்சைத் துரோகியாகத் தோற்றம் அளிக்கும் பழையாறைச் சோழர்தான்!'' — உணர்ச்சிக் கலவையிட்ட குரலில் இவ்வாறு கூறினார் பரவாதிமல்லர்.

மரமரத்து நின்று கொண்டிருந்த முத்தரையரின் முகத்தில் இன்னமும் சிறிதளவு சந்தேகக் கறை படர்ந்தே காணப்பட்டது. ''கவிஞர் சொன்ன விவரங்களைக் கவனமாகக் கேட்டேன். ஆனால்....'' என்று தயங்கி இழுத்தார்.

''நான் கூறிய விவரங்களோடு பழையாறைச் சோழரைச் சம்பந்தப்படுத்துவதுதான் புரியவில்லை என்கிறீர்களா, நண்பரே? சரி; புரியும்படி சொல்லுகிறேன், கேளுங்கள்!'' என்று மென்னகை புரிந்த சேதியக் கவிஞர் மேலும் கூறினார்: ''பல்லவ நாட்டைக் கைப்பற்றிக் கொண்ட சளுக்கியப் பகைவரை அகற்றித் தம் உரிமையை நிலை நாட்ட வேண்டும் என்னும் எண்ணமே இல்லாமலிருந்த பரமேசுவர வர்மரின் பொறுப்பற்ற போக்கையும், அவரது உத்தரவு ஒன்றையே பிரதானமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த தங்கள் பலவீனத்தையும் கூர்ந்து கவனித்து வந்த பழையாறைச் சோழர், அந்த நிலைமை அப்படியே நீண்டு கொண்டு போனால் பல்லவ நாட்டுக்கு இனி விமோசனமே கிடைக்காது என்றும், அது சளுக்கியரிடம் தன் முழுச் சுதந்திரத்தையும் இழந்து நிரந்தரமாக அடிமைப்பட்டு விடும் என்றும் தீர்மானித்தவராய், அதற்கு ஒரு மாற்று வழி காணவே பல்லவருக்கு எதிராகச் சளுக்கியருடன் சேர்ந்து விட்டது போன்ற ஒரு பயங்கரத் தந்திரத்தைக் கடைப்பிடிக்கத் துணிந்தார் என்று ஏற்கனவே சொன்னேன். பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்த கோவிந்த வர்மரை மண்டபப்பட்டுக் குகைக் கோயிலில் சந்தித்து, ஆந்திர இளவரசியின் சிவிகையிலிருந்து அவர் கவர்ந்து வந்த பட்டோலையைப் படித்துப் பார்த்த போதுதான் பழையாறைச் சோழரின் மனத்தில் அத்தகையதோர் எண்ணம் உருவாயிற்று. சளுக்கிய விக்கிரமாதித்தன் தனது ஆட்சியதிகாரத்தை இங்கே நிலைநாட்டிக் கொள்வதற்காகச் சமண சமயத்தைப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறான் என்பதையும், அதற்காகவே ஆந்திர இளவரசி உத்தமசீலியை இந்நாட்டுக்கு வரவழைத்திருக்கிறான் என்பதையும் அறிந்தே அவர் அந்த முடிவுக்கு வந்தார். அதனால்தான் அன்றைய தினம் அவர் உங்களுடன் பரமேசுவர வர்மரைச் சந்திக்கப் பெருவளநல்லூருக்கு வரவும் மறுத்தார். அப்படி மறுத்து விட்டுப் போனவர் தமது பழையாறை அரண்மனைக்கு அன்று போகவில்லை; நேரே பல்லவபுரம் போய், சளுக்கியத் தளபதி வில்வேலியைச் சந்தித்திருக்கிறார்.....''

"உங்கள் நண்பரின் நோக்கத்தைப் பற்றிய விளக்கம் இருக்கட்டும், கவிஞரே! அவர் சளுக்கியருடன் சேர்ந்து எங்களுக்குச் சாதகமாக - என்ன செய்தார் என்பதை முதலில் சொல்லுங்கள்....!"

"அதைத்தான் சொல்ல வருகிறேன் அன்பரே! பல்லவ நாட்டிலுள்ள குறுநில மன்னர்களின் ஒத்துழைப்பு கிடைத்தால் தமது ஆட்சியதிகாரத்தை இங்கே எளிதில் நிலைநாட்டி விடலாம் என்ற நைப்பாசையுடன் தளபதி வில்வேலி ஏற்கனவே பல முயற்சிகள் செய்து தோல்வி கண்டிருந்தான். நமது சிற்றரசர்களில் யாருமே அந்தத் துரோகச்செயலுக்கு உடன்படவும், அவனது கெடுபிடிகளுக்குப் பணிந்து போகவும் மறுத்து வந்தனர். இதனால் அவர்களைக் கண்காணித்து அடக்கி வைப்பதே அவனுக்குப் பெரும்பாடாக இருந்தது. எந்த விநாடியும் அவர்கள் கட்டு மீறிக் கலகக் கொடியை உயர்த்தி விடலாம் என்ற அச்சத்துடனேயே அவன் ஒவ்வொரு நாளையும் கழித்து வந்தான். இந்நிலையில் பழையாறைச் சோழர் தாமே முன் வந்து சளுக்கிய மன்னனுக்கு ஒத்துழைப்பு நல்குவதாகச் சொன்னதைக் கேட்டதும் வில்வேலிக்கு அது ஒரு பெரிய வரப்பிரசாதம் போல் ஆகி விட்டது. ஆயினும் அவரை அவன் உடனே நம்பி விட்டான் என்றும் சொல்லிவிட முடியாது. அவனுடைய நம்பிக்கையைப் பெறப் பழையாறைச் சோழர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனந்தம். அம்முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றதும் அவனை அவர் அடிக்கடி போய்ச் சந்தித்து, சளுக்கிய மன்னனின் ஆட்சியதிகாரத்தை நிரந்தரமாக்குவதற்கான புதுப் புது யோசனைகள் சொல்வதுபோல் சொல்லி, அதற்காக அவர்கள் போட்டிருக்கும் திட்டங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக உசாவி அறியலானார். அவற்றில் அவருக்கு முக்கியமாகப் பட்டது, சமண சமயத்தைப் பயன்படுத்திக் கொள்ளப் போட்டிருந்த திட்டம்தான். ஏனென்றால், சக்தி வாய்ந்த சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவரையே தமது அந்த அரசியல் ஆதிக்கத் திட்டத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள அவர்கள் வஞ்சகமாக அழைப்பு விடுத்திருந்தார்கள். அத்துடன், இங்கே சமண சமயத்தை வலுவாக்குவதற்காக ஆந்திர நாட்டின் பொக்கிஷம் முழுவதையும் திறந்து கொட்டி விடுவது என்ற நோக்கத்துடன் அந்நாட்டு இளவரசி உதிதமதி வேறு வந்து காத்திருந்தாள். எனவே, 'சமண சமய வளர்ச்சிப் பணி' என்னும் புனிதமான போர்வைக்குள் ஒரு பெரிய அரசியல் ஆதிக்கச் சூழ்ச்சி நாடகத்தை நடத்தி அதிலே அவர்கள் வெற்றியும் அடைந்து விடுவார்கள் என்று தோன்றியது. அந்தத் திட்டத்தை முறியடிப்பதே தாம் செய்ய வேண்டிய முதல் பணி என்று தீர்மானித்துக் கொண்ட பழையாறைச் சோழர், முதலில் அந்தத் திட்டத்தை ஊக்குவிப்பது போலவும் அதற்குத் தாம் முழு ஆதரவு தருவது போலவும் நடித்தார்.

"தாமே சமண சமயத்தைச் சார்ந்து விடுவதாகவும் வாக்களித்தார். ஆனால் அந்தத் திட்டம் வெற்றி பெறாது என்று தாம் அஞ்சுவதாகக் கூறி அதற்கான சில பொய்க் காரணங்களைச் சாமர்த்தியமாக எடுத்துக் காட்டினார். அரசியல் விவேகமற்ற வெறும் வீரனான வில்வேலி அந்தப் பொய்க் கூற்றுக்களைச் சிறிதே நம்பத் தலைப்பட்டான். அதற்குத் தோதாக, இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவரும் அவனுக்குச் சமயத்தின் பெயரால் ஆதரவு தர மறுத்து விட்டார். இதுதான் தருணமென்று, அவனுடைய சிந்தனையை ஒரு புதிய திசையில் திருப்பி விட

வாளுர் பழையாறைச் சோழர். அதா வது, பல்லவ நாட்டில் சளுக்கிய விக்கிர மாதித்தனின் ஆதிக்க ஆட்சி வேரூன்ற வேண்டுமாளுல், அண்டை நாடான பாண்டி நாட்டின் மேல் ஒரு வலுத் தாக்குதலை நடத்த வேண்டும் என்றும், அந்த வலுத் தாக்குதல் போரில் வெற்றி கிட்டிளுலும் கிட்டாமற் போளுலும், இந்த நோக்கம் நிறைவேறி விடும் என்றும், இதுதான் சரியான 'ராஜ தந்திரம் என்றும் கூறி அவனுடைய மூளையை மழுக்கி அதில் ஆசைக் கனலைத் தூண்டி விட்டார். பல்லவ நாட்டின் வீழ்ச்சியால் பாண்டிய நாடு பயந்து நடுங்கிக் கொண்டிருக்கிறது என்றும், அதனிடம் போதிய படை பலம் இல்லை என்றும், அதன் மன்னன் கிழடு தட்டிய ஒரு வறட்டு வேதாந்தி என்றும் பல படியாகக் கூறித் தம் சதியாலோச னைக்கு வலுவேற்றிளுர். போர் வெறி கொண்ட விக்கிரமாதித்தனுக்கு அந்த யோசனை மிகவும் கவர்ச்சிகரமாகப் பட்டு விட் டது. அதிலே மயங்கிய அவன், ஆந்திர இளவரசியைச் சந்திக்கும் பொருட்டு உறையூரிலிருந்து பல்லவபுரத்துக்கு வந்த சளுக்கிய விக்கிரமாதித்தனிடம் அந்த யோசனையை உற்சாகத்துடன் சொல்லியிருக்கிறுன். மண்ணாசை கொண்ட விக்கிரமாதித்தனும் முன்பின் யோசியாமல் அதை உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொண்டு விட்டான். சமண சமயத்தைப் பயன்படுத்தித் தன் ஆதிக்க ஆட்சியை நிலைநாட்டிக் கொள்வதற்காக அவன் போட்டிருந்த திட்டம் உடனே கைவிடப்பட்டது. பாண்டி நாட்டின் மேல் படையெடுப்பதற்கான ஆயத்தம் வெகு தீவிரமாக மேற்கொள்ளப்பட்டு, இறுதியில் அந்தப் போரும் இப்போது ஆரம்பமாகி விட்டது....''

''ஓ!.... பல்லவ நாட்டுக்குச் செய்த துரோகம் போதாதென்று, பாண்டிய நாட்டையும் காட்டிக் கொடுத்து அழிக் கச் சொல்லிக் கொடுத்தவர் பழை யாறைச் சோழர்தானே?'' என்று குரோதம் வெடிக்கக் கூவிக் கேட்டார் மூத்தரையர்.

## அத்தியாயம் முப்பத்திரண்டு

# அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி

''அவசரப்படாதீர்கள், அன்பரே!'' என்று அமைதியாகக் கூறிப் புன்முறுவல் பூத்த பரவாதிமல்லர், மேலும் சொன் ளுர்: ''சளுக்கியரைப் பாண்டி நாட் டின்மேல் படையெடுக்கத் தூண்டி விட்டதோடு பழையாறைச் சோழர் சும்மாயிருந்து விடவில்லை. நேரே மது ரைக்குச் சென்று தம் தமக்கையின் கணவரான பாண்டிய மன்னர் நெடு மாறரைச் சந்தித்துத் தமது திட்டங் களை விளக்கிக் கூறிச் சளுக்கியருடன் ஒரு பெரும் போர் நடத்தத் தயாராகும் படி எச்சரித்திருக்கிருர். பல்லவ நாட் டின் விடுதலைக்காகப் பாண்டிய நாட் டைப் போரில் உட்படுத்த நெடுமாறர் முதலில் விரும்பவில்லை. இன்னும் சொல்லப் போளுல், கடல் போன்ற படை பலம் கொண்ட சளுக்கிய விக்கிர மாதித்தனை எதிர்த்துப் போரிட அவர் அச்சமே காட்டிளுர். ஆளுல், பழை யாறைச் சோழர் அவரை விடவில்லை. இந்தச் சமயம் சளுக்கிய விக்கிரமாதித் தனை எதிர்க்காமல் விட்டு விட்டால் பாண்டிய நாடும் அவனுக்கு அடிமைப் பட்டுப் போவதல்லாமல், வீழ்ந்துபட்ட சமண சமயம் புத்துயிர் பெற்று எழுந்து பல்லவ நாட்டிலும் பாண்டிய நாட்டி லும் ஆழமாக வேர் விட்டுப் பிறகு அசைக்க முடியாதவாறு படர்ந்துவிடும் என்று தமது கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பயமுறுத்தியிருக்கிருர். சைவ சமயத்துக்காகத் தம்மையே அர்ப் பணித்துக்கொண்டவரான நெடுமாறர் இதைக் கேட்டபின்தான் கொதித்து எழுந்து சளுக்கியருடன் ஜீவ மரணப் போர் நடத்தத் துணிந்தார்....''

''ஆமாம்! சிவனே என்று கிடந்த பாண்டிய மன்னரை எதற்காக இந்தப் பயங்கரப் போரில் இழுத்து விட்டாராம், பழையாறைச் சோழர்?''

''இதிலேதான் அவருடைய மகத் தான இலட்சியத்தின் மூலக் கருவே அடங்கியிருக்கிறது, நண்பரே! பல்லவ நாட்டில் ஆதிக்க ஆட்சியை நிலைநாட் டிக் கொள்வதில் தீவிர கவனம் செலுத்தி வந்த சளுக்கியரை ஏதேனும் ஒரு போரில் இழுத்து விட்டால்தான் இங்கே நமது விடுதலைப் போருக்கான ஆயத்தம் செய்ய முடியும் என்பது அவர் எண்ணம். எதிரியின் கவனத்தை வேறு திசை யில் திருப்பி வைத்து எதிர்பாராதவித மாகப் பின்னுலிருந்து ஒரு சிறிய தாக்கு தல் நடத்திளுலும் போதும், அவனு டைய பலத்தை எளிதில் சிதறடித்து விடலாம் என்பது சாதாரண அரசி யல் தந்திரம்தான் என்ருலும் அதைச் சாதிப்பது மட்டும் அத்தனை எளிதல்ல; ஆளுல் பழையாறைச் சோழர் அதைத் தான் சாதிக்க விரும்பிளுர் — பாதி யளவு சாதித்தும் விட்டார்.''

> "நமக்கு மேலாகக் கடவுள் என்று ஒருவர் உண்டு என அச்சம்கொள்வதே மதத்தின் தொடக்கம்; அந்தக் கடவுளிடம் அன்பு கொள்வதே மதத்தின் முடிவு." — ஸ்வாமி விவேகானந்தர்

முத்தரையர் இந்தக் கூற்றை ஒப்புக் கொள்ள மறுப்பவர்போல் வேகமாகத் தலையாட்டினார். "உண்மையில் பழையாறைச் சோழரின் நோக்கம் அதுவானால், இந்தத் தந்திரத் திட்டத்தை எங்களிடம் கூறி எங்கள் ஒத்துழைப்பையும் உதவியையும் பெற்று இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாமே? இப்படிக்கின்றி எங்களை அவர் விரோதித்துக் கொண்டு தனி மனிதராய் நின்று இதைச் சாதிக்க முனைவானேன்?"

"இதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு, நண்பரே!" என்றவாறு நிமிர்ந்தார் பரவாதிமல்லர்.

"அதாவது சளுக்கியரை எதிர்க்க இரகசியப் படை திரட்டும் முயற்சிக்குப் பரமேசுவரவர்மரின் உத்தரவு ஒன்றையே எதிர்பார்த்துக் கொண்டிருந்த என்னிடம் அந்தத் திட்டத்தை வெளியிட்டுப் பயனில்லை என்று அவர் நினைத்ததாக முதல் காரணத்தைச் சொல்லி முடிப்பீர்கள். சரி; இரண்டாவது காரணம் என்னவோ?"

"சளுக்கியருடன் சேர்ந்து அவர்களது ஆதிக்க ஆட்சிக்குரிய முயற்சியைத் தாம் தீவிரப்படுத்துவதாக நீங்கள் அறிய நேர்ந்தால், உங்களுடைய அந்த ஒரே வழி முயற்சியைக் கைவிட்டுவிட்டு, வேறு பயனுள்ள மார்க்கத்தில் கவனம் செலுத்துவீர்கள் என்று எண்ணியே பழையாறைச் சோழர் அவ்வாறு நடந்து கொண்டார். அதிசயிக்கத் தக்க விதமாக அவர் நினைத்தபடியேதான் நீங்களும் உங்கள் போக்கை மாற்றிக் கொண்டு விட்டீர்கள். அதாவது, சளுக்கியரை எதிர்த்துப் போரிடுவதற்காகப் பல்லவக் குடி மக்கள் ஓர் இரகசியப் படையணியில் சேர வேண்டும் என்று பரமேசுவரவர்மர் ஆணையிடுவதாகத் திருமுக ஓலையொன்றைத் தாங்களே எழுதிக்கொண்டு, அதிலே அவரது கைச் சாத்தைப் பெற முயன்று, அம்முயற்சியில் வெற்றி பெறாது போகவே விரக்தியடைந்து, அவ்விரக்தியில் பிறந்த ஆவேசத் துணிவினால் பல்லவ மன்னர் பாண்டியப் பேரரசரிடம் படையுதவி கோரியதாகப் பொய் ஓலை வரைந்து அதை இளவரசர் கோவிந்தவர்மரிடம் கொடுத்தனுப்பினீர்கள். இப்படி நீங்கள் செய்வீர்கள் என்று திட்டவட்டமாக எதிர்பார்த்தே பழையாறைச் சோழர் தமது சோழியப் படைகளை மிகவும் சாமர்த்தியமாக — பரம இரகசியமாக — பாண்டிய நாட்டின் தலைநகருக்கு முன்னதாகவே அனுப்பி வைத்திருந்தார். படையுதவி கோரிப் பல்லவ இளவரசர் வந்தால் அவரிடம் அந்தச் சோழியப் படைகளை ஒப்படைத்து விடும்படி பாண்டிய மன்னருக்குச் சொல்லியும் வைத்திருந்தார். அவருடைய அற்புதக் கணிப்பு அணுவளவும் பிசகவே இல்லை."

இதைக் கேட்டு வியப்பில் ஆழ்ந்த முத்தரையர் "அது சரி, கலைஞரே! என்னைப் பற்றி இத்தனை துல்லியமாகக் கணக்கிட்டு அறிந்து தீர்க்க தரிசனத்துடன் நடந்து கொண்ட அவர், கோவிந்தவர்மரை ஏன் அநாவசியமாகப் பகைத்துக் கொண்டார்?" என்று கேட்டார்.

"ஓ..... பழையாறைச் சோழர் தம் அருமை மகள் இளங்கோப்பிச்சியைச் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனுக்கு மணம் செய்து தருவதாக வாக்களித்தது ஏன் என்று கேட்கிறீர்களா? அதுவும் அவருடைய இலட்சியச் சதுராட்டத்தின் ஒரு பயங்கரப் பரிசோதனைதான் அன்பரே! நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட வேண்டிய இந்தத் தருணத்தில் பல்லவ இளவரசர் தம் காதல் விவகாரத்தில் சற்று அதிகப்படியாகக் கவனம் செலுத்துவதாகத் தோன்றியது அவருக்கு. அந்த நிலையை வளர விட்டால் விடுதலைப் போருக்கான தீவிரத்தை அது குறைத்து விடுவது மல்லாமல், வீரம் செறிந்த ஓர் இளம் சக்தி விரயமாகிவிடும் என்று அஞ்சியே, இளவரசர் தம் மகள்மீது கொண்ட காதலைச் சிறிது காலத்துக்கேனும் துண்டுபடுத்தி வைக்கத் தீர்மானித்தார். இந்தத் தீர்மானத்தினால் விளையக் கூடிய எதிர்பாராத விபரீதங்களையும் அவர் எண்ணிப் பார்க்காமல் இல்லை. ஆயினும் தமது மகத்தான இலட்சியச் சித்திக்குத் தம் அருமை மகளின் வாழ்க்கையைப் பலியிட அவர் தம்மைத் தாமே இடப்படுத்திக் கொண்டார். இது தவிர, சளுக்கியருடன் சம்பந்தி உறவு கொள்ளப் போவதாக அவர் பொய்யறிவிப்பு செய்ததற்கு இன்னொரு காரணம், அதன் மூலமாக அவர்களுடன் இன்னும் தாராளமாய் நெருங்கி அவர்களைக் கவிழ்க்கும் சதியில் ஈடுபடலாம் என்பதுதான்."

இதைக் கேட்டுப் பிரமித்த நிலையில் மரமரத்துப் போய் உட்கார்ந்திருந்தார் முத்தரையர்.

(தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.







## உங்கள் முக சருமத்திற்கு மினுமினுப்பும் இளமை வசீகரமும் அளிக்க எண்ணெய்ப்பசையற்ற உன்னத

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முக சருமத்தை பூப்போல மென்மையாகவும், மினுமினுப்பாகவும், மனோகரமாகவும் வைக்கிறது. முகத்திலுள்ள சிறு பருக்கள் போன்றவை நீங்க வழி செய்கின்றது. இதைத் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராக மணிக்கணக்கில் படிந்திருக்கும். உங்கள் முக வனப்புக்கு மெருகூட்ட பாண்ட்ஸ் ஃபேஸ் பவுடர் உபயோகியுங்கள். அது சீராகப்படிகிறது, முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்க உதவுகிறது.



**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்.**

[illegible]

சீஸ்ப்ரோ-பாண்டஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

